ஸ்ரீரஸ்து.

மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார்கள் அருளிச்செய்த

# முதலாயிரம்.

## மூன்றாவது பாகம்.

பெருமாள் திருமொழி, திருச்சந்த விருத்தம், திருமாலை, திருப்பள்ளி

யெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு,

## இவ்வாறு பிரபந்தங்களும்,

———0———

இவற்றிற்கு

பெரியவாச்சான்பிள்ளை, பெரியஜீயர் அருளிச்செய்த

# வ்யாக்யாநமும்

அந்த வ்யாக்யாநத்தை யனுசரித்தெழுதப்பட்ட

ப்ரதிபத வ்யாக்யாநமும்,

பல ப்ரதிகளுக்கிணங்க பண்டிதர்களால்

பரிசோதிக்கப்பட்டு

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய ஸஞ்ஜீவிநீ சபையாரால்

ஸ்ரீ ஸுதர்சன முத்ராக்ஷரசாலையில்

அச்சிடப்பட்டன.

——(*)——

காஞ்சீபுரம்.

1910

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பெரியாழ்வார் திருமொழிச் செய்யுளகராதி.

அ



ஆ



இ



உ

பெரியாழ்வார் திருமொழிச் செய்யுளகராதி



மணக்கால் நம்பிகள் அருளிச்செய்தது.
இருவிகற்ப நேரிசை வெண்பா.

மூ.—இன்னமுதமூட்டுகே னிங்கேவா பைங்கிளியே
தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள்— ¶ பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோனெங்கள்
குலசேகரனென்றே கூறு. க.

ப—ரை.— பை— பசுத்த நிறத்தையுடைய, கிளியே— வாராய் மடக்கிளியே!, இன் அமுதம்— போக்யமான அம்ர்தத்தை, ஊட்டுகேன்— உனக்குக் கொடுக்கிறேன்; இங்கே வா— என்னருகே வா; தென்— தென்திசைக்குத் திலகமாயுள்ள, அரங்கம்— திருவரங்கம் திருப்பதி விஷயமாக, பாடவல்ல— பாடுகையில் சதுரராய், சீர்— பாகவத பக்தியாகிற குணவிசேஷ பரிபூர்ணராய், பெருமாள்— 'பெருமாள்' என்ற நிரூபக நாமத்தை யுடையராய், பொன்- ஸ்பர்ஹணீயமாய், அம்- அழகியதான சிலை- சிலைபோன்ற புருவத்தை, சேர்- முகத்திலே சேர்ந்துடைய, நுதலியர்- ஸ்த்ரீகளுக்கு, வேள்- காமன்போல் ரஞ்ஜநீயராய், சேரலர்— சேரவம்சத்திலவர்களுக்கு, கோன்— நிர்வாஹகராய், எங்கள் குலம்— ப்ரபந்நரான எங்கள் குலத்துக்கு, சேகரன்— சிரோரத்நமாயிருந்துள்ள ஸ்ரீ குலசேகரப்பெருமாள், என்றே கூறு— என்கிற இந்தவாசகமொன்றையே சொல்லிப்போரு.

வ்யா. இன்னமுதமூட்டுகேன். "இன்னடிசிலொடுபாலமு தூட்டியெடுத்த வென் கோலக்கிளியை" என்னக்கடவதிறே. இங்கு * தேனும்பாலுமமுதுமாய திருமால் திருநாமத்தையிறே ஊட்டிவளர்த்தது; அதுதோன்ற ஆழ்வான் வலத்திருச்செவியிலே முன்பு ப்ரஸாதித்த த்வயத்தை மீளவும் ப்ரஸாதித்தருளிற்று. "இங்கேவா" என்று- திருநாமம் சொல் என்றத்தால் வடிவில் பிறந்த ஹர்ஷத்தைக் கண்டு வரவழைக்கிறது. பைங்கிளியே. பசுத்து மரகதம்போலேயிருக்கிற மடக்கிளியே. இத்தால் - "என்னுருயிர்க்காகுத்தன் நின்செய்யவாயொக்கும்வாயன்கண்ணன் கைகாலினன் நின்பசுஞ்சாம நிறத்தனன்" என்னும்படியான ரூபஸௌம்யத்தை சொல்லுகிறது. (க) * வாமஸௌந்தர்யவேதி யிறே. எதுக்காக வென்னை யழைக்கிறதென்ன; தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாள் பொன்னஞ் சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோனெங்கள் குலசேகரனென்றே கூறு என்கிறது. தென்னரங்கம் பாடவல்ல சீர்ப்பெருமாளாகையாவது - "இருளிரிய" "தேட்டருந் திறல்தேன்" "மெய்யில்வாழ்க்கை" என்கிற மூன்று திருமொழியிலும் பாடி, முடிவிலும் "யாவரும் வந்தடிவணங்க வரங்கநகர்த்துயின்றவனே" என்றும், மற்றும் திருமலை முதலாயிருக்கிற ஆராமங்களான திருப்பதிகளையும் "காகுத்தா கண்ணனே" என்றும் அர்ச்சாவதாரத்துக் கடியான அவதாரங்களையு மருளிச்செய்து தலைக்கட்டுகையாலும், அவர்தாம், * செருவிலேயரக்கர் கோனைச்செற்ற நஞ்சேவகனாரானகையாலும், * வெண்ணெயுண்ட வாயனானகையாலும், எல்லாம் திருவரங்கத் திருப்பதி விஷயமாகலாமிறே. * பொன்னஞ் சிலைசேர் நுதலியர் வேளாகையாவது - ஸ்ப்ருஹணீயமான வில்லுக்கு ஸத்ருசமான புருவத்தை முகத்திலே சேர்ந்துடைய ஸ்த்ரீகளுக்கு ரஞ்ஜநீயராயிருக்கிறவர். வேள் - காமன். (உ) "கந்தர்ப்பதுல்யமூர்த்திர்" "காமர்மானேய் நோக்கியர்க்கு" என்னக்கடவதிறே.

---

¶ "பொன்னின்" என்றும் பாடம் காண்கிறது.

(க) "பரமஸாம்யமுபைதி" (உ) "கந்தர்ப்ப இவமூர்த்திமாந்"

இந்தால் - ஜ்ஞாநத்துக்கு மேலான ஸ்வரூபதாந்தியை யுடையவர்களுக்கு தர்சநீயமாயிருக்குமவரென்றபடி. சேரலர்கோன். சேரவம்சத்திலவர்கட்கெல்லாம் ராஜாவென்கை. (க) "ராஜாதிராஜஸ்ஸர்வேஷாம்." கோன் - ராஜா. குடிக்கு நிர்வாஹகரென்றபடி. எங்கள்குலசேகரன். ப்ரபந்நகுலசேகரனென்கை. "இராமாநுச னெங்குலக்கொழுந்து" என்னுமாப்போலே. குலசேகரனென்றே கூறு. * நான்வளர்த்த சிறுகிளிப்பைதலே, இன்குரல்நீமிழற்றாதே, குலசேகரனென்றே கூறு, கூறினவாய்க்கு * அமுதமாய திருமால் திருநாமமான * இன்னமுதமூட்டுகேன்; ஆகையாலே குலசேகரனென்றே கூறு. (உ) "வக்தவ்யம் ஆசார்யவைபவம்" என்னக்கடவதிறே. ... ... ... க.

அ. ஆரங்கெட. இதில் - அவர் ஸ்ரீவைஷ்ணவர்கள் திறத்தில் பக்ஷபதித் திருக்கிறபடியைச் சொல்லுகிறது-

கட்டளைக்கலித்துறை.

மூ.—ஆரங்கெடப் பரனன்பர்கொள்ளாரென் றவர்களுக்கே
வாரங்கொடுகுடப்பாம்பிற் கையிட்டவன்மாற்றலரை
வீரங்கெடுத்தசெங்கோற் கொல்லிகாவலன் வில்லவர்கோன்
சேரன்குலசேகரன் முடிவேந்தர் சிகாமணியே. உ.

ப-ரை-. ஆரம் கெட— (மந்த்ரிகளுடைய க்ருத்ரிமத்தாலே) முக்தாஹாரம் காணாமல்போக, (விசாரித்ததில் 'ஸ்ரீவைஷ்ணவர்கள் களவுகண்டார்கள்' என்ற மந்த்ரிகள் பக்கல் சீறி,) பரன் அன்பர்— 'பரவஸ்துவிலே பக்திபண்ணுமவர்கள், கொள்ளார் என்று-பரவஸ்துவைக் களவுகொள்ளார்' என்று, அவர்களுக்கே வாரம்கொடு— அந்த ஸ்ரீவைஷ்ணவர்களுக்கே பக்ஷபதித்து, குடம் பாம்பில்— பாம்புக் குடத்தில், கை இட்டவன்— (பாம்பின் படத்திலேபட) கையையிட்டவர், மாற்றலரை— சத்ருக்களை, வீரம் கெடுத்த— பக்நவீர்யர்களாகப் பண்ணின, செங்கோல்— ஆஜ்ஞையை யுடையவராய், கொல்லி— 'கொல்லி' என்கிற நகரத்துக்கு, காவலன்— நிர்வாஹகராய், வில்லவர்— அவாந்தர ராஜர்களுக்கும், கோன்— அதிராஜராய், சேரன் குலம்— சேரனுடைய குலத்துக்கு, சேகரன்— சிரோபூஷண பூதராய், முடி— கிரீடதாரிகளான, வேந்தர்— அரசர்களுக்கு, சிகாமணி— சிகாமணியாயிருந்துள்ள ஸ்ரீ குலசேகரப் பெருமாள். [திருநாமத்தின் அநுஸந்தாநமாத்ரமே போக்யமாயிருக்கை.]

வ்யா. ஆரங்கெடவென்றுதொடங்கி. ஸ்ரீவைஷ்ணவர்கள் திறத்தில் அவர்க்குண்டான ப்ராவண்யத்தைக் குலைக்கவேணுமென்று மந்த்ரிகள் அவர் திருவாரத்தை யெடுத்து மறைவைத்து அவர்கள்பேரிலே ஆரோபிக்க; அத்தைக்கேட்டு பரனன்பர்கொள்ளாரென்று. பரவஸ்துவிலே பக்திபண்ணுமவர்கள் பரவஸ்துவைக் கொள்ளாரென்று ப்ரதிஜ்ஞைபண்ணி. பரனன்பரல்லாதவர்களிறே * பிறர் நன்பொருள் தன்னை நம்புவது. இப்படியாகையால் அவர்களுக்கே வாரங்கொடு. அவ்வளவன்றிக்கே அவர்கள் விஷயத்திலே பக்ஷபதித்து. "குடம்பார்வாய் கைநீட்டல்பார்த்தி" என்கிறபடியே பாம்புக்குடத்திலே அதின்படத்திலே

(க) "ராஜாதிராஜஸ்ஸர்வேஷாம்" (உ) "வக்தவ்யம் ஆசார்யவைபவம்"

படக் கைவிட்டு "அவர்கள் ஆபரணமெடார்கள்" என்று பணத்திலே கைவிட்டவர். அப்படி செய்தவர்தான் அல்பரோமவென்னில்; சத்ருக்களை நிரஸிக்கும் ஸார்வபௌமரென்கிறது மற்றலரைவீரங்கெடுத்த என்று. சத்ருக்கள் வீர்யத்தை நிர்வீர்யமாகப் பண்ணினவிது எத்தாலேயென்னில்; செங்கோல் - ஆஜ்ஞையாலே. "இருவாரிவிகொடச் செங்கோல் நடாவுதிர்." கோல்லிகாவலன். "குருகைகாவலன்" என்னுமாப்போலே. "கொல்லி" என்கிற நகரத்துக்கு நிர்வாஹகரென்கை. வில்லவர்கோன். அவாந்தராஜர்களுக்கும் அதிராஜரென்கை. அன்றிக்கே, "வில்லவர்கோன்" என்று - வில்லவரென்றுபேர். "கொல்லிகாவலன் கூடல்நாயகன் கோழிக்கோன் குலசேகரன்" என்றாரிறே. கோழி - உறையூர். உறையூருக்கும் இறையவரென்கிறது. அது சோழன்ராஜதாநி. சேரன்குலசேகரன். சேரனுடைய குலத்துக்கு சேகரன். குலசேகரர் - திருநாமம். இப்படி ராஜாதிராஜராகையாலே முடிவேந்தர்சிகாமணி என்கிறது. முடிவேந்தர் சிகாமணியாகையாவது - * மன்னர்குடந்தாழத் *துளங்கு நீண்முடியரசர், அடியிலே வணங்குகையாலே. "மாலடிமுடிமேல் கோலமாங்குலசேகரன்" என்று தமக்கிருக்குமாப்போலே தாமும் அவர்களுக்கு சிகாமணிபோலே சேகரிக்குமவராய் அலங்காரவஹராயிருக்கை. "பெருமணிவானவருச்சிவைத்த" (க) "ஈச்வராணாம் ஸ்ரீமத்கிரீடகடபீடிதபாதபீடம்" என்னக்கடவதிறே இவர் பெருமாளை. குலசேகரப்பெருமாளான விவர்பெருமையும் அப்படியே. இப்படி முடிவேந்தர் சிகாமணியான இவரும் ஒருவரேயென்னுதல்; இப்படி பெரியவேண்டப்பாட்டையுடையவரே குடப்பாம்பில் கைவிடுவரே! என்று ஈடுபாடாதல். இத்தால் - "அரங்கன் மெய்யடியார்கள் தம் எல்லையிலடிமைத்திறத்தினிலென்று மேவுமனத்தனாம்" என்றத்தை அநுஷ்டானபர்யவஸாயியாம்படி அநுஷ்டித்த ப்ரகாரத்தைச் சொல்லிற்றாய்த்து. ... உ,

குலசேகரப் பெருமாள் திருவடிகளே சரணம்.

---

பிள்ளைலோகஞ்ஜீயர் திருவடிகளே சரணம்.

—(*)—

---

(க) "ஈச்வராணாம் ஸ்ரீமத்கிரீடகடபீடிதபாதபீடம்."

வைதிவேசத்தையுடைய நுதலை, அரவு அணிந்து கொண்டிருக்கிற, பணங்கள் ஆயிரம்— ஆயிரம் பணங்களையும், ஆர்ந்த— பூர்ணமாக உடையனும், அரவு அரசு— 'நாகராஜன்' என்கிற இத்தால் உண்டான, பெருஞ்சோதி— மஹாதேஜஸ்ஸை யுடையனுன, அனந்தன் என்னும்— திரு அனந்தாழ்வானாகிற, அணி விளங்கும்— அழகுமிக்கு, உயர்— உயர்த்தியையுடைத்தாய், வெள்ளை— வெளுத்திருந்துள்ள, அணையை— திருப்படுக்கையை, மேவி— பொருந்தி, தென் நீர்— தெளிந்த நீரையுடைய, பொன்னி— காவேரியானது, திரை— அலைகளாகிற, கையால்— கைகளாலே, அடி வருட— திருவடிகளைத்தடவ, பள்ளிகொள்ளும்— திருக்கண்வளர்ந்தருளுகிற, கரு மணியை— நீலரத்னம் போன்றவனும், கோமளத்தை— ம்ருதுஸ்வபாவனுமான எம்பெருமானை, என் கண் இணைகள்— என் கண்களானவை, கண்டுகொண்டு— ஸேவித்து, களிக்கும் நாள்— ஆநந்திக்கும் காலம், என்றுகொல் ஓ— எப்போதாக ப்ராப்தமாமோ!.

வ்யா. இருளிரியச் சுடர்மணிகளிமைக்கும் நெற்றி. இருள் சிதறிப்போம்படி ஜ்யோதிஸ்ஸையுடைய மணிகள் விளங்குகிறநெற்றியையும். இனத்துத்தியணிபணை மாயிரங்களார்ந்த. இனமான துத்தி; அதாவது - இரண்டாய்ச்சேர்ந்த திருவடி நிலையென்று சொல்லுகிறவைக் கையுடைத்தான பணங்களாயிரத்தையும் பூர்ணமாகவுடையனும். அரவரசப்பெருஞ்சோதி. நாகராஜனென்னும் மஹாதேஜஸ்ஸையுடையனும். அனந்தனென்னும். எல்லாவற்றையும் வ்யாபித்து நிற்கிற ஸர்வேச்வரனை விளாக்குலை கொள்ளுகிற ஸ்வரூபகுணங்களை யுடையனுகையாலே அநந்தனென்று சொல்லப்படுகிற. என்னும். ஸுமுகன், வாஸுகி, தக்ஷகன் என்று முண்டிறே; அவர்களிற் காட்டில் பகவத் ப்ரத்யாஸத்தியை யுடையதென்னும் ப்ரஸித்தியை யுடையவன். அணிவிளங்குமுயர் வெள்ளையணையைமேவி. அழகுமிக்கு ஓக்கத்தையுடைத்தாய் மறுவற்ற வெள்ளைப்படுக்கையாகிற திருவனந்தாழ்வானைமேவி. திருவரங்கப் பெருநகருள். (க) "வைகுண்டேது பரேலோகே" என்று சொல்லுமது அங்கே காணும்; இவர்க்குத் திருவரங்கமாகிற மஹா நகரத்திலே. தெண்ணீர்ப்பொன்னி திரைக்கையாலடிவருட. தெளிந்த நீரையுடைய காவேரி, திரையாகிறகைகளாலே திருவடிகளைவருட. பள்ளிகொள்ளும் கருமணியை. திருவனந்தாழ்வான்மேலே ஒரு நீலரத்னம் சாய்ந்தாப்போலே கண்வளர்ந்தருளுகிறவனை. கோமளத்தை. கண்ணாலே துகைக்கவொண்ணாத ஸௌகுமார்யமுடையவனை. கண்டுகொண்டு. கலியர், "சோற்றைக் கண்டுகொண்டு" என்னுமாப்போலே. என் கண்ணிணைகள். பட்டினிவிட்ட வென்கண்கள். என்றுகொலோகளிக்கும் நாளே. அங்கேகண்டு. (உ) "ஹாவு ஹாவு ஹாவு" என்று களிக்கும் களிப்பை இங்கேகண்டு களிப்பதென்றோ. ... ... ... ... ... க.

மூ.—வாயோரீரைஞ்ஞூறு துதங்களார்ந்த வளையுடம்பி லழலுமிழ்ந்தசெந்தீ
வீயாதமலர்ச்சென்னிவிதானமேபோல் மேன்மேலும்மிகவெங்கும் பரந்ததன்கீழ்க்
காயாம்பூமலர்ப்பிறங்கலன்னமாலைக் கடியரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும்
மாயோனைமணத்தூணேபற்றி நின்றென்வாயாரவென்றுகொலோ வாழ்த்துநாளே. உ.

ப-ரை.— துதங்கள்— துதிக்கைக்கீடாக, ஆர்ந்த— பொருந்தின, ஓர் இரு ஐந்நூறு வாய்— ஆயிரம் வாயையும், வளை— வெளுத்த, உடம்பில்— திருமேனியையும், விதா

(க) "வைகுண்டேது பரேலோகே" (உ) "அஹமந்ந மஹமந்ந மஹமந்நம்"

னம் போல் — மேற் கட்டிபோல், எங்கும்— மேற்பக்கமெங்கும், மிக பரந்து— மிகவும் பரந்திருப்பதாய், அழல்— (சத்ருக்கள் அணுகவொண்ணுதபடி) அழலாநின்றுள்ள, நாகம்— திரு அனந்தாழ்வான், மேல் மேலும்— இடைவிடாமல், உமிழ்ந்த— வாயால் உமிழுகிற, செந்தீ அதன் கீழ்— அக்நிஜ்வாலைகளாகிற அதன்கீழே, மலர் வியாத— பூமாருத, சென்னி— திருமுடியை யுடையனுமாய், காயா மலர்— காயாம் பூக்களால் தொடுக்கப்பட்டு, பூ— அழகிதாயிருந்துள்ள, பிறங்கல் அன்ன— மாலை போலேயிருக்கிற, மாலை — ஸர்வேச்வரனுய், கடி— அரணாகப்போரும்படியான திருமதிள்களையுடைய, அரங்கத்து—திருவரங்கத்திலே, அரவு அணையில்— சேஷசயநத்திலே, பள்ளி கொள்ளும் — திருக்கண் வளர்ந்தருளுகிற, மாயோனை— ஆச்சர்யபூதனை, மணம் தூண் பற்றி நின்று— ஆமோத ஸ்தம்பத்வயத்தைப் பற்றிநின்று, என் வாய் ஆர— என் வாய் நிரம்ப, வாழ்த்தும் நாள்—ஆகிக்குங்காலம், என்று கொல் ஓ— என்றோ!.

வ்யா. இரண்டாம்பாட்டு. வாயோரீரைஞ்ஞூறு துதங்களார்ந்த. யசோதைப்பிராட்டி க்ர்ஷ்ண ஸ்பர்சத்தால்வந்த ஸுகத்துக்குப் போக்குவிட் டேத்துமாப்போலே பகவதநுபவ ஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே வந்த ப்ரீதிக்குப் போக்குவிட் டேத்துகைக்காக ஆயிரம்வாயையும்; துதங்களாவது - ஸ்தோத்ராதிகளாய் புறப்படவிடுகை. ஸ்துதமிறே. வளையுடம்பிலழல் நாகம். வெளுத்த நிறத்தையுமுடையனாய், ப்ரதிபக்ஷத்துக்கு வந்தணுகவொண்ணுதபடி அக்நிபவரியனாயிருக்கிற திருவநந்தாழ்வான். உமிழ்ந்தசெந்தீ வியாதமலர்ச் சென்னி விதானமேபோல் மேன்மேலும் மிகவெங்கும் பரந்ததன்கீழ். அவன்வாயாலே இடைவிடாதே யுமிழ்கிற அக்நிஜ்வாலைகளின் ஜ்யோதிஸ்ஸாகிற மேற்கட்டியின் கீழே, வியாதமலர்ச்சென்னி — பூமாருத திருமுடியை யுடையனுமாய். காயாம்பூமலர்ப் பிறங்கலன்னமாலை. காயாவின் அழகிய பூவாலேசெய்யப்பட்ட மாலைபோலேயிருக்கிற ஸர்வேச்வரனை. கடியரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும். அரணாகப்போரும் மதிளையுடைய கோயிலிலே அப்படிப்பரிவனான திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிற. மாயோனை. (க) "ஸயா வெவா பித ஸ்ரீராங்" என்னும்படி கண்வளர்ந்தருளுகிற ஆச்சர்யபூதனை. மணத்தூணே பற்றிநின்று. ஆமோத ஸ்தம்பத்வயங்களைப்பற்றி நின்று. அழகிலே அகப்பட்ட ஹர்ஷத்தாலே தள்ளுண்ணுமே இரண்டு ஸ்தம்பங்களைப்பற்றிநின்று. வாயார என்றுகொலோ வாழ்த்துநாளே. கண்டால் கொள்வது வேறொரு ப்ரயோஜநமில்லையிறே; "பல்லாண்டு பல்லாண்டு" என்னுமித்தனையிறே. ... ... ... ... ... ... ௨.

ரூ.—எம்மாண்பிலயனுங் நாவினலுமெடுத்தேத்தி யீரிரண்டுமுகமுங்கொண்டு
எம்மாடுமெழிற்கண்க ளெட்டினேடுந் தொழுதேத்தியினிதிறைஞ்ச நின்றசெம்பொன்
அம்மான்றன்மலர்க்கமலக் கொப்பூழ்தோன்றவணியரங்கத் தரவணையிற்பள்ளிகொள்ளும்
அம்மான்றனடியிணைக்கீழலர்களிட்டங் கடியவரோடென்றுகொலோ வணுகுநாளே. ௩.

ப-ரை.— எ மாண்பில்— எல்லாப்படியாலுமுண்டான மாட்சிமையுடைய, அயன்— ப்ரஹ்மாவானவன், நான்கு நாவினலும்— நாலு நாக்காலும், எடுத்து— தன்பரிவுக்குத்தக்கபடி எடுத்து, ஏத்தி— ஸ்துதித்து, இரு இரண்டு முகமும் கொண்டு— நான்கு முகங்க

(க) "ஸயயா போதிதச் ஸ்ரீராங்"

ளையுங் கொண்டு, எ †மாடும்— எல்லாப் பக்கங்களிலும், எழில்— அழகிய, கண்கள் எட்டுடனும்— எட்டுக்கண்களோடே, தொழுது— பத்தாஞ்ஜலி புடையுக்கொண்டு, ஏத்தி- ஸ்துதித்து, இனிது— சாஸ்த்ரோபக்பமாக [ ஸாஷ்டாங்கமாக என்றபடி. ] இறைஞ்ச நின்ற— ஸேவிக்கும்படி நின்றவனும், செம்பொன்— செம்பொற்கட்டிபோலே ஸ்ப்ருஹணீயனும், அம்மான்தன்- ஸர்வகாரண பூதனுடைய, கமலம் மலர்— தாமரைமலரையுடைய, கொப்பூழ்— திருநாபியானது, தோன்ற— தோன்றும்படி, அணி— ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான, அரங்கத்து— கோயிலிலே, அரவு அணையில்— சேஷசய்யையிலே, பள்ளிகொள்ளும்— பள்ளிகொண்டருளுகிற, அம்மான் தன்— எம்பெருமானுடைய, அடியிணை கீழ்— திருவடிகளின் கீழே, அலர்கள் இட்டு— புஷ்பங்களைப் பணிமாறி, அங்கு— அங்கே, அடியவரோடு— அந்தரங்ககிங்கரர்களோடு, அணுகும் நாள்— கிட்டும் நாள், என்று கொல் ஓ— என்றோ!. [ † "மாடு— பொன், பக்கம், செல்வம்" என்று நிகண்டு.]

வ்யா.. மூன்றும்பாட்டு. எம்மாண்பில் அயன். எப்படிப்பட்ட மாட்சிமையுடைய ப்ரஹ்மா. அதாவது - ஸ்தோத்ராதிகளைப் பண்ணுந் தன்மை குறைவற்றிருக்கை. நான்கு நாவினாலும். ஸ்தோத்ராதிகளுக்கு பரிகரமான நாலுநாக்காலும். எடுத்தேத்தி. தன் ச்ரத்தைக்குத் தக்கபடி எடுத்தேத்தி. ஈரிரண்டு முகமுங்கொண்டு. நாலுவேதத்துக்குஞ் சமைந்த நாலுமுகமுங்கொண்டு. எம்மாடும். பின்னும் முன்னுமட்டங்களாகிற பர்யந்தங்களெங்கும். எழில்கண்களெட்டினோடும். அழகை யநுபவிக்கைக்குப் பல கண்டடைத்த ப்ரயோஜநம் பெற்றான். தொழுதேத்தி யினி திறைஞ்சநின்ற. ப்ரீதி ப்ரேரிதனுப் கொண்டுதொழுது ஸ்தோத்ராதிகளைப் பண்ணுவது தண்டனிடுவ தாம்படி நின்ற. செம்பொனம்மான்றன் மலர்க் கமலக் கொப்பூழ்தோன்ற. ஸ்ப்ருஹணீயமாய் இவ்வருகுண்டான கார்யவர்க்கத்துக்கெல்லாம் காரணமென்னும் மஹத்த்வம் தோற்றும்படியாயிருக்கிற தாமரைப் பூவையுடைய தன் திருநாபிதோன்ற. அணியரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளு மம்மான்றன். ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான கோயிலிலே திருவநந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேச்வரனுடைய. அடியிணைக்கீழலர்களிட்டு. அவன் திருவடிகளின்கீழே புஷ்பாத்யுபகரணங்களைப் பணிமாறி. அங்கடியவரோ டென்றுகொலோ வணுகுநாளே. அங்கு அந்தரங்க வ்ருத்தி செய்யு மவர்களோடே ஸஜாதீயனுனநாளும் கிட்டுவதென்றோ. "அடியார்கள் குழாங்களை" இத்யாதி. ... ... ... ... ... ... ங.

மூ.—மாவினைவாய்பிளந்துகந்தமாலை வேலைவண்ணனை யென்கண்ணனை வன்குன்றமேந்தி
ஆவினையன்றுய்யக்கொண்ட வாயரேற்றை யமரர்கடந்தலைவனையந்தமிழின்பப்
பாவினையவ்வடமொழியைப்பற்றற்றூர்கள் பயிலரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும்
கோவினைநாவுறவழுத்தியென்றன்கைகள் கோய்மலர்தூயென்றுகொலோகூப்புநாளே. ச.

ப-ரை.— மாவினை— கேசியென்னுமஸுரனுடைய, வாய்— வாயை, பிளந்து— பிளந்து பொகட்டு, உகந்த— ஆச்ரிதவிரோதிபோகப் பெற்றோமென்று உகந்த, மாலை— ஆச்ரிதவ்யாமுக்தராய், வேலை வண்ணனை — கடலோடொத்த திருநிறத்தையுடையராய், என் கண்ணனை— எனக்கு பவ்யனான க்ருஷ்ணனாய், அன்று— இந்த்ரன் கல்மழை பெய்வித்த அக்காலத்திலே, வல்— பலிஷ்டமாயிருப்பதொரு, குன்றம்— கோவர்த்தந பர்வதத்தை, ஏந்தி- கையால் தாங்கி, ஆவினை— பசுக்களை, உய்யக்கொண்ட- ரக்ஷித்தவராய்,

ஆயர் ஏற்றை— * தன்னோராயிரம் பிள்ளைகளிற்காட்டில் மேனாணித் திருக்குமவராய், அமரர்தம்— நித்யஸூரிகளிற்காட்டில், தலைவனை— ப்ரதாநராநவராய், அம்— அழகிய, தமிழ்— தமிழாலாகிய, இன்பம் பாவினை— பாட்டுப்போலே யினியராய், அ வடமொழியை— ஸ்ரீமந்நாராயணம்போலே இனியவராய், பற்று அற்றூர்கள்—தன்னையே பற்றிப்புறப்புள்ளவற்றை விட்ட அநந்யப்ரயோஜநர்கள், பயில்— நித்யவாஸம்பண்ணுகிற, அரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும்—, கோவினை— நாதனை, நா உற— நாத்தழும்பேறும்படி, வழுத்தி— ஸ்தோத்ரங்களைப்பண்ணி, என்றன்கைகள்— என்னுடைய கைகளானவை, கொய்— காலத்தில் பறிக்கப்பட்ட, மலர்— புஷ்பங்களை, தூய்— பணிமாறி, கூப்பும் நாள்— அஞ்சலிபண்ணும் காலம், என்றுகொல்— என்றோ.

வ்யா. நான்காம்பாட்டு. மாவினை வாய்பிளந்துகந்தமாலே. கேசியை அநாயாஸேநப் பிளந்து, ''ஆச்ரிதவிரோதி போகப்பெற்றோம்'' என்று உகந்த ஆச்ரித வ்யாமுக்தனை. வேலைவண்ணனை. ஆச்ரித விரோதிகளை வளர்த்தாலும் விடவொண்ணாத வடிவழகையுடையவனை. என் கண்ணனை. வெறும் வடிவழகே யன்றியே எனக்கு பவ்யனானவனை. வன்குன்றமேந்தி யாவினையன்றுய்யக் கொண்டவாயரேற்றை. இந்த்ரன் வர்ஷிக்கிற கல்வர்ஷத்திலே வர்ஷிக்கிற கல்வர்ஷத்துக்குச் சலியாத மலையை யென்னுதல்; ச்ரமஹரமான குன்றமென்னுதல். ஆவினையன்றுய்யக்கொண்ட. உபகார ஸ்ம்ருதியுமில்லாத பசுக்களை ரக்ஷித்த. ஆயரேற்றை. தன்பருவத்தில் பிள்ளைகளைக்காட்டில் தான் மேனாணிப்புடையவனை. அமரர் தந்தலைவனை. தன்னோடு ஸாம்யாபத்தி பெற்றிருக்கிற நித்யஸூரிகளைக் காட்டில் தலைவனானவனை. அந்தமிழின்பப்பாவினை. * இருளிரியச் சுடர்மணிகளிமைக்கும் நெற்றி போலே இனியவனை. அவ்வடமொழியை. ஸ்ரீமந்நாராயணம்போலே இனியவனை. பற்றற்றூர்கள் பயிலரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளுங்கோவினை. தன்னையேபற்றிப் புறம்புள்ளவற்றை விட்ட அநந்ய ப்ரயோஜநர் நித்யவாஸம் பண்ணுகிற கோயிலிலே திருவநந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளுகிற நாதனை. நாவுறவழுத்தி. நாத்தழும்பேறும்படி ஸ்தோத்ரங்களைப்பண்ணி. என்றன் கைகள் கொய்மலர் தூயென்று கொலோ கூப்புநாளே. கைதழும்பேறும்படி புஷ்பாத்யுபகரணங்களைப் பணிமாறி அஞ்ஜலி பண்ணப் பெறுவதென்றோ. ௪.

மூ.—இணையில்லாவின்னிசை யாழ்கெழுமி யின்பத்தும்புருவுநாரதனு மிறைஞ்சியேத்தத்
துணையில்லாத்தொன்மறை நூற்றோத்திரத்தாற் றொன்மலர்க்கணயன் வணங்கியோவாதேத்த
மணிமாடமாளிகைகள் மல்குசெல்வமதி ளரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும் [நாளே.
மணிவண்ண னம்மானைக்கண்டுகோண்டேன் மலர்ச்சென்னியென்று கொலோவணங்கு

ப—ரை.— இன்பம்- பாட்டால்வந்த ஆநந்தத்தையுடைய, தும்புருவும் நாரதனும்— தும்புரு,நாரதனென்பவர்கள், இணை இல்லா— உபமாநரஹிதமான, இன்— இனிய, இசை— இசையையுடைய, யாழ்— வீணையை, கெழுமி— மீட்டி, இறைஞ்சி- திருவடிகளிலே விழுந்து, ஏத்த — ஸ்தோத்ரம்பண்ண, துணை இல்லா— ஒப்பில்லாததாய், தொல்— பழையதான, மறைநூல்— வேதசாஸ்த்ரமாகிற, தோத்திரத்தால்— ஸ்தோத்ரத்தாலே, தொல்— அநாதிஸித்தமான, மலர்க்கண்— திருநாபீ கமலத்திலிடத்திலிருக்கிற, அயன்— ப்ரஹ்மாவானவன், வணங்கி— திருவடிகளிலே ப்ரணாமம்பண்ணி, ஓவாது— இடைவிடாதே, ஏத்த— ஸ்தோத்ரம்பண்ணும்படி, மணி— ரத்நமயமான, மாடம் மாளிகைகள்-

மாடமாளிகைகளையும், மல்கு செல்வம்— மிக்க ஐச்வர்யத்தையு முடைத்தாய், மதிளரங்கத் தரவணையிற் பள்ளிகொள்ளும்—, மணி— அழகிய, வண்ணன்— வடிவையுடையனை, அம்மானை— ஸர்வேச்வரனை, கண்டுகொண்டு— இடைவிடாமல் ஸேவித்து, என்— என்னுடைய, மலர்— பூமுடிசூடின, சென்னி— தலை, வணங்கும் நாள்— அவன் திருவடிகளிலே வணங்குங்காலம், என்றுகொலோ—.

வ்யா. ஐந்தாம்பாட்டு. இணையில்லா வின்னிசை யாழ்கெழுமி. உபமாநரஹிதமான இனிய இசையையுடைய யாழைநெருங்கி. இன்பத்தும்புருவும் நாரதனு மிறைஞ்சியேத்த. பாட்டால் வந்த ஆநந்தத்தையுடைய தும்புருவும் நாரதனும் திருவடிகளிலே விழுந்து ஸ்தோத்ரங்களைப்பண்ண. துணையில்லாத் தொன்மறைநூல் தோத்திரத்தால். ஒப்பில்லாதபழைய வேதசாஸ்த்ரமாகிற ஸ்தோத்ரத்தாலே. தொன்மலர்க்க ணயன் வணங்கி யோவாதேத்த. திருநாபீகமலத்தி னிடத்திலேயிருக்கிற ப்ரஹ்மா, திருவடிகளிலே ப்ரணாமம்பண்ணி இடைவிடாதே ஸ்தோத்ரம்பண்ணி. மணிமாடமாளிகைகள் மல்குசெல்வம். மணிமயமான மாடங்களையும் மிக்க ஐச்வர்யத்தையுமுடைய. மதிளரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும். மிக்க அரணை பெரிய மதிளையுடைய பெரியகோயிலிலே திருவனந்தாழ்வான்மேலே பள்ளிகொண்டருளும். மணிவண்ணனம்மானைக் கண்டுகொண்டு. அழகிய வடிவையுடைய ஸர்வேச்வரனைக் கண்டு கொண்டு. என் மலர்ச்சென்னி யென்றுகொலோ வணங்குநாளே. நான் பூமுடி சூடினதலை என்றோ அவன் திருவடிகளிலே வணங்குவது. ... ... ... ரு.

மூ.— அளிமலர்மேலயனா னிந்திரனோடேனை யமரர்கடங்குழவு மரம்பையருமற்றும்
தெளிமதிசேர்முனிவர்கடங்குழவு முந்தித்திசைதிசையின் மலர்தூவிச்சென்றுசேரும்
களிமலர்சேர்பொழிலரங்கத் துரகமேறிக்கண்வளருங் கடல்வண்ணர் கமலக்கண்ணும்
ஒளிமதிசேர்திருமுகமுங் கண்டுகொண்டென் னுள்ளமிகவென்றுகொலோவுருகுநாளே.

ப-ரை.— அளி— வண்டுகள் படிந்திருந்துள்ள, மலர்மேல்— திருநாபீகமலத்திலிருக்கிற, அயனோடு— ப்ரஹ்மாவும், அரனோடு— ருத்ரனும், இந்திரனோடு— இந்த்ரனும், ஏனை— மற்ற, அமரர்கள் தம் குழவும்— தேவஸமூஹங்களும், அரம்பையரும்— ரம்பைமுதலான அப்ஸரஸ்ஸுக்களும், மற்றும்— இன்னுமுள்ள, தெளி மதி சேர்— (நாராயணனே ஸர்வஸ்மாத்பரனென்று) தெளிந்தஜ்ஞானத்தை யுடையரான, முனிவர்கள் தம் குழுவும்— ஸநகாதிபரமர்ஷிகளின் ஸமூஹமும், உந்தி— ஒருவர்க்கொருவர் நெருக்கித்தள்ளி, திசை திசையில்— பார்த்தபார்த்த விடமெல்லாம், மலர் தூவி— புஷ்பவர்ஷ்டியைப் பண்ணிக்கொண்டு, சென்று சேரும்— சென்று கிட்டுகிற, களி— தேன்மாறாத, மலர்சேர்- மலர்களையுடைத்தான, பொழில்— பொழிலையுடைய, அரங்கத்து— கோயிலிலே, உரகம் ஏறி— திருவனந்தாழ்வான் மேலேயேறி, கண்வளரும்— பள்ளிகொண்டருளுகிற, கடல்வண்ணர்— நீர்வண்ணருடைய, கமலம் கண்ணும்— தாமரைமலர்போன்ற கண்களையும், ஒளி— புகரையுடைத்தான, மதி சேர்— சந்த்ரனையொத்த, திருமுகமும்— திருமுகத்தையும், கண்டுகொண்டு—, என் உள்ளம்— என் மநஸ்ஸானது, மிக உருகும் நாள்—மிகவும் உருகிப்போகுங்காலம், என்றுகொலோ—.

வ்யா. ஆறாம்பாட்டு. அளிமலர்மே லயனா னிந்திரனோடு. வண்டுகள்படிந்த அரவிந்தத்தின் மேலேயிருக்கிற ப்ரஹ்மாவும், அவன் மகனான ருத்ரனும், அவர்களோடே

ஸஹபடிக்கப்பட்ட இந்த்ரனும் இவர்களுடனே. ஏனையமார்கள்தங் குழவும். அவர்கள் மூவரையு மொழிந்த தேவர்கள் திரளும். அரம்பையரும். ரம்பைமுதலான அப்ஸரஸ்ஸுக்களும். மற்றுந் தெளிமதிசேர் முனிவர்கள் தங்குழவும். ப்ரம்ஹ பாவகையாய்ச் செல்லும் ஸநகாதிகள் திரளும். உந்தி. ஒருவர்க்கொருவர் நெருக்கித்தள்ளி. திசைதிசையில் மலர் தூவிச் சென்றுசேரும். பார்த்தபார்த்த விடமெல்லாம் புஷ்ப வர்ஷடியைப் பண்ணிக்கொண்டு சென்றுகிட்டும். களிமலர் சேர்பொழி லரங்கத்துரகமேறி. மதுமலரையுடைத்தான பொழிலையுடைய அரங்கத்திலே திருவனந்தாழ்வான் மேலேயேறி. கண்வளருங் கடல்வண்ணர் கமலக்கண்ணும். பள்ளிகொள்ளுகிற நீர்வண்ணர் கமலக்கண்ணும். ஒளிமதிசேர்திருமுகமுங் கண்டுகொண்டு. குளிர்த்தி;மிக்குப் புகரையுடைய சந்த்ரனை ஒப்புச்சொல்லலான அழகிய திருமுகத்தையுங் கண்டுகொண்டு. என்னுள்ள மிகவென்றுகொலோ வுருகுநாளே. என் நெஞ்சு குளிர்ந்து உருகுவதென்றோ. ... ... ... ... ௬.

மூ.—மறந்திகழுமனமொழித்துவஞ்சமாற்றி ¶ யைம்புலன்களடக்கியிடர்ப்பாரத்துன்பம்
துறந்திருமுப்பொழுதேத்தி யெல்லையில்லாத் தொன்னெறிக்க ணிலைநின்றதொண்டரான
அறந்திகழுமனத்தவர்தங்கதியைப் பொன்னியணி யரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும்
மிறந்திகழுமாயோனைக்கண்டேன் கண்கள்நீர்மல்கவென்றுகொலோ நிற்குநாளே. எ.

ப-ரை—. மறம்– கொலை முதலியவற்றால், திகழும்— விளங்காநின்றுள்ள; மனம்– மாஸ்ஸை, ஒழித்து– வாஸனையோடேபோக்கி, வஞ்சம்– பொய்யை, மாற்றி– போக்கி; ¶ஐம்புலன்கள்– பஞ்சேந்த்ரியங்களையும், அடக்கி– பட்டிபுகாமே கட்டி, இடர்– துக்கத்தை விளைப்பதான, பாரம் துன்பம்– * பாரமான பழவினையை, துறந்து– பற்றறுத்து, இருமுப்பொழுது– பஞ்சகாலங்களிலும், ஏத்தி— ஸ்தோத்ரம்பண்ணி, எல்லை இல்லா தொல்நெறிக்கண்– மிகப் பழையமர்யாதையிலே, நிலைநின்ற–, தொண்டரான– தாஸபூதராய், அறம் திகழும்– தர்மத்தாலே விளங்குகின்ற, மனத்தவர்தம்–மாஸ்ஸையுடையரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு, கதியை– பரமப்ராப்யனானவனாய், பொன்னி– காவேரியால் சூழப்பட்டு, அணி– லீலாவிபூதிக்காபரணமான, அரங்கத்து– கோயிலிலே, அரவு அணையில்–திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே, பள்ளிகொள்ளும்– கண்வளர்ந்தருளுமவனாய், திறம்திகழும்– அழகுநின்றங்கா நின்றுள்ள, மாயோனை— ஆச்சர்ய பூதனானவனுடைய வடிவழகை, என் கண்கள்—, கண்டு– கண்டுகளித்து, நீர் மல்க– ஆநந்தாச்ருப்ரவஹிக்கும்படி, நிற்கும்நாள்– நிற்குங்காலம், என்றுகொலோ–. [ ¶ " வன்புலன்கள் " என்றிருந்தால் மோனைக்குச்சேரும். ]

வ்யா. ஏழாம்பாட்டு. மறந்திகழ மனமொழித்து. மறம்-கொலையும், சினமும், கொடுமையும். இவற்றால் விளங்காநின்ற மாஸ்ஸை வாஸனையோடே போக்கி. வஞ்சமாற்றி. பொய்யைப்போக்கி. ஐம்புலன்களடக்கி. * வன்புலச் சேக்களைப் பட்டிபுகாமேகட்டி. இடர்ப்பாரத் துன்பந்துறந்து. மிக்க துக்கத்தை விளைப்பதான *பாரமாய பழவினையைப் பற்றறுத்து. இருமுப்பொழுதேத்தி. பஞ்சகாலமென்னுதல்; பெரியமுப்பொழு தென்னுதல்; இக்காலங்களிலேயேத்தி. எல்லையில்லாத் தொன்னெறிக்கண் நிலைநின்ற தொண்டரான. அளவிறந்த பழையமர்யாதையிலே சிலவரால் கலக்கவொண்ணாதபடி நிலைநின்ற வைஷ்ணவர்களான. அறந்திகழும் மனத்தவர்தங்கதியை. ஆநர்சம்ஸ்ய ப்ரதாநராயிருக்கு மவர்களுக்கு பரமப்ராப்யனானவனை. பொன்னி யணியரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும். * பொன்னி சூழரங்கத்திலே திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே கண்வளர்ந்தருளும். அணி அரங்கம்.

லீலாவிபூதிக்கு ஆபரணமான கோயில். நிறந்திகழுமாயோனைக்கண்டு. அழகுவிளங்கு நின்ற ஆச்சர்ய பூதனைக்கண்டு. என்கண்கள் நீர்மல்கவென்றுகொலோவாகிற்குநாளே. அவனுடைய வடிவழகைக்கண்டு களித்து ஆநந்தாச்ரு ப்ரவஹிக்கிற்கும் நாள் என்றோ. ... ௭

மூ.—கோலார்ந்தநெடுஞ்சார்ங்கங் கூனற்சங்கக்கொலையாழி கொடுந்தண்டு கொற்றவொள்வாள்
காலார்ந்தகதிக்கருடனென்னும் வென்றிக்கடும்பறவையிவையனைத்தும் புறஞ்சூழ்காப்ப
சேலார்ந்தநெடுங்கழனிசோலைசூழ்ந்த திருவரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும்
மாலோனைக்கண்டின்பக் கலவியெய்தி வல்வினையேனென்றுகொலோ வாழுநாளே. அ

ப-ரை.— கோல் ஆர்ந்த— திருச்சார்ங்கமோடுகூடி., நெடு— பெரிதாயிருக்குள்ள சார்ங்கம்— ஸ்ரீசார்ங்கமும், கூன்— பகவதநுபவத்தாலே வளைந்திருக்கிற, நல் — நன்னேசையாலே ஆச்ரிதவிரோதிகளைப்போக்கும் நன்மையையுடைத்தான, சங்கம்— ஸ்ரீபாஞ்சஜந்யமும், கொலை— சத்ருக்களைக் கொல்லுமவனான, ஆழி— திருவாழியாழ்வானும் கொடு— பார்க்கும்போதே பகைவர் மண்ணுண்ணும்படியிருக்கிற, தண்டு— ஸ்ரீ கௌமோதகியென்னும் கதையும், கொற்றம்— ஜயத்தைத்தருமதாய், ஒள்—ப்ரகாசமிருக்கும் வாள்— ஸ்ரீநந்தகமென்னும் வாளும், கால்— காற்றின்வேகம்போலே, ஆர்ந்த— பொருந்தின, கடு கதி— மிகவும் வேகமான செல்லுகையையுடைய, கருடன் என்னும்— பெரிய திருவடியென்கிற பேரையுடையனும், வென்றி—ஜயப்ரதனுமான, பறவை இவை அனைத்தும்— பக்ஷிராஜனும்ஆகிய இவர்களெல்லாரும், புறம் சூழ்— நாற்புறமும் சூழ்ந்து, காப்பகாத்துக்கொண்டிருக்க, சேல்— சேல் மத்ஸ்யங்களாலே, ஆர்ந்த— நிரம்பின, நெடு-பெரிய, கழனி— கழனிகளும், சோலை — சோலைகளும், சூழ்ந்த — சூழ்ந்திருக்கிற திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும் மாலோனை—, வல்வினையேன்—மஹாபாபியான நான், கண்டு— கண்ணாரக்கண்டு, இன்பம்—நிரதிசய ஆநந்தயுக்தனாய், கலவி எய்தி-ஸம்ச்லேஷித்து, வாழும் நாள்- அநுபவித்து வாழப்பெறுங்காலம், என்றுகொலோ—,

வ்யா. எட்டாம்பாட்டு. கோலார்ந்த நெடுஞ்சார்ங்கம். திருச்சங்கத்தோடே கூடின ஸ்ரீசார்ங்கம். "எப்போதுங்கைகழியான்" என்னுமாப்போலே எப்போது வில்வளைக்கவேண்டுமென்றறியாமையாலே திருச்சார்ங்கத்தைத் தொடுத்தபடியேயாய்த்து ஸ்ரீசார்ங்கமிருப்பது. கூன்நல்சங்கம். பகவதநுபவஜநிதப்ரீதியாலே நெருக்காலே கூனியாய்த்து ஸ்ரீபாஞ்சஜந்யமிருப்பது. கொலையாழி. இவர்களபயத்தில் இழியப்போகின்றபோதே ப்ரதிபக்ஷத்தை இருதுண்டமாகவிடுகைபணிப் போருமாய்த்து திருவாழியாழ்வாரும். கொடுந்தண்டு. பிடித்தபிடியிலே உகவாதார் மண்ணுண்ணும்படியாயிருக்கிற கதை. கொற்றவொள்வாள். ஐச்வர்யப்ரகாசகமான திருக்கொற்றவாள். கொற்றம்- வெற்றி. காலார்ந்த கதிக்கருடனென்னும் வென்றிக்கடும் பறவை. காற்றினுடைய மிக்கவேகம்போலே யிருக்கிற கதியையுடையனாய் பெரியதிருவடி என்கிற பேரையுமுடையனாயிருக்கிற பறவை. இவையனைத்தும் புறஞ்சூழ்காப்ப. (க) "ராமேணக்ஷண மூஹாவஸ" என்னுமாப்போலே காட்டிலே வெளியில் ஸ்ரீலேனையெல்லாம் குழைச்சராக்காய், தாமும் தம்பியாருங் காக்குமாப்போலே பெரிய பெருமாள் கண்வளர்ந்தருளுகையாலே பெரியதிருவடி முதலாக ஸ்ரீபஞ்சாயுதாழ்வார்

(க) "ராமலக்ஷ்மண குப்தாஸா"

கள் சுற்றுங் காத்துக்கொண்டாய்த்து நிற்பது. சேலார்ந்த நெடுங்கழனிசோலைசூழ்ந்த திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும் மாலோனை. சேலாலே நிரம்பின கழனிகளும் சோலைகளும் சூழ்ந்த கோயிலிலே திருவனந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வாதிகனை. கண்டின்பக் கலவியெய்தி. கண்டு நிரதிசயானந்தயுக்தனுப்படி. ஸம்ச்லேஷித்து. வல்வினையேனென்றுகொலோ வாழுநாளே. லோகாந்தரத்திலே போய்க்காணவேணுமென்னாதே இங்கே ஸந்நிஹிதமாயிருக்கச்செய்தே அநுபவிக்கவொண்ணாத மஹாபாபத்தைப்பண்ணின நான் அநுபவித்து வாழப்பெறுவதென்றோ. பகவதநுபவத்துக்கு விரோதியாயுள்ளவையெல்லாம் பாபமாயிருக்குமிறே. ... ... ... ... ... அ.

மூ.—தூராதமனக்காதற்றொண்டர் தங்கள்குழாங் குழுமித்திருப்புகழ்கள் பலவும்பாடி
ஆராதமனக்களிப்போடழுதகண்ணீர் மழைசோர நினைந்துருகியேத்திநாளும்
சீரார்ந்தமுழவோசைபரவைகாட்டுந் திருவரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும்
போராழியம்மானைக் கண்டுதுள்ளிப் பூதலத்திலென்றுகொலோ புரளுநாளே. ௯.

பதவுரை.— தூராத— ஒருக்காலும் தீராத, காதல்— ஆசையையுடைத்தான, மனம்— மனஸ்ஸையுடையராய், தொண்டர்தங்கள் குழாம்— தாஸபூதரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய திரளிலே, குழுமி— கலந்து, திருப்புகழ்கள் பலவும்பாடி— அவனுடைய குணங்களுக்கு வாசகமான திருநாமங்கள் பலவற்றையும்பாடி, (அத்தாலே,) ஆராத— ஆராநிருக்கிற, மனக்களிப்போடு— மனக்களிப்பாலே, அழுதகண்— அழுதகண்களினின்றும், நீர்— ஆநந்தாச்ருக்கள், மழை— மழைபோலே, சோர— ப்ரவஹிக்க, நினைந்து— அவனை நினைத்து, உருகி— அத்தாலேயுருகி, ஏத்தி— ஸ்தோத்ராதிகளைப்பண்ணி, நாளும்— நாடோறும், சீர் ஆர்ந்த— ஐச்வர்யப்ராகாசகமான, முழவு ஓசை— வாத்யகோஷங்கள், பரவை— ஸமுத்ர கோஷத்தை, காட்டும்— காட்டாநிற்கிற, திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும்—, போர்,— யுத்தோந்முகமான, ஆழி— திருவாழியைக்கையிலேயுடைய, அம்மானை கண்டு— ஸர்வேச்வரனைக்கண்டு, துள்ளி— ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணி, பூதலத்தில்— பூமியிலே, புரளும் நாள்— புரளுங்காலம், என்று கொலோ—.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. தூராதமனக்காதல் தொண்டர்தங்கள்குழாங்குழுமி. "ஆராக்குழி தூர்த்தெனாளகன்றிருப்பன்" என்று- ஸம்ஸாரிகள் சப்தாதி விஷயங்களிலே பலநாள் அநுபவித்தாலும் இந்த்ரியங்களை த்ருப்தியாக்கப் போகாதாப்போலே, பகவதநுபவம் ஒருக்காலும் ஆராதிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் குழாத்திலே பெண்ணையுங்கூடக் கலசி. திருப்புகழ்கள் பலவும்பாடி. அவனுடைய கல்யாண குணங்களுக்கு வாசகமான திருநாமங்கள் பலவற்றையும்பாடி. ஆராதமனக்களிப்போடழுதகண்ணீர் மழைசோர. திருநாமங்களைச் சொன்னபடியாலே மநஸ்ஸுக்கு ஆராமையாலே ஹர்ஷத்தைப் அத்தாலே ஆநந்தாச்ரு ப்ரவஹிக்க. நினைந்துருகியேத்தி. இவர்கள் திரளிலேகூடி திருநாமத்தைச் சொன்னபடியாலே திருநாமத்வாராவிஷயத்தை நினைத்து அத்தாலேயுருகி, "உருகிவழிந்து புறப்பட்டசொல்" என்னும்படி ஸ்தோத்ராதிகளைப் பண்ணி. நாளும்சீரார்ந்தவித்யாதி. ஐச்வர்யப்ராகாசகமான வாத்யகோஷங்கள் ஸமுத்ரகோஷத்தைக் காட்டாநிற்கிற கோயிலிலே திருவனந்தாழ்வான் மேலே நித்யவாஸம்பண்ணுகிற யுத்தோந்முகமான திருவாழியைக் கையிலேயுடைய ஸர்வேச்வரனை. கண்டு. ஸேவித்து. துள்ளி.ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணி. பூதலத்திலென்றுகொலோ புரளுநாளே. விஹ்வலதையிலே இருமாந்திருக்கு மிருப்பொழிந்து ஹர்ஷத்தைப் பூமியிலே புரளுவதென்றுகொலோ. ... ... ... ... ௯.

மூ.—வன்பெருவானகமுய்ய வமரருய்ய மண்ணுய்ய மண்ணுலகின் மனிசருய்யத்
துன்பமிகுதுயரகலவயர் வொன்றில்லாச் சுகம்வளர வகமகிழுந் தொண்டர்வாழ
அன்போடு தென்றிசைநோக்கிப் பள்ளிகொள்ளுமணியரங்கன் றிருமுற்றத்தடியார்தங்கள்
இன்பமிகுபெருங்குழுவு கண்டியானு மிசைந்துடனே யென்றுகொலோ விருக்குநாளே.

பதா.— வல்— நைமித்திகப்ரளயத்திலழியாததாய், பெரு— பெருமைதங்கிய, வானகம்—ஸ்வர்க்கம் முதலிய லோகங்கள், உய்ய—உஜ்ஜீவிக்கும்படியாகவும், அமரர்—தேவர்கள், உய்ய— உஜ்ஜீவிக்கும்படியாகவும், மண்— பூலோகம், உய்ய— உய்யவும், மண் உலகில்— பூலோகத்திலுண்டான, மனிசர்— மநுஷ்யர், உய்ய— உஜ்ஜீவிக்கவும், மிகு துன்பம்— மிக்க துக்கத்தைவிளைப்பதான, துயர்— பாபங்கள், அகல— நீங்கவும், அயர்வு ஒன்று இல்லா— துக்கம் கலவாத, சுகம்—நித்யமான ஸுகமானது, வளர— வளரவும், அகம் மகிழும்— நிரதிசயாநந்தயுக்தரான, தொண்டர்— ஸ்ரீவைஷ்ணவர்கள், வாழ— வாழவும், அன்பொடு— ஸ்ரீவிபீஷணாழ்வான் பக்கலுண்டான அன்பாலே, தென்றிசை நோக்கி— (“தென்திசையிலங்கைநோக்கி” என்கிறபடியே—)லங்கையைப் பார்த்தவண்ணமாக, பள்ளிகொள்ளும்— கண்வளர்ந்தருளுகிற, அணி அரங்கன்—பெரியபெருமாளுடைய, திருமுற்றத்து— உள்ளில் திருமுற்றத்திலே, மிகு இன்பம்— நிரதிசயாநந்தயுக்தராயிருக்கிற, அடியார் தங்கள் பெரு குழுவு கண்டு— ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பெரியதிரளைக்கண்டு, யானும்— நானும், இசைந்து— அவர்களிலே ஒருவனாகவிசைந்து, இருக்கும் நாள்— இருக்குங்காலம், என்றுகொலோ—.

வ்யா. பத்தாம்பாட்டு. வன்பெருவானகமுய்யவமரருய்ய. நைமித்திகப்ரளயபத்துக்கு இளையாத ப்ரஹ்மலோகம் முதலாக மேலுண்டான லோகங்களுய்ய. அங்குண்டான ப்ரஹ்மாதிகளுஜ்ஜீவிக்க வாய்த்து ப்ரஹ்மலோகத்தில் கோயிலாழ்வார் எழுந்தருளியிருந்த படி. மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்ய. ஸ்ரீவிபீஷணாழ்வானுக்காக அங்கு நின்றும் இங்கேற வெழுந்தருளுகையாலே பூமியும் பூமியிலுண்டான சேதநரு முஜ்ஜீவிக்க. துன்பமிகுதுயரகல. நித்யதுக்கத்தை விளைப்பிப்பதான பாபங்கள் அகல. அயர்வொன்றில்லாச் சுகம்வளர. துக்கம் விச்சலியாத நித்யமானஸுகம்வளர. அகமகிழுந் தொண்டர்வாழ. பகவதநுபவத்தாலே நிரதிசயாநந்தயுக்தரான ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழ. அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளிகொள்ளும் அணியரங்கன் திருமுற்றத்து. ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு ராஜ்யத்தைக் கொடுத்து அத்திக்கைப்பார்த்துக் கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளுடைய உள்ளில் திருமுற்றத்திலே. அடியார் தங்கள் இன்பமிகு பெருங்குழவுகண்டு. நிரதிசயாநந்தயுக்தராயிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளைக்கண்டு. யானுமிசைந்து. “அபிஷிக்தக்ஷத்ரியன்” என்று என்னை நினையாதே அவர்களிலே யொருவனாக விசைந்து. உடனே என்றுகொலோ இருக்குநாளே. என்னைச் சிலர் ஸேவிக்க நான் நியாமகனாயிருக்கு மிருப்பையொழிந்து ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளிலே ஸேவித்திருப்பதென்றோ. ... ... ... ௰.

அ. திருநாமப்பாட்டு. (க) “[illegible] ஸ்ரீ[illegible]॥ ”

---

(க) “ புவோபூத்வை பூபுஜாம்பூஸாராணும் திவோகுப்த்யை ச்ரேயஸேதேவதாநாம் । ச்ரியைராஜ்ஞாம் சோளவம்சோத்பவாநாம் ஸ்ரீமத்ரங்கம் ஸஹ்யஜாமாஜகாம.”

மு.—திடர்விளங்குகரைப் பொன்னிநடுவுபாட்டுத் திருவரங்கத்தரவணையிற் பள்ளிகொள்ளும்
கடல்விளங்குகருமேனி யம்மான்றன்னைக் கண்ணாரக்கண்டுகக்குங்காதல்தன்னால்
குடைவிளங்கு விறற்றானைக்கொற்றவொள்வாள் கூடலர்கோன் கொடைக்குலசேகரன்சொற்செய்த
நடைவிளங்குதமிழ்மாலைபத்தும்வல்லார் நலந்திகழ்நாரணனடிக்கீழ்நண்ணுவாரே. கக.

பதவுரை.— விளங்கு— விளங்காநின்ற, திடர்— மேடான, கரை— திருக்கரையை யுடைத்தான, பொன்னி— காவேரிசூழ்ந்த, நடுவுபாடு— மத்யப்ரதேசத்திலே, திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும்—, கடல்— கடல்போலே, விளங்கு— ப்ரகாசிக்குமதாய், கரு— ச்ரமஹரமான, மேனி— திருமேனியையுடைய, அம்மான்தன்னை— ஸர்வேச்வரனை, கண் ஆர— கண்கள் நிறையும்படி, கண்டு உகக்கும் காதல் தன்னால்— கண்டு களிக்கவேணுமென்னு மாசையாலே, விளங்கு— விளங்குகிற, குடை— வெண்கொற்றக்குடையையும், விறல்— வெற்றியையுடைய, தானை— சேனையையும், கொற்றம்-ஐயப்ரதமான, ஒள்— ஒளிபொருந்திய, வாள்— வாளையுமுடையராய், கூடலர்— மதுரையிலுள்ளார்க்கு, கோன்— நிர்வாஹகருமாய், கொடை— கொடையையுமுடையரான, குலசேகரன்— ஸ்ரீகுலசேகரப்பெருமாள், சொல் செய்த— அருளிச்செய்ததாய், நடை விளங்கு— நடையால் விளங்குகிற, தமிழ்மாலைபத்தும் வல்லார்— தமிழ்த்தொடையான இப்பத்துப்பாட்டையும் சொல்லவல்லவர்கள், நலம் திகழ்—சீலாதிகுண பூர்ணரான, நாரணன்— பெரியபெருமாளுடைய, அடி கீழ்— திருவடிகளின்கீழே, நண்ணுவார்— கிட்டப்பெறுவர்கள். [அறுசீர்க்கழி நெடி லாசிரிய விருத்தம்.]

வ்யா. திடர்விளங்குகரை யித்யாதி. விளங்காநின்ற திருக்கரையை யுடைத்தாய்க் காவேரிசூழ்ந்த. திருவரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும் கடல்விளங்கு கருமேனியம்மான்றன்னை. கோயிலிலே திருவனந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளுகிற கடல்போலே ச்ரமஹரமான திருமேனியையுடைய ஸர்வேச்வரனை. கண்ணாரக்கண்டு உகக்கும்காதல் தன்னால். கண்ணாலே கண்டநுபவிக்க வேணுமென்னும் ஆசைப்பாட்டோடே. குடைவிளங்கு விறல்தானைக் கொற்றவொள்வாள் கூடலர்கோன். விளங்குகிற வெண்கொற்றக் குடையையும் வெற்றியையுடைய ஸேனையையும், ஐச்வர்யப்ரகாசகமான ஆனையையுமுடையராய் மதுரைக்கு நிர்வாஹகருமான. கோடைக்குலசேகரன் சொற்செய்த. கொடைமாறுமே கொடுக்கும் பெருமாள் அருளிச்செய்த. நடைவிளங்கு தமிழ்மாலை பத்தும்வல்லார் உள்ளில் அர்த்தத்திலிழிய வேண்டாதே, பதங்கள் சேர்ந்த சேர்த்திகள் பார்க்கவேண்டாதே, இதுதானே ஆகர்ஷகமாயிருக்கிற தமிழ்த்தொடை பத்தும்வல்லார். நலந்திகழ் நாரணனடிக்கீழ் நண்ணுவாரே. சீலாதிகுணபூர்ணராய், ஸர்வஸ்வாமியாய், வத்ஸலராயிருக்கும் பெரிய பெருமாள் திருவடிகளின்கீழே அநுபவிக்க ஆசைப்பட்டாப்போலே கிட்டப்பெறுவர்கள்.

குலசேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

அடிவரவு.—இருள் வாய் எம்மா மாவினை இணை அளி மறம்
கோல் தூரா வன் திடர் தேட்டு.

ஆ. திருமொழி- க- க்கு பாட்டு, கக.

(*)

## இரண்டாந்திருமொழி, தேட்டரும்- ப்ரவேசம்.

அ. பகவத்விஷயத்திலே கைவைத்தார்க்கு வெப்பனிப்பன சில ஸ்வபாவங்களுண்டு; (ச) ["ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்."] ஆநுகூல்யமாவது - பகவத்விஷயத்திலும் பாகவதவிஷயத்திலும் பண்ணுமவை. பகவத்விஷயம் பூர்ணமாகையாலே இவனுக்கு ஆநுகூல்யம் பண்ணுகைக்குத் துறையில்லையிறே. இப்படி துறையில்லையென்று இவன் கைவாங்காமைக்கிறே இவனுகந்தத்ரவ்யமே தனக்குத் திருமேனியாகவும் இவன் திருமஞ்சனம் பண்ணினபோது திருமஞ்சனம் பண்ணியும், அமுதுசெய்யப்பண்ணினபோது அமுதுசெய்தும் அல்லாதபோது பட்டினியுமாம்படியிறே அவர்களுக்குத் தன்னை யமைத்துவைப்பது; இப்படி பார்த்த இல்லையாகில் பரிபூர்ணவிஷயத்தில் இவனுக்கு கிஞ்சித்கரிக்கைக்குத் துறையில்லையிறே. (உ) "ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்" என்றும், (ந) "ஸர்வப்ராணாஹிதே ரதா:" என்றும், "பத்ராவி" என்றுமிருக்குமவனாகையாலே, ததீயவிஷயத்திலே பண்ணும் ஆநுகூல்யமும் பகவத்விஷயத்திலே பண்ணிற்றாமிறே. ஆகையாலே இவரும் தமக்கு இவையிரண்டும் பிறந்ததென்கிறார். பகவத்விஷயத்தில் பிறந்த ஆநுகூல்யம் சொன்னார்- கீழில் திருமொழியில்; ததீயவிஷயத்தில் ஆநுகூல்யம் பிறந்தபடி சொல்லுகிறார் இத்திருமொழியில். ... ... ... ... *

வ்யா. முதற்பாட்டு. தேட்டருமித்யாதி. முடிய பாகவதவிஷய முத்தேச்யமாகிறதும் பகவத்விஷயத்திலே அவகாஹித்தாரென்னுமதிறே. "இன்னான் அர்த்தமுடையவன், க்ஷேத்ரமுடையன்" என்று ஆச்ரயிப்பாரைப்போலே, பகவத்ப்ரத்யாஸத்தி யுடையாரென்றிறே இவர்களைப்பற்றுகிறது. பகவத்விஷயத்திலே ஸ்தோத்ரம்பண்ண இழிந்தவர் ஆசார்யவிஷயத்தை ஸ்தோத்ரம்பண்ணப் புக்கு அவர்க்கு நிறமாகச்சொல்லிற்று பகவத் விஷயத்தில் ... ... யாயிறே; (ச) "ஜ்ஞாநவைராக்யராசயே."

—தேட்டருந்திறற்றேனினைத் தென்னரங்கனைத்திருமாதுவாழ்
வாட்டமில்வனமாலைமார்பனை வாழ்த்திமால்கொள்சிந்தையராய்
ஆட்டமேவியலர்ந்தழைத்தயர் வெய்துமெய்யடியார்கள்தம்
ஈட்டங்கண்டிடக்கூடுமேலது காணுங்கண்பயனாவதே. க.

ப- ரை.— தேட்டு— ஸ்வயத்நத்தால் தேடுகைக்கு, அரு — அரிதாய், திறல்— தன்னை அநுபவிக்கைக்குத் தக்க பலத்தைக்கொடுக்கும், தேனினை— தேன்போலே பரம போக்யனாய், தென்— ஸ்ப்ருஹணீயமான, அரங்கனை— திருவரங்கத்திலே நித்யவாஸம் பண்ணுமவனாய், திருமாது— பெரியபிராட்டியார், வாழ்— நித்யவாஸம் பண்ணுமதாய், வாட்டம் இல்— ஒருக்காலும் வாடாமல், வனம்— அழகு பெற்றிருக்கிற, மாலை— திருமாலை சாத்தியருளின, மார்பனை— திருமார்புடையவனை, வாழ்த்தி— அவனும் அவளுமான சேர்த்திக்கு மங்களாசாஸநம் பண்ணி, மால்கொள் சிந்தையராய்— பித்தேறின மநஸ்ஸையுடையராய், (அத்தாலே) ஆட்டம் மேவி— ஆடுகையிலே ஒருப்பட்டு, அலர்ந்து— ஊடலின் மிகுதியால்வருந்தி, அழைத்து— வாய்படைத்த ப்ரயோஜநம் பெறக்கூப்பிட்டு,

(க) "ஆநுகூல்யஸ்யஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்யவர்ஜநம்." (உ) "ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்" (ந) "ஸர்வப்ராணாஹிதேரதா:" (ச) "ஜ்ஞாநவைராக்யராசயே."

அபர்வு எய்தும்— மெய் மறந்து நிற்கிற, மெய்— அநந்ய ப்ரயோஜநரான, அடியார்கள் தம் ஈட்டம்— அடியார்கள் குழாங்களை, கண்டிட கூடுமேல்— காணக்கூடுமாகில், கண் பயன் ஆவது— கண்படைத்த ப்ரயோஜநமாகிறது, அதுகாணும்—அதுவேயாம்.

வ்யா. தேட்டரும். தாமேவந்து ஸுலபராமித்தனை யல்லது ஸ்வயத்நத்தால் காண வொண்ணாதென்கை. திறல்தேனினை. (க) "யசூதீரவஜா" என்னுமாப்போலே தன்னை யுங்கொடுத்துத் தன்னை யநுபவிக்கைக்கீடான பலத்தையுங்கொடுக்கும் தேன். தேனினைத் தென்னரங்கனை. ஸ்ப்ர்ஹணீயமான திருவரங்கத்திலே நித்யவாஸம்பண்ணுமவனாய், திருமேனியின் ஸ்பர்சத்தாலே ஒருக்காலைக்கொருக்கால் செவ்விபெறுமாய்த்து இட்ட திருமாலை. வாழ்த்தி. "வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு" என்கிறபடியே அவளும் இவனும் சேர்ந்த சேர்த்திக்கு மங்களாசாஸநம் பண்ணி. மால்கொள்சிந்தையராய். பித்தேறின மநஸ்ஸையுடையராய். ஆட்டமேவி. ஆடவேணுமென்னும் கார்யபுத்யாவன்றி யிலே ப்ரேமம் ஒட்டாமையாலே ஆட்டம் மேவி. அலர்ந்தழைத்து. அலர்ந்து கார்யப்பாடறக் கூப்பிட்டு. அயர்வெய்தும் மெய்யடியார்கள்தம். க்ரமப்ராப்தி பொறுமையாலே அறிவுகுடி போய் பரவசராய் அநந்யப்ரயோஜநராருடைய, ஈட்டம். இப்படியிருப்பார் உமக்குளத்தனை பேர் வேணுமென்ன; * அடியார்கள் குழாங்களைக் காணப்பெறில். கூடுமேல் அதுகாணும் கண் பயனாவதே. இது கூடிற்றாகில் ப்ரயோஜநம் கண்ணுக்குஇதல்லதில்லை. த்ர்ஷ்டப்ர யோஜநமிது. ... ... ... ... ... ... க.

மூ.—தோடுலாமலர்மங்கைதோளிணை தோய்ந்ததுஞ் சுடர்வாளியால்
நீடுமாமரஞ்செற்றது நிரைமேய்த்தது மிவையேநினைந்
தாடிப்பாடியரங்கவோ வென்றழைக்குந் தொண்டரடிப்பொடி
ஆடநாம்பெறிற்கங்கை நீர்குடைந்தாடும் வேட்கையென்னாவதே. உ.

ப-ரை.— தோடு உலாம்— இதழ்மிக்கிருந்துள்ள, மலர்— தாமரைப்பூவை வாஸஸ்தாநமாகவுடைய, மங்கை— பெரிய பிராட்டியாருடைய, தோள் இணை— திருத்தோள் களோடு, தோய்ந்ததும்— அணைந்தருளினதும், சுடர்— புகரையுடைய, வாளியால்— அம்பாலே, நீடு— உயர்ந்த, மாமரம்— மாமரங்களேழையும், செற்றதும்— (ஒருக்காலே துளைபாய்படி) எய்ததும், நிரை மேய்த்ததும்— பசு நிரையை மேய்த்ததும், (ஆகிய,) இவையே நினைந்து— இந்த சீலாதிகுணங்களையே நினைத்து, ஆடி— ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே இருந்தவிடத்திலிருக்கமாட்டாதேயாடி, பாடி— அதுக்குப் போக்குவிட்டுப்பாடி, ஓ அரங்க என்று அழைக்கும்— ஓ அரங்கனே என்று கூப்பிடுகிற, தொண்டர்— தாஸபூதரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய, அடி பொடி— பாதரேணுக்களிலே, நாம்—, ஆட பெறில்— அவகாஹிக்கும்படியான பாக்யத்தைப்பெற்றால், கங்கைநீர்— கங்காஜலத்திலே, குடைந்து— அவகாஹித்து, ஆடும்— நீராடுதலில் உண்டாகும், வேட்கை— ஆசையானது, என் ஆவது— என்ன ப்ரயோஜநத்தை யுடையது.

வ்யா. இரண்டாம்பாட்டு. தோடுலாமலர்மங்கை தோளிணைதோய்ந்ததும். இதழ்மிக் கிருந்த தாமரைப்பூவை வாஸஸ்தாநமாகவுடைய பெரியபிராட்டியார் திருத்தோள்களிரண்

(க) "யஜூர்மநா பலநா"

டையும் தோய்ந்ததும். தனியன் பெருவெள்ளத்திலே யிழிந்து அநுபவிக்கத் தேடினாப்போலே தோய்த்ததும். சுடர்வாளியால். புகரையுடைய அம்பாலே, நீடுமாமரம்செற்றதும். ஔன்னத்யத்தையுடைத்தான மராமரங்களேழையும், பண்டேதுளையானவற்றிலே ஓட்டினாப்போலேயாய்த்து, அநந்தமாய் பலவத்தரமான ஸப்தஸாலத்தை நிரஸித்ததும். ஆச்ரிதரை விச்வஸிப்பிக்கும் செயலிறே. நிரைமேய்த்ததும். உபயவிபூதி நாயகனாயிருந்துவைத்து கையிலே ஒருகோலையுங்கொண்டு பசுமேய்த்ததும். இவையே நினைந்து. இந்த சீலகுணங்களையே நினைந்து. இவற்றை நினைக்குமதொழிய வேறொரு ப்ரயோஜநத்தையும் கணிசியாதே. ஆடிப்பாடி. ப்ரீதிப்ரகர்ஷத்தாலே யிருக்கமாட்டாதே ஆடிப்பாடி. அரங்கவோ என்றழைக்கும். பெருமாள் திருநாமத்தைச் சொல்லி ஆற்றமாட்டாதே கூப்பிடும். தோண்டரடிப்பொடியாட நாம்பெறில். பகவத்குணவித்தரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பாதரேணுக்களிலே அவகாஹிக்கப்பெறில். எப்போதுமொக்க பகவத்ஸம்பந்தமுடையராகையாலே தீர்த்தபூதரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பாதரேணுக்களிலே அவகாஹிக்கப்பெறில், கங்கை நீர்குடைந்தாடும் வேட்கை யென்னாவதே. காதாசித்கபகவத்ஸம்பந்தமேயாய்ப் பலசிக்குத்தலைகளிலே புக்கு உபகதிப்பட்ட கங்கையாடினால் என்ன ப்ரயோஜநமுண்டு. [ ''நலந்திகழ் சடையான்'' இத்யாதி. ] பொதுவானதிறே அது.

மூ.—ஏறடர்த்ததுமேனமாய் நிலக்கீண்டது முன்னிராமனாய்
மாறடர்த்தது மண்ணளந்ததுஞ் சொல்லிப்பாடி வண்பொன்னிப்பேர்
ஆறுபோல்வருங் கண்ணநீர்கொண்டரங்கன் கோயிற்றிருமுற்றம்
சேறுசெய்தொண்டர் சேவடிச்சேழுஞ் சேறெஞ் சென்னிக் கணிவனே. ௩.

ப-ரை.— ஏறு- ரிஷபங்களேழையும், அடர்த்ததும்- (நப்பின்னைப் பிராட்டிக்காக) ஒருக்காலேகொன்றதும், ஏனம்ஆய்- மஹாவராஹமாய், நிலம்- அண்டபித்திபிலே சேர்ந்தபூமியை, கீண்டதும்— (ஸ்ரீபூமிப்பிராட்டிக்காக) ஒட்டுவிடுவித்தெடுத்ததும், முன்— இராவணன் பிராட்டியைப் பிரித்தவன்று, இராமன்ஆய் — சக்ரவர்த்திதிருமகனாகத் திருவவதரித்தருளி, மாறு- எதிரியான ராவணனை, அடர்த்ததும்- கொன்றதும், (ஆச்ரிதனான இந்த்ரனுக்காக,) மண்- மஹாபலி கைக்கொண்டபூமியை, அளந்ததும் சொல்லி- அளந்து அவனுக்குக் கொடுத்ததும் ஆகிய சரிதங்களைச்சொல்லி, பாடி- ப்ரீதிப்ரகர்ஷத்தாலே பாடி, வண்— பெருவெள்ளத்தையுடைய, பெரு- பெரிய, பொன்னி ஆறு- காவேரிபோலே, வரும்— வருகிற, கண் நீர் கொண்டு- கண்ணீராலே, அரங்கன்- அழகியமணவாளனுடைய, கோயில்- கோயிலின், (அலங்கரிக்கப்பட்டிருக்கிற,) திருமுற்றம்- உள்ளில் திருமுற்றத்தை, சேறுசெய்— சேறாக்கிவிடுகிற, தொண்டர்— தாஸபூதரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய, சே அடி— திருவடிகளால் துகைபுண்ட, செழு சேறு— அழகிய சேற்றை, என் சென்னிக்கு அணிவன்- என் சிரஸ்ஸிலே தரிப்பேன்.

வ்யா. மூன்றும்பாட்டு. ஏறடர்த்ததும். நப்பின்னைப் பிராட்டியோட்டை ஸம்ச்லேஷத்துக்கு இடைச்சுவரான ரிஷபங்களேழையு மடர்த்ததும். ஏனமாய்நிலங்கீண்டதும். ஸ்ரீபூமிப்பிராட்டியோட்டை ஸம்ச்லேஷத்துக்கு இடைச்சுவரான விரோதியாய் அவர்களுக்கு ப்ரகாரமான பூமியை ப்ரளயங்கொள்ள உதவிற்றிலனென்னும் அவத்யம் வாராதபடி மஹாவராஹமாய் அண்டபித்திபிலே புக்கு ஒட்டினபூமியை ஒட்டுவிடுவித்து. முன்னிராமனாய்மாறடர்த்ததும். பிராட்டியைப் பிரித்த பையலே எதிரியாக்கிக் கொன்றதும். மண்ணளந்ததும்.

பிராட்டியோட்டை ஸம்ச்லேஷ விரோதியைப் போக்கினாப்போலே இந்த்ரனோடு விரோதித்த மஹாபலி கைக்கொண்ட பூமியைமீட்டு எல்லைநடந்து கொடுத்ததும். சோல்லிப்பாடி. இவ் வபதானங்களைச்சொல்லி ப்ரீதி ப்ரகர்ஷத்தாலேபாடி. வண்பொன்னிப் பேராறுபோல் வருங் கண்ணநீர்கொண்டு. காவேரி, பெருவெள்ளமாய் மலைப்பண்டங்கொண்டு வருமாப்போலே அமைக்கவில்லாதே கடல்படியாக வெள்ளமிடுகிற கண்ணநீரைக்கொண்டு. அரங்கன்கோயில் திருமுற்றம் சேறுசெய்தொண்டர். அங்குப்பாங்காகத் திருவலகு திருப்பணிசெய்து வைத்தால் இவர்கள் அத்தைக் கண்ணீராலே சேறாக்குவர்களாய்த்து. சேவடிச்செழுஞ்சேறென் சென்னிக்கணிவனே. அமங்கலமான புழுதியைப்போலே அலங்கரித்துள்ள தோஷத்திர மங்களார்த்தமான ஸ்ரீவைஷ்ணவர்களின் திருவடிகளில் அழகியசேற்றை யணிவன். ... ௩.

மூ.—தோய்த்ததண்டயிர் வெண்ணெய் பாலுடனுண்டலு முடன்றாய்ச்சிகண்
டார்த்ததோளுடையெம்பிரா னென்னரங்கனுக் கடியார்களாய்
நாத்தழும்பெழ நாரணாவென்றழைத்து மெய்த்தழும்பத்தொழு
தேத்தியின்புறுந்தொண்டர் சேவடியேத்திவாழ்த்து மென்னெஞ்சமே. ௪.

ப—ரை.— தோய்த்த- தடாக்களில் தோய்க்கப்பட்டிருப்பதாய், தண்- குளிர்ந்த, தயிர்- தயிரையும், வெண்ணெய்- உறியில் சேமித்துவைத்த வெண்ணெயையும், பால்- குடங்களில் நிறைத்துவைத்த பாலையும், உடன்- ஒரே காலத்திலே, உண்டலும்- அமுது செய்தவாறே, ஆய்ச்சி- தாயாரான யசோதைப்பிராட்டி, கண்டு- பார்த்து, உடன்று- கோபித்து, ஆர்த்த- பிடித்துக்கட்டின, தோள் உடை- தோளையுடையனாய், எம்பிரான்- என்னை அடிமையாக்கினவனாய், என் அரங்கனுக்கு- எனக்கு சேஷியான அழகிய மணவாளனுக்கு, அடியார்கள் ஆய்- சேஷபூதராய், நா தழும்பு எழ- நாவானது தழும்பேறும்படி, நாரணா என்று அழைத்து- அவன் திருநாமத்தை அடைவுகெடச் சொல்லி, மெய் தழும்ப- மெய் தழும்பேறும்படி, தொழுது- ப்ரணாமம்பண்ணி, ஏத்தி- ஸ்தோத்ரம்பண்ணி, இன்பு உறும்- ஆநந்தயுக்தராயிருக்கிற, தொண்டர்- ஸ்ரீவைஷ்ணவர்களுடைய, சே அடி- ஸ்ரீபாதங்களை, என்மனம்- என்மநஸ்ஸானது, ஏத்தி- ஸ்தோத்ரம்பண்ணி, வாழ்த்தும்- மங்களாசாஸநம்பண்ணும்.

வ்யா. நான்காம்பாட்டு. தோய்த்த தண்தயிர் வெண்ணெய் பால். கடைந்துபிரித்த வெண்ணெய், அதுக்குறுப்பாகத் தோய்த்த தயிர், அதுக்கடியான பால். உடனுண்டலும். இவையடங்கலும் நிச்சேஷமாக ஒருக்காலே அமுதுசெய்தவாறே. உடன்று. உடைக்கொணவிட்டவாறே கோபித்தாள். [திங்கெகுளியளாய்] ஸ்நேஹத்துக்கு அவதியுண்டாகிலிறே கோபத்துக்கு அவதியுண்டாவது. ஆய்ச்சிகண்டு. வாயதுகையதுவாகக் கொண்டி யோடே கண்டுபிடித்தாளாய்த்து. ஆர்த்ததோளுடை யெம்பிரான். கண்டவாறே பிடித்துக் கொண்டு கட்டினாள். எம்பிரான். ஆச்ரிதஸ்பர்சமுள்ள த்ரவ்யத்தாலல்லது செல்லாமை காட்டி என்னை அநந்யார்ஹனாக்கினவன். என்னரங்கனுக்கடியார்களாய். அவதாரகாலத்தில் இழந்தாரிழவுதீரவந்து ஸுலபரான பெரிய பெருமாளுடைய செயலாலே யெழுதிக்கொடுத்தவர்களாய்த்து. நாத்தழும்பெழ. நாவானது தழும்பேறும்படி. நாரணாவென்றழைத்து. "அம்மே" என்பாரைப்போலே திருநாமத்தை அடைவுகெடச்சொல்லி. மெய்த்தழும்பத் தொழுது. ப்ரணாமம் பண்ணினபடி தோற்ற உடம்பெல்லாம் தழும்பாகச் சிதியாத்தானேட

போலே யேத்தி. இப்படிப்பட்ட செயல்களைச் சொல்லியேத்தி, இன்புறுந்தொண்டர்சேவடி மநஸ்ஸிலே வைத்தேத்துகையாலே விஷயத்தைக் கிட்டினால் பிறக்கும் நிரதிசயாநந்த யுக்தராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்ரீபாதங்களை. தொண்டர் சேவடியேத்தி வாழ்த்து மென்னெஞ்சமே. அவர்கள் தாங்கள் அகப்பட்ட ஙவநீதஸௌர்யத்தில் போகாது என்னெஞ்சு அதிலே யகப்பட்டவர்கள் தங்களை ஏத்திவாழ்த்து மித்தனை, ஏத்திவாழ்த்தும். இச்செயலுக்கு இவர்கள் நிலவராவதே! என்று ஸ்தோத்ரத்தைப்பண்ணி, இது நித்யமாக வேணு மென்று மங்களாசாஸநம் பண்ணும் என்னெஞ்சு. ... ... ... ச

மூ.—பொய்சிலைக்குரலேற் றெருத்தமிறுத்துப் போரரவீர்த்தகோன்
செய்சிலைச்சுடர் சூழொளித்திண்ண மாமதிட் டென்னரங்கனும்
மெய்சிலைக்கருமேகமொன்று தன்னெஞ்சுணின்று திகழப்போய்
மெய்சிலிர்ப்பவர்தம்மையே நினைந்தென்மனம் மெய்சிலிர்க்குமே. ௫.

ப-ரை.—பொய்—க்ருத்ரிமமாய், சிலை— கோபத்தையு முடைத்தான, குரல் — த்வநியையுடைய, ஏறு— ரிஷபங்களினுடைய, எருத்தம்— கழுத்துக்களை, இறுத்து— முறித்தும், போர்— யுத்தோந்முகமான, அரவு— காளியனாகிற ஸர்ப்பத்தை, ஈர்த்த— நிரஸித்த, கோன்— நாதனானவனாய், சிலை— கல்லினாலே, செய்— செய்யப்பட்டு, சுடர் ஒளி— மிக்கஜ்யோதிஸ்ஸை யுடைத்தாய், திண்— திண்மையையும், மா— உயர்த்தியையுமுடைய, மதிள்— மதிள்களாலே, சூழ்— சூழப்பட்டு, தென்— ஸ்ப்ருஹணீயமான, அரங்கன் ஆம் — ஸ்ரீரங்கத்தில் நித்யவாஸம் பண்ணும் அழகிய மணவாளனாகிய; மெய் — சரீரத்தில், சிலை— இந்த்ரதநுஸ்ஸோடு கூடின, கரு— கறுத்த, மேகம் ஒன்று— ஒருமேகமானது, தன் நெஞ்சுள் — என் மநஸ்ஸில், நின்று— நிலை பெற்று, போய்திகழ— மிகவும்விளங்கும்படி, மெய் சிலிர்ப்பவர் தம்மையே நினைத்து - புளகிதகாத்ரராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களையே நினைத்து, என் மனம்— என் மநஸ்ஸானது, மெய்— மெய்யே, சிலிர்க்கும்— புளகியாநின்றது.

வ்யா. ஐந்தாம்பாட்டு. பொய்சிலைக் குரலேற்றெருத்தமிறுத்து. பொய்- க்ருத்ரிமம், சிலை-கோபம். அஸுராவேசத்தாலே க்ருத்ரிமமாய்கோபத்தையுமுடைத்தாயிருக்குமுள்ள ஏறு பிறுயப்பொருது. நப்பின்னைப் பிராட்டியோட்டை ஸம்ச்லேஷத்துக்கு விரோதியானவையுமாய்ப் பொருகிறவையுமாய்ச் சிலைபோலே கோரமான த்வநியை யுடைத்தாயிருக்குமுள்ள ரிஷபங்களைக் கழுத்தை முறித்து. போரரவு ஈர்த்தகோன். திருவாய்ப்பாடியில் பசுக்களும் இடையரும் தண்ணீர் குடிக்கவொண்ணுதபடி ஜலத்தை தூஷித்துக்கிடந்த காளியன், யுத்தோந்முகனாய்ப் புறப்படும்படி கலக்கிப் பொய்கையில்நின்றும் போகவிட்டு, அத்தாலே திருவாய்ப்பாடியிலுள்ளார்க்கு நாதனானவனை. செய்சிலைச்சுடர் சூழொளித்திண்ணமா மதிள் தென்னரங்கனும். கல்லாலே செய்யப்பட்டுப் பிறரால் அபிபவிக்கவொண்ணுதபடியான மதிப்பை யுடைத்தான நிலையாலும் ஒக்கத்தாலும் விஞ்சின திருமதிள்கள் பலவுஞ் சூழ்ந்திருக்கிற கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற. மெய்சிலைக் கருமேகம். உடம்பிலே வில்லையுடைய மேகமென்னுதல்; மெய்யே வில்லோடேகூடின மேகந்தானென்னுதல். ஒன்று தன்னெஞ்சுள் நின்றுதிகழப்போய். (க) "ஶோபயந் தண்டகாரண்யம்" என்னுமாப்போலே

(க) "சோபயந் தண்டகாரண்யம்"

மாணிக்கக்குப்பியில் உள்ளுநின்றதிலே புறம்பே தெரியுமாப்போலே பெரியபெருமாளைத் தங்கள் நெஞ்சிலே எழுந்தருளுவித்து வைக்கையாலே நிழலிடாநிற்குமிறே. மெய்சிலிர்ப்பவர். உள்ளே எழுந்தருளியிருக்கிறபடியை அநுஸந்தித்து புளகித காத்ராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் தம்மை நினைத்து, என்மனம் மெய்சிலிர்க்குமே, பெரியபெருமாளை யநுபவித்து அவர்களுடைய படிப்பாட்டை, அவர்களை யநுபவித்து என்னெஞ்சு படாநின்றது. ஸ்பர்சத்ரவ்யும் பட்டதெல்லாம் படாநின்றது அவ்ருக்த த்ரவ்யம். ... ... ... ῾ ரு.

மூ.—ஆதியந்தமனந்தமற்புதமான வானவர்தம்பிரான்
பாதமாமலர்சூடும் பத்தியிலாதபாவிகளுய்ந்திடத்
தீதிலன்னெறிகாட்டி யெங்குந்திரிந்தரங்கனெம்மானுக்கே
காதல்செய்தொண்டர்க் கெப்பிறப்பிலுங் காதல்செய்யுமென்னெஞ்சமே. கூ

ப-ரை.— ஆதி— ஜகத்காரணபூதனாய், அந்தம்—ப்ரளயகாலத்திலும் ஸவஷேஷ்யாயிருக்குமவனாய், அனந்தம்—கார்யகாரணங்களிலெங்கும் வ்யாபித்து நிற்குமவனாய், அற்புதம்— ஆச்சர்யபூதனாய், ஆன — எப்போதுமொக்க உளனாயிருக்கிற, வானவர்தம்பிரான்— நித்யஸூரிகளுக்கு நாதனான ஸர்வேச்வரனுடைய, பாதம்— திருவடிகளிலே, மா— ச்லாக்யமான, மலர் தாமரைமலர்களை, சூடும்— ஸமாச்ரயிக்கைக்கீடான, பத்தி இலாத-பக்தி இல்லாத, பாவிகள்— பாபிகளானவர்கள், உய்ந்திட— உஜ்ஜீவிக்கும்படி, எங்கும்— தேசமெங்கும் புக்கு, திரிந்து— ஸஞ்சரித்து, தீது இல்— குற்றமில்லாத, நல் நெறி— நல்வழிபோம்படி, காட்டி— தாங்களநுஷ்டித்துக் காட்டி, எம்மான்— என்னை அநந்யார்ஹனாக்கின, அரங்கனுக்கு— பெரியபெருமாள் திருவடிகளிலே, காதல்செய்— பக்தியையுடையராயிருக்கிற, தொண்டர்க்கு— ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு, என் நெஞ்சம்— என்மநஸ்ஸானது, எ பிறப்பிலும்— அநேக ஜன்மங்களிலே, (அவர்களுக்கு அடிமைசெய்யவேணுமென்று,) காதல்செய்யும்— ஆசைப்படாநின்றது.

வ்யா. ஆரும்பாட்டு. ஆதி. ஜகத்காரணபூதன். அந்தம். ப்ரளயகாலத்திலும் ஸவஷேஷனாய் நிற்குமவன். அனந்தம். காரணாவஸ்தையிலும் கார்யாவஸ்தையிலு மொக்க வ்யாபித்து நிற்குமவன். அற்புதம். காரணாவஸ்தையோடு ஸதவஸ்தனாய் நிற்குமத்தோடு வாசியற நிற்குமிவைகள் வேறொருவிடத்தில் காணவொண்ணாதென்னும்படியிருக்கும் ஆச்சர்யபூதன். ஆனவானவர்தம்பிரான். ஆனபோதும் அபர்ந்தபோதும் எப்போதுமொக்க உளனாயிருக்கும் நித்யஸூரிகளுக்கு நாதன். உபயவிபூதிநாதனென்றபடி. பாதமாமலர்சூடும் பத்தியிலாத. அவன் திருவடிகளாகிற செவ்வித்தாமரையைச்சூடும் பக்தியையுடையராயிருக்கையாய்த்து கர்த்தவ்யம்; அதில்லாத. பாவிகளுய்ந்திட. பக்தியில்லாத மஹாபாபத்தைப் பண்ணி, (க) "ஸஐவ" என்னும்படியிருக்கிற தேசமெங்கும் புக்கு ஸஞ்சரித்து அவர்களை பக்தியுண்டாக்கி உஜ்ஜீவிப்பிக்கைக்காக. தீதிலன்னெறிகாட்டி. தீமையோடேகூடின நெறியன்றிக்கே, சேதநர் நல்வழிபோம்படி தாங்களாசரித்துக் காட்டி. எங்குந்திரிந்து. புகக்கடவதல்லாத தேசமெங்கும் புக்கு ஸஞ்சரித்து. அரங்கனெம்மானுக்கே காதல்செய் தொண்டர்க்கு. என்னை அநந்யார்ஹமாக்கின பெரியபெருமாள் திருவடிகளிலே பக்தி

(க) "அஸந்நேவ"

யுண்டாயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு. எப்பிறப்பிலுங் காதல்செய்யுமென்னெஞ்சமே. அநேக ஜந்மங்கள் பிறந்து அவர்களுக்கடிமை செய்யவேணுமென்று ஆசைப்படாநின்ற தென்னெஞ்சு. ... ... ... ... ... ... ... சு.

மூ.—காரினம்புரைமேனிநற்கதிர் முத்தவெண்ணகைச் செய்யவாய்
ஆரமார்பனரங்கனென்னு மரும்பெருஞ்சுடரொன்றினைச்
சேருநெஞ்சினராகிச்சேர்ந்து கசிந்திழிந்தகண்ணீர்களால்
வாரநிற்பவர்தாளிணைக்கொரு வாரமாகுமென்னெஞ்சமே. எ.

ப-ரை.— கார் இனம் புரை— மேகஜாலத்தையொத்த, மேனி— திருமேனியையும், நல்— நல்ல, கதிர்— ஒளியையுமுடைய, முத்தம்— முத்துக்களையொத்த, வெள்— வெளுத்த, நகை— திருமுத்துக்களையும், செய்ய— சிவந்த, வாய்— திருப்பவளத்தையும், ஆரம்— முக்தாஹாரம்பூண்ட, மார்பன்— திருமார்பை யுடையராய், அரங்கன் என்னும்— பெரியபெருமாளென்னும் திருநாமத்தையுடையராய், அரு பெரு சுடர்— நிரவதிகதேஜோரூபராய், ஒன்றினை— அத்விதீயரானவரை, சேரும்— கிட்டவேணுமென்கிற, நெஞ்சினர் ஆகி— மனஸ்ஸையுடையராய்க்கொண்டு, சேர்ந்து— அவரைக் கிட்டி, கசிந்து இழிந்த— கரைந்துபெருகின, கண் நீர்கள் வாரநிற்பவர்— கண்ணீர் ப்ரவஹிக்கும்படி நிற்பவர்களுடைய, தாள் இணைக்கு— திருவடிகளுக்கு, என் நெஞ்சம்— என்மனஸ்ஸானது, ஒரு வாரம் ஆகும்— ஒப்பற்ற பக்தியுடையதாநின்றது.

வ்யா. ஏழாம்பாட்டு. காரினம்புரைமேனி. "தொக்கமேகப்பல் குழாங்கள்" "கார்த்திரளனையமேனி" என்கிறபடியே அழகிய திருமேனியையு முடையராய். நல்கதிர்முத்தவெண்ணகைச் செய்யவாய். கண்டாரைப் போகாமல் துவக்கவல்ல வெண்மையையுடைய முத்துநிரைபோலே யிருக்கும் தந்தபங்தியையும், இதுக்குப் பரபாகமான திருவதரத்தில் பழுப்பையுமுடையராய். ஆரமார்பன். "பெரிய வரைமார்பில் பேராரம்பூண்டு" என்று ஐச்வர்ய ப்ரகாசகமாம்படி இட்டுப் பூணவேண்டும்படியுள்ள ஹாரத்தையும் திருமார்பிலேயுடையரா யிருக்கிற. அரங்கனென்னும் அரும் பெருஞ்சுடரொன்றினை. பெரியபெருமாளென்று உபயவிபூதியிலும் ப்ரஸித்தராய் நிரவதிகதேஜோரூபராய் அத்விதீயரானவரை. சேரும்நெஞ்சினராகி. அவர்வந்து கிட்டும்போது விலக்காமை யடியாகப் பிறந்த பக்தியையுடையராய். சேர்ந்துகசிந்திழிந்த கண்ணீர்களால் வாரநிற்பவர் தாளிணைக்கு. அவனைக்கிட்டி நிரதிசய பக்தியுக்தராய்க் கண்ணுங் கண்ணீருமாய் நிற்குமவர்களுக்கு பக்திபாரவச்யத்தாலேயிறே என்று அங்குத்தைக்கும் இவர்களுக்குமாய் நில்லாதே இவர்களுடைய திருவடிகளுக்கு. ஒருவாரமாகு மென்னெஞ்சமே. அநந்யப்ரயோஜநமாய் நில்லாநின்ற தென்னெஞ்சு. ... ... ... ... ... ... ... எ.

மூ.—மாலையுற்ற கடற்கிடந்தவன் வண்டுகிண்டு நறுந்துழாய்
மாலையுற்றவரைப் பெருந்திருமார்பனை மலர்க்கண்ணனை
மாலையுற்றெழுந் தாடிப்பாடித்திரிந் தரங்கனெம்மானுக்கே
மாலையுற்றிடுந் தொண்டர்வாழ்வுக்கு மாலையுற்ற தென்னெஞ்சமே. அ.

ப-ரை.— மாலை உற்ற— அலையெறிகிற, கடல்— திருப்பாற்கடலிலே, கிடந்தவன்— கண்வளர்ந்தருளுமவனாய், வண்டு— வண்டுகள், கிண்டு— குடையாநின்றுள்ள,

ருகளுக்கு ராஜாவான ஸுக்ரீவனை ஸ்நேஹபூர்வகமாகக்கட்சிகொண்டு, அவனுக்காக அதிபராக்ரமனான வாலியை நிரஸித்து. இலங்கைநகர். லங்கைக்கு நிர்வாஹகனென்றும் ராவணேச்வரனென்றும் மோஹித்திருக்கிற வனுடைய அபிமாநமும் சீற்றமுமடங்கும்படி, திவடிவாளிலே நெருப்பையிட்டுச் சுடுவித்தவனை. தில்லைநகரித்யாதி. அக்காலத்தி லநுபவிக்கப் பெற்றிலோமென்னும் இழவுதீர இங்கே நித்யஸந்நிஹிதனாய் வர்த்திக்கிற ஸர்வேச்வரனை சக்ரவர்த்தித்திருமகனை. ஏத்துவார். அவனுடைய வடிவழகிலும் ஸௌலப்யத்திலீடுபட்டேத்துமவர்கள் திருவடிகளை ஏத்தினேனே. ... ...

மூ.—குரைகடலையடலம்பால் மறுகவெய்துகுலைகட்டி மறுகரையையதனாலேறி
எரிநெடுவேலரக்கரொடு மிலங்கைவேந்த னின்னுயிர்கொண் டவன்றம்பிக்கரசுமீந்
திருமகளோடினிதமர்ந்த செல்வன்றன்னைத்தில்லைநகர்த் திருச்சித்திரகூடந்தன்னுள்
அரசமர்ந்தானடிசூடு மரசையல்லா லரசாகவெண்ணேன் மற்றரசுதானே. எ.

ப-ரை.— குரை—சப்தியாநின்றுள்ள, கடலை—ஸமுத்ரத்தை, அடல்— சத்ருக்களை வருத்தத்தக்க, அம்பால்—அம்பாலே, மறுக—கலங்கும்படி, எய்து—, குலைகட்டி- அணைகட்டி, அதனால்—அந்த அணையாலே, மறுகரையை ஏறி- அந்தக்கரையிலேபோய், எரி— சத்ருக்களை எரிக்கக்கடவதாய், நெடு- பெரிய, வேல் வேலையுடையரான, அரக்கரொடும்— ராக்ஷஸருடையவும், இலங்கைவேந்தன்— லங்காதிபதியான ராவணனுடையவும், இன்— இனிய, உயிர்- ப்ராணனையும், கொண்டு- அபஹரித்து, அவன் தம்பிக்கு- அவன் தம்பியான ஸ்ரீ விபீஷணாழ்வானுக்கு, அரசீந்து- ராஜ்யத்தைக்கொடுத்து, பிரிவெல்லாம் மறக்கும்படி திருமகளோடு- பிராட்டியோடே, இனிது- இனிதாக, அமர்ந்த - அமர்ந்தருளிய, செல்வன்றன்னை- ஐச்வர்யமுடையவனை, தில்லைநகர்த்திருச்சித்திர கூடந்தன்னுள்—, அரசமர்ந்தான் ராஜ்யம்பண்ணுமவனுடைய, அடிசூடும்—திருவடிகளை சிரஸ்ஸிலே தரிக்கையாகிற, அரசையல்லால்- அரசாட்சியையொழிய, மற்றரசு- இதராஜ்யத்தை, அரசாகவெண்ணேன்- அரசாட்சியாக நினையேனென்கிறார்.

வயா. ஏழாம்பாட்டு. குரைகடலை. கோஷத்தையுடைத்தான கடலை, சத்ருக்களென்றால் எப்போதோவென்று மேல்விழக்கடவதான அம்பைவிட்டு மறுகும்படியாக வெய்து. குலைகட்டி. அஞ்சின கடலானது என்மேலே தூர்த்துக்கொள்ளீரென்ன, அதின்மேலே மலைகளையிட்டுத் தூர்த்துவழிசெய்து அந்தக்கரையிலேபோய். எரிநெடுவேல். சத்ருக்களை எரிக்கக்கடவதாய் நெடிதான வேலையுடைய ராக்ஷஸரோடே லங்காதிபதியான ராவணனை அவனுகந்த ப்ராணனை ஹரித்து, அவன் தம்பிக்கு ராஜ்யத்தைக்கொடுத்து, பிராட்டியோடேகூட, பிரிந்த பிரிவெல்லாம் மறக்கும்படி இனிதமர்ந்தருளிய ஐச்வர்ய முடையவன்றன்னை. தில்லைநகரித்யாதி. ராஜ்யம்பண்ணியிருக்கிறவன் திருவடிகளைத் தொடுக்கையாகிற ராஜ்யமொழிய அதுக் கெதிர்த்தட்டாக ஸ்வதந்த்ரத்தைப் பார்க்கும் ராஜ்யத்தை ராஜ்யமாகவேண்டேன். ... ... ... ... ... எ.

மூ.—அம்பொனெடுமணிமாட வயோத்தியெய்தியரசெய்தி யகத்தியன்வாய்த் தான்முன்கொன்றான்
தன்பெருந்தொல்கதைகேட்டு மிதிலைச்செல்வியுலகுய்யத் திருவயிறுவாய்த்தமக்கள்
செம்பவளத்திரள்வாய்த் தன்சரிதைகேட்டான் றில்லைநகர்த் திருச்சித்திரகூடந்தன்னுள்
எம்பெருமான்றன்சரிதைசெவியாற்கண்ணாற்பருகுவோ மின்னமுதமதியோமன்றே. அ.

ழ்வானை விடுவித்து, வானேற்றி—வீரஸ்வர்க்கத்திலே யேற்றுவித்து, முனிவன்வேண்ட—துர்வாஸச்சாபத்தாலே, திறல்விளங்கும்—பகைவரைவெல்லுகையில் மிக்கஸாமர்த்யமுடையரான, இலக்குமனை இளையபெருமாளை, பிரிந்தான்றன்னை—விட்டுப் பிரிந்த சக்ரவர்த்தித் திருமகனை, தில்லைநகர்த் திருச்சித்திர கூடந்தன்னுள் உறைவானை- திருச்சித்திரகூடத்திலே நித்யவாஸம்பண்ணுமவனை, மறவாதவுள்ளந் தன்னையுடையோம்—மறவாத மநஸ்ஸையுடையரான நாம், மற்று—இனிமேது, உறு— எப்பெருமானை யநுபவிக்கப் பெறுமையால் வாக்கடவ, துயரமடையோம்—துக்கத்தையடைய மாட்டோமென்கிறார்.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. செறிதவச்சம்புகனித்யாதி. மிக்கதபஸ்ஸை யுடையனுய் சூத்ரனுன சம்பூகனைத் தலையறுத்து. செழுமறையோனுயிர்மீட்டு. விலக்ஷணனுன ப்ராஹ்மண னுடைய புத்ரன்ப்ராணனைமீட்டு, அகஸ்த்யபகவான் கொடுத்த பெருவிலையனுன ஹாரத்தை யுஞ் சாத்தியருளித் திருவயோத்யையிலே புகுந்து. வைணுவனான ஸ்ரீ சத்ருக்நாழ்வானை யிடுவித்து வீரஸ்வர்க்கத்திலே குடியேற்றுவித்து. முனிவனித்யாதி. துர்வாஸாவினுடைய சாபத்தாலே, (க) "த்விதீயம்மேந்தராத்மாநம்" என்கிறபடியே - தம்முடைய ப்ராண பூதரான இளையபெருமாளுக்கு விடைகொடுத்து, அப்படிப்பட்ட தன்னைப் பின்புள்ளார் காணப்பெறுத இழவுதீரத் திருச்சித்திரகூடத்திலே நித்யவாஸம் பண்ணுகிறவனை. மறவாத வுள்ளந்தன்னை யுடையோம். இப்படிப்பட்ட ஸௌலப்யத்தை அநவரதபாவனை பண்ணி யிருக்கிற நமக்கு "எம்பெருமானை யநுபவிக்கப் பெற்றிலோம்" என்கிற இழவு இனியில்லை. ... ... ... ... ... ... ... ௯.

மூ.—அன்றுசராசரங்களைவைகுந்தத் தேற்றியடலரவப்பகையேறியசுரர்தம்மை
வென்றிலங்குமணிநெடுந்தோள் நான்குந்தோன்றவிண்முழுது மெதிர்வரத்தன்றாமமேவி
சென்றினிதுவீற்றிருந்த வம்மான்றன்னைத்தில்லைநகர்த் திருச்சித்திரகூடந்தன்னுள்
என்றுநின்றானவனிவனென் றேத்திநாளுமிறைஞ்சுமினோ வெப்பொழுதுந்தொண்டீர்நீரே.

ப—தை.— அன்று - தீர்த்தம் ப்ரஸாதித்தருளுகிறவன்று, சராசரங்களை—, வைகுந்தத்து—பரமபதத்திலே, ஏற்றி—போகவிட்டு, அடல்—வலியையுடைய, அரவம்—ஸர்ப்பஜாதிக்கெல்லாம், பகையேறி—சத்ருவான பெரியதிருவடியைமேற்கொண்டு, அசுரர் தம்மை—அஸுரவர்க்கத்தை, வென்று—ஜயிக்கையாலே, இலங்கு—விளங்குகிற, மணி—அழகிய, நெடும் - நீண்ட, தோள்நான்கு - நான்கு திருத்தோள்கள், தோன்ற - தோன்றவும், விண் முழுதும் - பரமபதத்திலுள்ளாரெல்லாம், எதிர் வர—எதிர் கொண்டுவர, தன்—தன்னுடைய, தாமம்—ஸ்தாநத்திலே, மேவிச்சென்று—போய்ப்புக்கு, இனிது—இனிதாக, ஸிம்ஹாஸநத்திலே, வீற்றிருந்த—தன்பெருமைதோற்ற எழுந்தருளியிருந்த, அம்மான்றன்னை—ஸர்வேச்வரனை, தில்லைநகர்த் திருச்சித்திரகூடந்தன்னுள்—, என்றும் நின்றான்—நித்யவாஸம்பண்ணுகிறவனை; தொண்டீர்நீர்-அநந்யப்ரயோஜநரான நீங்கள், அவன்-அப்படிப்பட்டவன், இவன்—இப்படிப்பட்டவன், என்று ஏத்தி—என்று ஸ்துதித்து, நாளும்—நாள்தோறும், இறைஞ்சுமின்—ஆச்ரயித்து க்ருதார்த்தராகுங்கோ ளென்கிறார்.

---

(க) "த்விதீயம்மேந்தராத்மாநம்."

வ்யா. பத்தாம்பாட்டு. அன்று சராசரங்களை. (க) "அபிவ்ருக்ஷா: பரிம்லாநா:" என்று—வ்யதிரேகத்திலே அலைபட்ட தரிக்கருணகையாலே. (உ) "நோச்ச்வஸத்ததயோத்யாயாம் ஸுஸூக்ஷ்மமபித்ருச்யதே । திர்யக்யோநிகதாச்சாபி ஸர்வே ராமமநுவ்ரதா:" என்கிறபடியே—இளையபெருமாளோபாதி பரமபதத்துக்குப் போகவிட்டு. அடலவப் பகையேறி. ஸர்ப்பஜாதிக்கு ஜந்மசத்ருவான பெரியதிருவடியை மேற்கொண்டு அஸுரவர்க்கத்தைவென்று அந்த வீரஸ்ரீ விளங்குகிற திருத்தோள்களாலேகூட அங்குள்ளாரநுசுக்கும்படி எழுந்தருளி பரமபதத்திலேபோய்ப் புக்கு தன் மேன்மையெல்லாம் தோற்றும்படியான ஈச்வரனை. தில்லைநகரித்யாதி. அவ்விருப்பிலொன்றுங் குறையாமே காலதத்வமுள்ளதனையுமிங்கே நமக்காக நித்யவாஸம் பண்ணுமவனை அநந்ய ப்ரயோஜநரான நீங்கள் ஆச்ரயித்து க்ருதார்த்தராகுங்கோள். ... ... ... ... கய.

மூ.—தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுட் டிறல்விளங்குமாருதியோடமர்ந்தான்றன்னை
எல்லையில்சீர்த்தயரதன்றன் மகனாய்த்தோன்றிற்றது முதலாத்தன்னுலகம்புக்கதீருக் [ய்த
கொல்லியலும்படைத்தானைக் கொற்றவொள்வாள் கோழியர்கோன்குடைக்குலசேகரன்சொற்செ
நல்லியலின்றமிழ்மாலை பத்தும்வல்லார் நலந்திகழ் நாரணனடிக்கீழ்நண்ணுவாரே. கக.

ப-ரை.— தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள் -, திறல்விளங்கு-திறல்விளங்காநின்றுள்ள, மாருதியோடு - சிறியதிருவடியோடே, அமர்ந்தான்றன்னை - நித்யவாஸம்பண்ணுகிறவனை, எல்லையில்—அளவில்லாத, சீர்—நல்லகுணங்களையுடையனான, தயரதன்றன்—தசரதசக்ரவர்த்திக்கு, மகனாய்த் தோன்றிற்றது முதலா—பிள்ளையாகப்பிறந்தது முதலாக, தன்னுலகம்புக்கதீறு—தன்னுடைச்சோதிக்கு எழுந்தருளினது முடிவாக, கொல்லியலும்—கொலையைமுயலாநின்றுள்ள, படை—வேலையுடைய, தானை—ஸேனையையுடையராய், கொற்றம்—வெற்றியையும், ஒள்—அழகையுமுடைய, வாள்—வாளையுடையராய், கோழியர்—உறையூரிலுள்ளார்க்கு, கோன் - தலைவராய், குடை - வெண்கொற்றக்குடையையுமுடையரான, குலசேகரன் - ஸ்ரீ குலசேகரப்பெருமாள், சொற்செய்த - அருளிச்செய்ததாய், நல் இயல் - அழகிய இயலையுடைத்தாய், இன் - இனியதாய், தமிழ் - த்ராவிடபாஷையாய், மாலை - மாலாரூபமான, பத்தும் - இப்பத்துப் பாட்டுக்களையும், வல்லார் - சொல்லவல்லவர்கள், நலம்திகழ் - நன்மைவிளங்காநின்றுள்ள, நாரணனடிக்கீழ் - ஸர்வேச்வரன்திருவடிகளை, நண்ணுவார் - கிட்டப்பெறுவர்கள். [ அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம். ]

வ்யா. நிகமத்தில். தில்லைநகரித்யாதி. (ங) "ஸாகேதநாத் த்ருமஜுஷி" என்று அங்குப்போகவேணுமென்ற திருவடியை விடமாட்டாமே இங்கேவந்து நித்யவாஸம் பண்ணுகிறவனை. எல்லையில்சீரித்யாதி. பஹுகுணனான சக்ரவர்த்திக்கு, (ச) "விதராம்ரோசயாமாஸ" என்று பிள்ளையாய்ப்பிறந்தது தொடக்கமாகப் பரமபதம்புக்கது முடிவாகவுண்டான ஸ்ரீராமாயணகதையை. கொல்லியலும்படைத்தானை. கொலையை முயலாநின்றுள்ள வேலையுடைய படையையுடையராய். கொற்றவொள்வாள். வெற்றியையும் அழகையுமுடைய

(க) "அபிவ்ருக்ஷா: பரிம்லாநா:" (உ) "நோச்ச்வஸத்ததயோத்யாயாம் ஸுஸூக்ஷ்மமபித்ருச்யதே । திர்யக்யோநிகதாச்சாபி ஸர்வே ராமமநுவ்ரதா:"
(ங) "பாவோ நாந்யத்ர கச்சதி." (ச) "பிதரம்ரோசயாமாஸ."

வாயையுடைய கோழியர்கோன். கோழியர்க்குக்கோன். கோழி - உறையூர். சோழராஜ வானவன். குடைக்குலசேகரன்சொற்செய்த. வெண்கொற்றக்குடையை யுடையரான ஸ்ரீ கு சேகரப்பெருமா ளருளிச்செய்த. நல்லியலின் தமிழ்மாலை பத்தும்வல்லார். அழகிய இயல் யுடைய தமிழ்மாலை பத்தும்வல்லார். நலந்திகழ்நாரணனடிக்கீழ் நண்ணுவாரே. பரமபத திலே விளங்காநின்றுள்ள ஸர்வேச்வரன் திருவடிகளைக் கிட்டப்பெறுவர்கள். ... ௧

குலசேகரப்பெருமாள் திருவடிகளே சரணம்.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

அடிவரவு.—அங்கணெடு வந்தெதிர்ந்த செவ்வரிநற் தோத்தலர்பூம் வலிவணக்கு தனமருவு குரைகடலை அம்பொன் செறிதவ அன்றுசராசுரம் தில்லைநகர் பூநிலாய.

ஆக திருமொழி - ௧௦ - க்கு பாட்டு, ௧௦௩.

பெருமாள் திருமொழி வ்யாக்யாநம் ஸம்பூர்ணம்.

ஸ்ரீ

# திருச்சந்தவிருத்தச் செய்யுளகராதி.



திருச்சந்தவிருத்தச் செய்யுளகராதி

முற்றுப்பெற்றது.

ஸ்ரீ:.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

## திருமழிசைப்பிரான் அருளிச்செய்த திருச்சந்த விருத்தத்தின்

# தனியன்களுக்கு

பிள்ளைலோகஞ்சீய ரருளிச்செய்த

## வ்யாக்யாநம்.

---

அவதாரிகை.— தருச்சந்தப்பொழில். இதில் - திருச்சந்தவிருத்தஞ் செய்தருளின ருமழிசைப்பிரான் அவதாரஸ்தலமான *திருமழிசை வளம்பதியும் ஒருதேசமே! என்று திலே ஆழ்ங்காற்பட்டபடி சொல்லுகிறது.

மூ.—தருச்சந்தப் பொழில்தழுவு தாரணியின் துயர்தீரத்
திருச்சந்தவிருத்தஞ் செய்திருமழிசைப்பரன் வருமூர்
கருச்சந்துங் காரகிலுங் கமழ்கோங்கு மணநாறும்
திருச்சந்தத்துடன்மருவு திருமழிசைவளம்பதியே.

வ்யா. தருச்சந்தப்பொழில்தழுவு தாரணியின்துயர்தீர. தரு-கல்பகதரு. சந்து-சந்த ். *சந்தநப்பூமலர்சோலையிறே; இரண்டு சோலையாலும் சூழப்பட்ட. தாரணி-பூமி. பொ ழில்சூழ்வியிருக்கிற பூமியிலுண்டான மநுஷ்யர் துக்கம்தீர. அவர்கள் பகவத்விஷயத்தை றந்திருக்கிற துக்கம்தீர. அவர்கள்தான்போக்ய போகோபகரண போகஸ்தாநங்களை விரு பி பகவத்விமுகராயத் திருப்பது. அதுக்குமேலே "அறியார் சமண ரயர்த்தார்பவுத் ர் சிறியார் சிவப்பட்டார்" என்கிறபடியே அவர்கள் அந்யசேஷபூதராய் அநர்த்தப்படுகிறது; வற்றை நிவர்த்திப்பித்து ஸத்வவ்ர்த்தராக்குகைக்காக வாய்த்து- "திருச்சந்த விருத்தம்" ன்கிற திவ்யப்ரபந்தம் செய்தருளிற்று. அதிலே "புண்டரீகபாதபுண்யகீர்த்தி நும்செவி டுத்தாண்டு நும் முதுவினைத்துயருள் நீங்கியுய்ம்மினோ" என்றும், "நன்மாலை வாழ்த்தி ாழ்மினோ" என்றும்-பகவத் பஜநத்தையும் தேவதாந்தராஜ்ஞாநாசக்திகளை, *காணில்* காந்நம்* வண்டு *போதுகளிலே ஸுவ்யக்தமாக தர்சிப்பித்தும் திருத்தியருளிற்று. திருச்ச நவிருத்தம். சந்தோரூபமான வ்ர்த்தமென்றபடி. "கலித்துறை, விருத்தம், வெண்பா" ன்றுப்போலே சொல்லக்கடவதிறே. ஏவம்வித ப்ரபந்த நிர்மாணகராய்த் திருமழிசைக்கு ாதரான ஆழ்வாரவதரித்த ஊரிருக்கும்படி சொல்லுகிறது. கருச்சந்தும் கார்கிலும்கமழ். ூகரத்தில் சந்தநாகருக்களாலும் பரிமளிதமாய்.

கோங்குமணநாறும். கோங்கென்கிற வ்ருக்ஷத்தினுடைய புஷ்பபரிமளத்தைப் போலே யத்தாய் எல்லாவற்றிலும் மிக்க பரிமளத்தை யுடைத்தாகையாலே * வைபோகதுக்கெஸிருப்பாளாய் ஸ்ரீ என்று திருநாமத்தை யுடையளான பெரியபிராட்டியாருடன் பொருந்தி யிருக்கும் திருமழிசை. வளம்பதியே. இந்த விபூதியிலே இதொரு தேசமே! கோங்குநன்மணபரிமளமாகவுமாம். வளம்- அழகும், ஸம்பத்தும். ஆழ்வாராலே ஸமுந்நதமாயிருக்கிறது.

அ.—உலகுமழிசையும். இதில் திருமழிசை- "மஹீஸார க்ஷேத்ரம்" என்று மஹத்தைச் சொல்லுகிறது.

மூ.—உலகுமழிசையு முள்ளுணர்ந்துதம்மில்
புலவர்புகழ்கோலால்தூக்க—உலகுதன்னை
வைத்தெடுத்த பக்கத்தும் மாநீர்மழிசையே
வைத்தெடுத்த பக்கம் வலிது.

வ்யா. உலகுமழிசையும். லோகங்களையும் விலக்ஷணமான திருமழிசையையும். உள்ளுணர்ந்து. மாஹாத்ம்யங்களை மநஸ்ஸிலே மநநம்பண்ணி. தம்மில் புலவர். பரஸ்பரம் மஹர்ஷிகளான மஹாகவிகள். புகழ்க்கோலால்தூக்க. இவற்றின் புகழை யென்னுதல்; புகழ்க்கோலாலேயென்னுதல். தூக்க- துலைப்படுத்தித் தூக்க. உலகுதன்னை வைத்தெடுத்தபக்கத்தும். லோகத்தைவைத்தெடுத்த துலையைகாட்டிலும். மாநீர்மழிசையே வைத்தெடுத்தபக்கம்வலிது. மிக்க ஜலஸம்ருத்தியையுடைய மஹீஸார க்ஷேத்ரத்தை வைத்தெடுத்த துலையே அதுலமாயிருந்தது. அகஸ்த்ய தூர்வாஸாதிகளிருந்த பக்கம்போலே ஆழ்வாருடைய வைபவமுந் தாழ்ந்துகாட்டிற்றிறே. ஜகந்நாதனிறே அங்கேஸ்த்யஸந்நிதிபண்ணுவது. (க) "ஸ்ரீமத் பதஸ்ஜ மஹாயம் விஷ்ணோர் ஸந்நிதம் ஸநாதநம்" என்கிறபடியே ஸந்நிதியுள்ள தேசமாகவிருப்பது; அத்தாலே வைத்தெடுத்தப்பக்கம் வலிதாயிற்று. (உ) "யாகு ா ந-ஜி தாவைஷ்ஹி" என்னக்கடவதிறே. மாநீர்மழிசை-நீர்த்தம் திருமன்னுறைமண்டபமாஸ்தலம். "மழிசைக்கென்னமர் மருந்து" என்னக்கடவதிறே. * பக்தியான பாவநமான பக்திஸார வதாரத்துக்கு அநுகுணமாயிருக்குந் தேசமென்று அந்த இவ்வதேசவைபவம் சொல்லிற்றுப்பந்து.

(க) "காருபாஷேவ ராவி நஹுமுநவாம் நஜபுஷ்ய ।
ஷமவக்ஷிஸஹேவ ஸேஷ்பா நாட கிக்ஷகாமயிஷ்ட ॥"

என்கிறே தநிய வைபவமிருப்பது.

பிள்ளைலோகஞ்ஜீயர் திருவடிகளே சரணம்.

---

(க) "சிந்தயேத் ஸஜகந்நாதம் விஷ்ணும் ஜிஷ்ணும் ஸநாதநம்" (உ) "நாத்தா ஜாவிதாலகுமஹீ" (௩) "துல்யாமலவேநாபி ஸ்வர்கம் நபுநர்பவம் । பகவத்ஸங்கிஸங்கஸ்ய மர்த்யாநாம் கிமுதாஸிஷஃ"

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

திருமழிசைப்பிரான் அருளிச்செய்த

திருச்சந்தவிருத்தத்திற்கு

# பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த

## வ்யாக்யாநாவதாரிகை.

ஆழ்வார் திருமழிசைப் பிரானுகிறார் க்ருஷ்ணாவதாரம் போலேயாய்த்துப் பிறந்தபடியும் வளர்ந்தபடியும்;— யதுகுலத்திலே பிறந்து கோபகுலத்திலே வளர்ந்தாப் போலே, ரிஷிபுத்ரராய்ப் பிறந்து தாழ்ந்தகுலத்திலேயாய்த்து வளர்ந்தது. க்ருஷ்ணனும் யதுகுலத்திலே பிறந்தாப்போலே அங்கே வளர்ந்தருளினனாகில் ராமாவதாரந்தோபாதியா மித்தனை யென்று பார்த்தருளி, இடையரும் இடைச்சிகளும் பசுக்களும், "நம்மிலே யொருத்தன்" என்னும்படி தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கைக்காகவாய்த்து கோபஸஜாதியனாய் வளர்ந்தருளிற்று; அப்படியே ஆழ்வாரும் பகவதபிப்ராயத்தாலே தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கைக்காகத் தாழ்ந்தகுலத்திலே வளர்ந்தருளினாராய்த்து. இவ்வாழ்வாருக்கு ஸர்வேச்வரன் நிர்ஹேதுகமாக * மயர்வறமதிநலமருளி, தன்னுடைய திவ்யாத்மஸ்வரூபத்தையும், ததாச்ரயமான ஜ்ஞாநசக்த்யாதி கல்யாணகுணங்களையும், உபயத்துக்கும் ப்ரகாசகமான திவ்யமங்கள விக்ரஹத்தையும், அநுக்கலங்காரமான கிரீடாதிபூஷணவர்க்கத்தையும், அத்தோடு விகல்பிக்கலாம்படியான சங்கசக்ராதி திவ்யாயுதங்களையும், இவையிற்றைக் காட்டிலேறிந்த நிலாவாகாமே அநுபவிக்கிற லக்ஷ்மீப்ரப்ருதி மஹிஷீவர்க்கத்தையும், அச்சேர்த்தியே தங்களுக்கு தாரகாதிகளாக வுடையரான பரிஜநபரிபர்ஹத்தையும், இப்போகத்துக்கு வர்த்தகமான பரமபதத்தையும் ஸாக்ஷாத்கரிப்பித்து ப்ரக்ருதிபுருஷாத்மகமான லீலாவிபூதியினுடைய ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களை லீலையாகவுடையனா யிருக்கிறபடியையுங் காட்டிக்கொடுத்து, இப்படி உபயவிபூதிநாதனை எம்பெருமான் தன் பெருமையைக்காட்டிக் கொடுக்கையாலே பகவதநுபவைகபோகராய், (க) "𑌨𑍋𑌪𑌜𑌨𑌂 𑌸𑍍𑌮𑌰𑌨𑍍𑌨𑌿𑌦𑌂 𑌶𑌰𑍀𑌰𑌮𑍍" என்கிறபடியே ஸம்ஸாரதோஷத்தை அநுஸந்திக்க இடமில்லாதபடி ஈச்வரன் தம்மை அநுபவிக்கையாலே மார்க்கண்டேயாதிகளைப்போலே சிரகாலம் ஸம்ஸாரத்திலே யெழுந்தருளியிருந்த விவர், ப்ராப்தமுமாய் ஸுலபமுமான விஷயத்தை ஸம்ஸாரிகளிழக்கைக்கு ஹேதுவென்னென்று அவர்கள்பக்கலிலே கண்வைத்தார். தாம்பகவத்விஷயத்தில் ப்ரவணராயிருக்கிறாப்போலே ரஜஸ்தமஸ்ஸுக்களாலேபிறந்த அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநங்களாலே, (உ) "𑌯𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌣𑌂 𑌵𑌿𑌦𑌧𑌾𑌤𑌿 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍍" என்றும், (ங) "𑌯𑍁𑌗𑌕𑍋𑌟𑌿𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌣𑌿 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌮𑌾𑌰𑌾𑌧𑍍𑌯 𑌪𑌦𑍍𑌮𑌭𑍂𑌃। 𑌪𑍁𑌨𑌸𑍍𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌧𑌾𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌵𑌾𑌨𑌿𑌤𑌿 𑌶𑍁𑌶𑍍𑌰𑍁𑌮" என்றும் (ச) "𑌵𑍇𑌦𑌾 𑌮𑍇 𑌪𑌰𑌮𑌂 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌵𑍇𑌦𑌾 𑌮𑍇 𑌪𑌰𑌮𑌂 𑌧𑌨𑌮𑍍" என்றும் (ரு) "𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌃 𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌧𑍇 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾" என்றும் குருபாதகாதிகளாலும் க்ஷேத்ரஜ்ஞதயா ஸம்ப்ரதிபந்நரான ப்ரஹ்மருத்ராதிகள் பக்கலிலே, (சு) "𑌏𑌕𑍋 𑌰𑍁𑌦𑍍𑌰𑌃" (எ) "𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑌃 𑌸𑌮𑌵𑌰𑍍𑌤𑌤𑌾𑌗𑍍𑌰𑍇"

(க) "நோபஜநம்ஸ்மரந்நிதம்சரீரம்" (உ) "யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம்" (ங) "யுககோடிஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்யபத்மபூ: புநஸ்த்ரைலோக்யதாத்ருத்வம் ப்ராப்தவாநிதிசுச்ரும" (ச) "வேதாமேபரமம்சக்ஷு: வேதாமேபரமந்தநம்" (ரு) "மஹாதேவஸ்ஸர்வமேதேமஹாத்மா" (சு) "ஏகோருத்ர:" (எ) "ஹிரண்யகர்ப்பஸ்ஸமவர்த்ததாக்ரே"

என்று இந்யாதிப்ரசம்ஸா வாக்யங்களாலும் தாமஸபுராணங்களாலும் பரத்வ புத்தியைப்பண்ணி, சேதநர் பகவத்விமுகராய் அநர்த்தப்படுகிற படியைக்கண்டு பரமகாருணிகரான ஆழ்வார், பொதுக்கட்டாமையாலே நிர்தோஷ ப்ரமாணங்களாலும் ஸம்யக்ந்யாயங்களாலும் பரஸ்பரவிருத்தமான, அந்தஷ்டி நிரஸநபூர்வகமாக பகவத் பரத்வத்தை உபதேசித்தவிடத்திலும் அவர்கள் அதிமுக்கரித்தியாமையாலே, நாம் இவர்களைப்போலன்றியே ஜகத்காரண பூதனுப் பரமபத நிலயனுன ஸர்வேச்வரனே ப்ராப்யனென்று அவன் ப்ரஸாதத்தாலே அறியப்பெற்றோம்; இனி இவனை ஆச்ரயிக்குமிடத்தில் பரவ்யூஹங்கள் தேசவிப்ரகர்ஷத்தாலே அஸ்மதாதிகளுக்கு ஆச்ரயணீயமாகமாட்டாது; அவதாரங்கள் காலவிப்ரகர்ஷதையாலே ஆச்ரயணீயங்களாகமாட்டாது; இரண்டுக்கும் தூரஸ்தரான பாக்யஹீநர்க்கும் இழக்கவேண்டாதபடி அர்ச்சாபாதிநனுப் ஸர்வாபராதஸஹனுப் ஸர்வாபேக்ஷிதப்ரதனுப் வர்த்திக்கும் அர்ச்சாவதாரத்தின் சீர்மையை அநுஸந்தித்து ஆகிஞ்சந்யத்தை அதிகாரமாக்கி, ப்ராக்தநைய அதிகாரிவிசேஷணமாக்கி, பகவத்க்ருபையை நிரபேக்ஷோபாயமென்று அநுபவித்து அவனை யாச்ரயித்து அவன் க்ருபைபண்ணி முகங்காட்ட இவ்விஷயத்தை லபிக்கப்பெற்றோமென்று தமக்குப் பிறந்த லாபத்தைச்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

அ. முதற்பாட்டு. (க) "ஹவீதஷ்டஹூரடஹூ" என்கிறபடியே ப்ரதான காரணமாய் ஸகுணமானப்ருதிவ்யாதி பூதபஞ்சகங்களுக்கு அந்தராத்மாவாய் நின்றிருக்கிற ஜகத்துக்கு உபாதாநகாரணம். இவ்வர்த்தம் வேதாந்தப்ரமேயம் வைப்பதாத பாஹ்யகுத்ருஷ்டிகளால் நினைக்கவொண்ணாதென்கிறார்.

மூ.—பூநிலாயவைந்துமாய்ப் புனற்கணின்ற நான்குமாய்த்
தீநிலாயமூன்றுமாய்ச்சிறந்த காலிரண்டுமோய்
மீநிலாயதொன்றுமாகி வேறுவேறுதன்மையாய்
நீநிலாயவண்ணநின்னையார் நினைக்கவல்லரே க.

ப-ரை.— பூ - பூமியிலே, நிலாய - வர்த்திக்கிற, ஐந்துமாய் - சப்தஸ்பர்சரூபரஸகந்தங்களைந்துமாய், புனற்கண்நின்ற - ஜலத்திலேவர்த்திக்கிற, நான்குமாய் - சப்தஸ்பர்சரூபரஸங்கள் நான்குமாய், தீநிலாய - அக்நியிலேவர்த்திக்கிற, மூன்றுமாய் - சப்தஸ்பர்சரூபங்கள் மூன்றுமாய், சிறந்த — சேதநர்க்கு ஆதாரமாயிருக்கும் பலத்தையுடைய, கால்நிலாய — காற்றிலேவர்த்திக்கிற, இரண்டுமோய் — சப்தஸ்பர்சங்களிரண்டுமோய், மீநிலாயது — ஆகாசத்திலே வர்த்திக்கிற, ஒன்றுமாகி — சப்தகுணமொன்றுமாகி, வேறுவேறு தன்மையாய் — தேவாதிகளுக்கு அந்தராத்மாவாய், நீ - சிதசித்சரீரியானநீ, நிலாயவண்ணம் - காரணமான வஸ்துவிலே நிற்கும் ப்ரகாரத்தையுடையனாய், நின்னை - சிதசித்விசிஷ்டமாய்க்கொண்டு ஜகதுபாதாந காரணமாய்நிற்கிற வுன்னை, ஆர் நினைக்கவல்லரே — நினைக்கவல்லார்.

வ்யா. பூநிலாயவைந்துமாய். பூமியிலே வர்த்திக்கிறசப்தாதி குணங்களைந்துமாய். (க) "ஶப்தவத்ஶ வாயுவீ" "தஸ்ய ஶப்தா ஶப்தகுணாஸ்தத:" என்று—பஞ்சகுணங்களாய் கந்தமாயிருக்க; சப்தாதிகளைந்தும் அதுக்கு குணமாகச்சொல்லுவானென்னென்னில்; (உ) "ஶப்தாதிபிர் ஶப்தகுணை: ஶஹதரை ஸம்பூதான்ஸ்த்ரோபஸ்பர்ஶகை:" என்கிறபடியே

(க) "பூதேப்போண்டம்" (ர) "கந்தவதீப்ருதிவீ" "தஸ்யாகந்தோகுணோமத:."
(உ) "சப்தாதிபிர்குணைப்ரஹ்மம் ஸம்யுதாம்யுத்தரோத்தரை."

காரணகுணநுவர்த்தியாலே சப்தஸ்பர்சரூப ரஸகந்தங்களையுங் கூட்டிச்சொல்லுகிறது.
புனற்கணின்ற நான்குமாய். அப்பிலேவர்த்திக்கிற சப்தஸ்பர்சரூபரஸங்களுமாய். (௧) "சப்தஸ்பர்சௌ ரூபரஸௌ ச ஜலஸ்யைவ குணா: ஸ்ம்ருதா:" என்கிறபடியே தத்குணப்ரஸமாயிருக்க, அதிலும் காரணகுணநுவர்த்தியாலே சப்தஸ்பர்சரூபங்களையும் கூட்டிச்சொல்லுகிறது.
தீநிலாயமூன்றுமாய். (௨) "ஜ்யோதிஷோ குணத்ரயம் ரூபம் ஸ்பர்சம் ச சப்தம் ச" என்கிறபடியே அக்நிகுணமான ரூபத்தோடே சப்தஸ்பர்சங்களைக் கூட்டி "மூன்றுமாய்" என்கிறது.

சிறந்தகாலிரண்டுமாய். ஸ்வஸஞ்சாரத்தாலே சேதநர்க்காதாரமான பலத்தையுடைய வாயுவினுடைய குணமிரண்டுமாய். (௩) "வாயோர் த்வௌ குணௌ ஸ்பர்சசப்தௌ" என்கிறபடியே வாயுகுணமான ஸ்பர்சத்தோடே ஆகாசகுணமான சப்தத்தையுங் கூட்டிச்சொல்லுகிறது.

மீநிலாயதொன்றுமாகி. மீதிலேவர்த்திக்கிற சப்தகுணமொன்றுமாய். (௪) "ஆகாசம் சப்தலக்ஷணம்" என்கிறபடியே ஆகாசகுணமொன்றையும் சொல்லுகிறது. உச்சமான பூதபஞ்சகங்களுக்குக் காரணமான ஏற்றத்தாலும் ஸ்வவ்யதிரிக்தங்களுக்கு அவகாசப்ரதாநம் பண்ணு மேற்றத்தாலும் "மீது" என்று - ஆகாசத்தைச்சொல்லுகிறது.

அண்டகாரணம் ப்ருதிவ்யாதிகளாயிருக்க சப்தாதி குணங்களோடே ஸமாநாதிகரித்தது ப்ருதிவ்யாதிகளோபாதி தத்குணங்களும் ஸ்வாதீநமாயிருக்கையாலே. ப்ருதிவ்யாதிகளோடு ஸாமாநாதிகரண்யம் சரீராத்மபாவ ஸம்பந்த நிபந்தநம்; குணங்களோடு ஸாமாநாதிகரண்யம் அவற்றினுடைய ஸத்தாதிகள் ஸ்வாதீநமாயிருக்கையாலே. அண்டத்துக்கு மஹதஹங்காரங்களும் காரணமாயிருக்க பூதங்களைத்தையுஞ் சொல்லுவானென்னென்னில்; (௫) "தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாச: ஸம்பூத:" என்கிற ச்ருதிச்சாயையாலே யருளிச்செய்கிறார். (௬) "பூதேப்யோऽண்டம்" என்று ரிஷிகள் சொல்லுகிற பஞ்சீகரணத்தாலே - ஸூக்ஷ்மசிதசித்விசிஷ்ட ப்ரஹ்மகாரணமாகையாலே சிதசித்பூதமான புருஷஸமஷ்டியையும் நினைக்கிறது. இவ்வளவாக ப்ராக்ருதஸ்ருஷ்டி சொல்லிற்றாய்த்து.

வேறுவேறுதன்மையாய். அண்டாந்தர்வர்த்திகளாய் ஒன்றுக்கொன்று விலக்ஷணமான தேவாதிபதார்த்தங்களுக்கும் ஆத்மாவாய். ஆத்மாக்களுடைய ஸ்வரூபம் ஏகரூபமாயிருக்க "வேறுவேறு" என்கிறது கர்மத்தால்வந்த தேவாதிரூப பேதங்களைப்பற்ற. நீநிலாயவண்ணம். சிதசிச்சரீரியான நீ கார்யகாரணவர்க்கத்திலே நிற்கிற ப்ரகாரம். அதாகிறது - அசித்கதமான பரிணாமமென்ன, சேதநகதமான அஜ்ஞாநது:காதிகளென்ன இவை உன்பக்கல் ஸ்பர்சியாதபடி நிற்கை. நின்னை. சிதசித்விசிஷ்டமாய்க்கொண்டு ஜகதுபாதாந காரணமானவுன்னை. ஆர்நினைக்கவல்லர். நினைக்கவல்லாரார். பரமாணுக்கள் உபாதாநகாரணமென்னும் வைசேஷிகர் நினைக்கவோ; ப்ரதாநம் உபாதாநகாரணம், சிதசித்ஸம்ஸர்க்கத்தாலே

(௧) "ஸம்பவந்தித்தோம்பாம்ஸி ரஸாதாராணிதானிது" (௨) "ஜ்யோதிருத்பத்யதேவாயோஸ்தத்ரூபம் குண உச்யதே." (௩) "பலவாந்பகவாந்வாயுஸ்தஸ்ய ஸ்பர்சோ குணோமத:" (௪) "ஆகாசம் சப்தலக்ஷணம்" (௫) "...ஸ்மாதாத்மந ஆகாசஸ்ஸம்பூத:" (௬) "பூதேப்யோऽண்டம்."

ஜகந்நிர்வாஹமென்னும் ஸாங்க்யர் நினைக்கவோ ; நிமித்தோபாதாநங்களுக்கு பேதஞ்சொல்லும் சைவர் நினைக்கவோ ; சிதசிதீச்வர தத்வத்ரயங்களும் ப்ரஹ்மபரிணாமமென்னும் பேதாபேதிகள் நினைக்கவோ ; நிர்விசேஷவஸ்துவ்யதிரிக்தங்கள் அபாமார்த்தமென்னும் மாயாவாதிகள் நினைக்கவோ ; வேதாந்த ப்ரமேயம் கைப்பட்டாரொழிய ஆர்நினைக்கவல்லர் என்கிறார்.

அ.—இரண்டாம்பாட்டு. (க) "ஸைஷாமெஜோஷ்ஜாஸுஷுஷா" என்கிறபடியே—காரணபூதனான அன்னுமேல ஸ்ரேஷ்டமான சேதநர்க்கு கர்மயோகம்முதலாக பாபக்தியர்யந்தமான பகவத்ஸமாராதநத்துக்கும் சுபாச்ரயமாகைக்கும் அந்த பரபக்தியுக்தர்க்கு ஸர்வவிதபோக்யமாகைக்கும் க்ருஷ்ணனாய்வந்தவதரிக்கும் உன்னுடைய நீர்மையை யார் நினைக்க வல்லரென்கிறார்.

மூ.—ஆறுமாறுமாறுமாயோரைந்து மைந்துமைந்துமாய்
ஏறுசீரிரண்டு மூன்றுமேழுமாறு மெட்டுமாய்
வேறுவேறுஞானமாகி மெய்யினோடு பொய்யுமாய்
ஊறொடோசையாயவைந்து மாயவாயமாயனே. உ.

ப-ரை.— ஆறும் — அத்யயநாதிகர்மங்களாறும், ஆறும் — வஸந்தாதிருதுக்களாறும், ஆறுமாய்—ஆக்நேயம்முதலான யாகங்களாறுமாய், ஓரைந்து—பஞ்சமஹாயஜ்ஞத்துக்கும், ஐந்தும்—பஞ்சாஹுதிக்கும் ஆராத்யனாய், ஐந்துமாய்—பஞ்சாக்நிக்கு அந்தராத்மாவுமாய், ஏறு—ச்லாக்யமான, சீர் இரண்டும்—உபாஸநரூப பகவத்ஜ்ஞாநமும் இதரவிஷய வைராக்யமுமாகிற இரண்டுகுணங்களும், மூன்றும்—ஐச்வர்ய கைவல்ய பகவத்ப்ராப்திகள் மூன்றும், ஏழும்—விவேகம் விமோகம் முதலான ஏழுகளும், ஆறும்—ஜ்ஞாநம் பலம் முதலான ஆறும், எட்டுமாய்—அபஹதபாப்மத்வாதி எண்குணங்களுமாய், வேறுவேறுஞானமாகி—நிர்மலாந்தக்கரணரல்லாத பாக்யஹீநர்க்கும் பாஹ்யகுத்ருஷ்டி. ஸ்ம்ருதிகளுக்கும் ப்ரவர்த்தகனாய், மெய்யுமாய்—முமுக்ஷுக்களுக்கு மெய்யனாய், பொய்யுமாய்-ப்ரயோஜநாந்தரபரர்க்கு க்ஷுத்ரப்ரயோஜநங்களைக் கொடுத்துத் தான் அகலநிற்கையாலே பொய்யனாய், ஊறொடோசையாய ஐந்துமாய—சப்தஸ்பர்சரூபரஸ கந்தங்களைந்துமாய், ஆயன்—கோபஸஜாதீயனாய் வந்து திருவவதரித்த, மாயனே—ஆச்சர்யபூதனே!, உன்னை உள்ளபடி பரிச்சேதிக்கறிய வல்லாரார்ரென்கிறார்,

வ்யா. ஆறுமாறுமாறுமாய். அத்யயநாதி ஷட்கர்மங்களும், அத்யயநத்தால் ஜ்ஞாதவ்யமான கர்மாநுஷ்டாநத்துக்கு யோக்யமான வஸந்தாதிருதுக்களாறும், அநுஷ்டேயமான ஆக்நேயாதிஷட்யாகங்களும். இது ஸர்வகர்மங்களுக்கு முபலக்ஷணம். இவை ஆறு என்றது — இவற்றோடே ஈச்வரனை ஸமாநாதிகரித்தது. அத்யயநாதிகளிலே, (உ) "ததாதிவேஷ்டியோமதை" என்கிறபடியே - சேதநரை மூட்டியும் அவற்றுக்கேகாந்தங்களான காலங்களுக்கு நிர்வாஹகனாயும், அநுஷ்டேய கர்மங்களுக்கு ஆராத்யனாயு மிருக்கையாலே ஸமாநாதிகரித்துச் சொல்லுகிறது. ஓரைந்து மைந்துமைந்துமாய். கீழ்ச்சொன்ன கர்மத்துக்கு அதிகாரஸம்பத்துக் கூடலாய், ப்ரதாநமான பஞ்சமஹாயஜ்ஞத்துக்கும், பஞ்சாஹுதிக்குமு ஆராத்யனாய், பஞ்சாக்நிக்கு அந்தராத்மாவாயு மிருக்குமவன். பஞ்சமஹாயஜ்ஞமாவது—

(க) "ஸஹயஜ்ஞைப்ரஜாஸ் ஸ்ருஷ்ட்வா" (உ) "ததாமிபுத்தியோகந்தம்"

(ச) "ஜேவயஜ்ஞ: வித்ருயஜ்ஞ: ஸம்தபஜ்ஞ: உதகஜ்யஜ்ஞ: வ்யாஹ்ருதய:" என்கிறவை. பஞ்சாஹுதிகளாவன - ப்ராணத்யாஹுதிகள். பஞ்சாக்நிகளாவன - கார்ஹபத்யாஹவநீய தக்ஷிணாக்நிகளும் ஸப்யாவஸத்யங்களும். ஏழுச்சிரண்டும். (உ) "பலே ஜனா பாவவே நஷ்தி" என்னும்படியே - விஹிதகர்மாநுஷ்டானத்தாலே மோக்ஷவிரோதி பாபம்போனால் இவன்பக்கலிலே பிறக்கும் உபாஸநரூப பகவஜ்ஜ்ஞானமும் தத்கார்யமான இதரவிஷயவைராக்யமுமென்கிற இரண்டு குணமும். * மாற்பால் மனஞ்சுழிக்கையும், மங்கையர்தோள் கைவிடுகையும். மூன்றும். உபாஸநபலமான ஐச்வர்ய கைவல்ய பகவத் ப்ராப்திகள். அன்றிக்கே, ஜ்ஞானவைராக்ய ஸாத்யமான பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகள் மூன்றும். ஏழும். உத்தமானகர்மயோகாதி பரபக்தி பர்யந்தமான அவைகளை பலிக்கக்கடவ மனோநைர்மல்யத்துக் கடியான விவேகாதி ஸப்தகமும். அதாகிறது—விவேகவிமோகாப்யாஸ க்ரியாகல்யாண நவஸாதாநுத் தர்ஷங்கள். அதாகிறது - மனோநைர்மல்ய ஹேதுவான விவேகாதி ஸப்தகயுக்தமாகிய க்ரியாசப்த வாச்யமான விஹித கர்மாநுஷ்டானத்தாலே உபாஸநநிஷ்பத்தியைச் சொல்லுகிறது. ஆறும். உக்தபக்தி வர்த்தகமாய் ஸ்வயம் ப்ராப்யமான ஜ்ஞான பலைச்வர்ய வீர்யசக்தி தேஜஸ்ஸுக்களாறும். எட்டோய். * அபஹத பாப்மத்வாதி குணாஷ்டகமுமாய். (௩) "ஸ்ரு நாம ஸர்வோ வண்மாஹி நிஷ்பத்யதே" என்கிறபடியே இது ப்ராப்யாந்தர்கதமிறே.

வேறுவேறுஞானமாகி. நிர்மலாந்த:கரணரல்லாத பாக்யஹீநர்க்கும் பாஹ்யகுத்ருஷ்டிஸ்ம்ருதிகளுக்கும் ப்ரவர்த்தகனுய். மெய்யினோடுபொய்யுமாய். கீழ்ச்சொன்ன முமுக்ஷுக்களுக்கு மெய்யனுய், ப்ரயோஜநாந்தரபரரான க்ஷேத்ரர்க்கு ப்ரயோஜநங்களைக்கொடுத்து தான் அகல நிற்கையாலே பொய்யனுய். ஊரோடோஸ்ரயாய வைந்துமாய. பரமபக்தி யுக்தராயிருப்பார்க்கு ஸர்வவித போக்யமானவன். "ஊறோடோசை" என்று - சப்தாதிகளுக்கும் உபலக்ஷணம். "உண்ணுஞ்சோறு பருகுநீர்" என்றும், "செலேப் கண்ணிபரும் பெருஞ்செல்வமும்" என்னக்கடவதிறே. ஆயமாயனே. கோபஸஜாதீயனுயவதரித்த ஆச்சர்யபூதனே. அதாவது - நான் நின்ற நிலையிலேநின்று ஆச்ரிதர்க்கு உபகரிக்கையன்றிக்கே, இவ்வளவுகள விக்ரஹத்தை ஸம்ஸாரிஸஜாதீயமாக்கி வந்தவதரித்து, உபாஸகர்க்கு சுபாச்ரயமாய் ஸித்தோபாய பரிக்ரஹம் பண்ணினர்க்கு விஷயாந்தரங்களில் நின்று மீட்டுதானே போக்யமுமாய், * காணவாராயென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்திருக்கும் பரமபக்தியுக்தர்க்கு ஸர்வவித போக்யமுமான வடிவுகள். அவதாரந்தான் * ஸாதுபரித்ராணத்துக்கும் தர்மஸம்ஸ்தாபநத்துக்குமாகவிறே. ... ... ... உ.

அ. மூன்றும்பாட்டு. முதற்பாட்டிற் சொன்ன ஜகத்காரணத்வ ப்ரயுக்தமான லீலாவிபூதியோகமென்ன, இரண்டாம்பாட்டிற் சொன்ன உபாயத்துக்கு பலமான நித்ய விபூதியோகமென்ன, ஆக இந்த உபய விபூதியோகத்தை நிர்ஹேதுக க்ருபையாலே தேவரீர் காட்ட வருத்தமற நான் கண்டாப்போலே வேறு ஸ்வஸாமர்த்யத்தால் காணவல்லாரில்லையென்கிறார்.

மூ.—ஐந்துமைந்துமைந்து மாகியல்லவற்றுளாயுமாய்
ஐந்துமூன்றுமொன்றுமாகி நின்றவாதிதேவனே!

---

(உ) "தேவயஜ்ஞ: பித்ருயஜ்ஞோ பூதயஜ்ஞோ மநுஷ்யயஜ்ஞோ ப்ரஹ்மயஜ்ஞ:"
(௩) "தர்மேணபாபமபநுததி" (ச) "ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே"

ஐந்துமைந்துமைந்துமாகி யந்தரத்தணைந்துநின்
றைந்துமைந்துமாய நின்னையாவர்காணவல்லரே. ௫.

ப--ரை.— ஐந்தும் - ஆகாசாதிபூதங்களைந்தும், ஐந்தும் - ச்ரோத்ராதிஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும், ஐந்துமாகி—வாய்முதலிய கர்மேந்த்ரியங்களைந்துமாகி, ஐந்தும்—ஆகாசாதிபூதங்களைந்துக்கும் காரணமான தந்மாத்ரைகளைந்தும், மூன்றும்—அஹங்காரம் மஹாந் ஸூக்ஷ்மமூலப்ரக்ருதி என்கிற மூன்றும், ஒன்றுமாகி-மநஸ்ஸுமாய், அல்லவற்றுள்-இப்படி இருபத்துநாலாகப் பிரிக்கப்பட்டிருக்கிற ப்ரக்ருதியிலே ஸம்ஸ்ருஷ்டமான ஜீவாத்மாக்களுக்கு, ஆயுமாய்—அந்தர்யாமியாய், நின்ற—இவையழிந்தகாலத்திலும் ஸூக்ஷ்மசிதசித் விசிஷ்டனாய்க்கொண்டுநின்ற, ஆதிதேவனே - காரணபூதனே, ஐந்தும் - அப்ராக்ருதமாய் திவ்யசக்திமயமான திவ்யவிக்ரஹமும், ஐந்தும்—அதுக்கு இருப்பிடமான ஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும், ஐந்தும் - கர்மேந்த்ரியங்களைந்துமாகிற இவற்றுக்கு, ஆகி—நிர்வாஹகனாய், ஐந்தும்—சப்தாதிபோக்யங்களைந்தும், ஐந்துமாய—போகஸ்தாநம் போகோபகரணம் வைகுந்தத்தமரர் முனிவர் முமுக்ஷுக்கள் என்கிற ஐந்துகோடியுமாய், அந்தரத்து - பரமபதத்திலே, அணைந்துநின்று—பொருந்திநின்று, நின்னை - உபயவிபூதி யுக்தனாயிருக்கிற வுன்னை, யாவர்காணவல்லரே - ஸ்வஸாமர்த்யத்தாலே காணவல்லாரார்.

வ்யா. ஐந்துமைந்துமைந்துமாகி. ஆகாசாதிபூதங்களைந்தும், ச்ரோத்ராதிஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும், வாகாதி கர்மேந்த்ரியங்களைந்துமாகி. ஐந்து மூன்றும். ஆகாசாதிபூதங்களைந்துக்கும் காரணமான தந்மாத்ரைகளைந்தும், ஒன்றுக்கொன்று காரணமான அஹங்காரமென்ன மஹானென்ன ஸூக்ஷ்ம மூலப்ரக்ருதியென்ன இவை மூன்றும். ஒன்றுமாகி. (க) "ஜநவந" என்கிறபடியே - உத்தமான ஸகல பதார்த்தங்களுக்கும் பந்த ஹேதுவாகைக்கும் மோக்ஷ ஹேதுவாகைக்கும் ஹேதுவான மநஸ்ஸுமாய். அல்லவற்றுளாயுமாய். இப்படி சதுர்விம்சதியாக விபக்தமான ப்ரக்ருதியிலே ஸம்ஸ்ருஷ்டரான ஜீவாத்மாக்களுக்கு அந்தர்யாமியாய். அலலவற்றுள். அசித் வ்யாவ்ருத்தரான சேதநர்பக்கலிலே. நின்றவாதிதேவனே. ஸ்தூலசிதசித்விசிஷ்டனாய் நின்றாப்போலே, இவை அழிந்தகாலத்திலும், ஸூக்ஷ்ம சிதசித்விசிஷ்டனாய்க்கொண்டு நின்ற காரணபூதனானவனே. ஐந்துமைந்துமைந்துமாகி இதுக்குக்கீழே லீலாவிபூதியோகத்தைக்காட்டித் தந்தபடியைச் சொன்னாராய், மேல் திவ்யமங்கள விக்ரஹத்தையும் நித்யவிபூதியோகத்தையும் காட்டித் தந்தபடியைச் சொல்லுகிறார். அப்ராக்ருதமாய் பஞ்ச சக்திமயமான திவ்ய விக்ரஹத்தையும், ததாச்ரயமானஜ்ஞாநேந்த்ரியங்களைந்தும் கர்மேந்த்ரியங்களைந்து மென்கிற இவற்றுக்கு நிர்வாஹகனாய். இத்தால்—திவ்ய விக்ரஹயோகஞ்சொல்லிற்று.

அந்தரத்தணைந்துநின்று ஐந்துமைந்துமாய. சப்தாதிபோக்யங்களைந்தும், போகஸ்தானமென்ன, போகோபகரணமென்ன, "வைகுந்தத்தமரரும் முனிவரும்" என்ற இரண்டுகோடியும், முக்தரும் என்ற அஞ்சுகோடியுமாய். அந்தரத் தணைந்துநின்று. (க) "ஸதேவ்யோமந்" என்றும், (உ) "பரமேவ்யோமந்" என்றும் ச்ருதி ப்ரஸித்தமான பரமபதத்திலே பொருந்திநின்று. இப்படி உபயவிபூதியுக்தனான நின்னையாவர் காணவல்லரே. ஸ்வஸாமர்த்யத்தால் காணவல்லாரார். மநுஷ்யரிற்காட்டில் ஜ்ஞாநாதிகரென்று தேவர்கள் காணவோ; உபாஸநாநிஷ்டரென்று ப்ரஹ்மாதிகள் காணவோ; ப்ரஹ்மபாவநா நிஷ்டரென்று ஸநகாதிகள் காணவோ. ... ... ... ... ... ... ... ௫.

(க) "மநுஷ்ய." (க) "பரமவ்யோம." (உ) "பரமாகாசம்."

மித்வத்தாலும் ஜகதேககாரணத்வத்தாலும் ஸகலாதாரனாயிருக்கிற ஸ்வபாவத்தைத் திரளவறியு மித்தனையொழிய, தேவரீர்காட்ட நான்கண்டாப்போலே ஏவம்விதமென்று ஒருவர்க்குமறியவொண்ணாதென்கிறார்.

மூ—நின்றியங்குமொன்றிலா வுருக்கடோறுமாவியாய்
ஒன்றியுள்கலந்துநின்றநின்ன தன்மையின்னதென்
றென்றும் யார்க்கு மெண்ணிறந்தவாதியாய் நின்னுந்திவாய்
அன்றுநான்முகற்பயந்த வாதிதேவனல்லையே. ரு.

ப-ரை.— நின்று—ஸ்தாவரமாய் நின்றும், இயங்கும்—ஜங்கமமாய் ஸஞ்சரிக்கும், ஒன்றிலா—உஜ்ஜீவநப்ரகாரங்களில் ஒன்றுக்கும் உறுப்பன்றிக் கேயிருக்கிற, உருக்கள்தோறும்—ஸகலசரீரங்கள்தோறும், ஆவியாய்—ஆத்மாவாய், ஒன்றி—எதிர்த்தலையில் ஹேயதையைப்பாராதே பொருந்தி, உள்கலந்துநின்ற—ஏகதத்வமென்னும்படி கலந்துநின்ற, நின்ன தன்மை— உன்னுடையஸ்வபாவம், இன்னதென்று—இப்படிப்பட்டதென்று, என்றும் —நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும், யார்க்கும்—பேரறிவுடையரான ப்ரஹ்மாதிகளுக்கும், எண் இறந்த—மநஸ்ஸால் நினைக்கைக்குமெட்டாத, ஆதியாய்—ப்ரதாநகாரணனவனே, அன்று—தேவாதி ஸகலபதார்த்தங்களும் அழிந்துகிடந்தவன்று, நின் உந்திவாய்—உன்னுடைய திருநாபீகமலத்திலே, நான்முகன்பயந்த—ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்த, ஆதிதேவனல்லையே— ஜகதேககாரணனல்லையோ, உன் ஸ்வரூபத்தை உள்ளபடி காணவல்லாரார்.

வ்யா. நின்றியங்குமொன்றிலா வுருக்கள்தோறும். ஸ்தாவரஜங்கமாத்மகமாய், தந்தாமுடைய உஜ்ஜீவநப்ரகாரங்களில் ஒன்றுக்கு முறுப்பன்றிக்கேயிருக்கிற ஸகல சரீரங்கள் தோறும். ஒருபடிப்பட்டிராத சரீரங்களென்றுமாம். ஆவியாயொன்றியுள் கலந்துநின்ற. ஆத்மாவாய், எதிர்த்தலையில் ஹேயதையைப் பாராதேபொருந்தி, ஸமாப்ய - உள்புகுந்து, ஏகத்ரவ்யமென்னும்படி கலந்துநிற்கிற. நின்னதன்மை. உன்னுடைய ஸ்வபாவம். அதாகிறது - தத்கததோஷங்கள் தட்டாதே நிற்கையும், விபுவானதான் இவற்றிலே ஸமாப்யவ்யாபரிக்கையுமாகிற இவ்வாச்சர்யம். இன்னதென்று. ஏவம்விதமென்று. த்ருஷ்டாந்த முகத்தாலே உபபந்நமென்று. என்றும்யார்க்கும். வர்த்தமானகாலத்தோடு பவிஷ்யத்காலத்தோடு வாசியற அதிசயிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளுக்கும். எண்ணிறந்த. மநோரதத்துக்கும் அவ்வருகாய்நின்ற. ஆதியாய். ப்ரதிநிவ்யவஹாரங்களிலே வந்தால் ப்ரதாநனானவனே. ஸாக்ஷாத்கரிக்கும்போது, “ நிற்கின்றதெல்லாம் நெடுமால் ” என்கிறபடியே விசேஷ்யமான தேவரீர் ப்ரதாநராய் சேதநாசேதநங்கள் விசேஷணமாத்ரமாயிருக்கையும், வ்யவஹாரத்தில் வந்தால், (க) “ வசஸாம்வாச்யமுத்தமம் ” என்கிறபடியே சப்தவாச்யங்களில் ப்ரதாநனாய் நிற்கையும். நின்னுந்திவாயன்று நான்முகற்பயந்த வாதிதேவனல்லையே. இதுகிடக்க, ஜகதேககாரணனாய் நிற்கிறநிலைதான் ஒருவர்க்குமறிய நிலமோ. * ஒன்றுந்தேவில்படியே தேவாதி ஸகலபதார்த்தங்களும் அழிந்துகிடந்தவன்று உன்னுடைய திருநாபீகமலத்திலே, (உ) “ யோப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் ” என்கிறபடியே ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்த ஜகதேககாரணனல்லையோ. திருநாபீகமலோத்பத்தியைப்பார்த்தால் ப்ராக்ருதமென்னவொண்ணாது, க்ஷேத்ரஜ்ஞனான ப்ரஹ்மாவுக்கு உத்பாதகமாகையாலே அப்ராக்ருதமென்னவொண்ணாது, இவ்வாச்சர்யத்தை ஏவம்விதமென்று கர்மவச்யராய் பரிமிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளறியவோ. ... ... ... ... ... ... ... ரு.

(க) “ வசஸாம்வாச்யமுத்தமம் ” (உ) “ யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம் ”

அ.—ஆரும்பாட்டு. ஸகலாந்தர்யாமித்வத்தால் வந்த ஸகலாதாரத்வம் சொல்லேற்றாய் நின்றது கீழ்; லோகத்திலே பொன்னுக்கொன்று தாரகமாயும் தார்யமாயும் போருகிற தில்லையோவென்று பகவதபிப்ராயமாக; அந்த பதார்த்தங்களுக்கும் தேவரீரே தாரகமென்று வேதாந்த ப்ரஸித்தமான இவ்வர்த்தம் தேவரீர் பக்கலிலே வ்யவஸ்திதமன்றோ, இவ்ஸர்வாதாரத்வமும் ஸ்வஸாமர்த்யத்தாலே வேறொருவர்க்கும் காணமுடியாதென்கிறார்.

மூ.—நாகமேந்துமேருவெற்பை நாகமேந்துமண்ணினை
நாகமேந்துமாகமாகமாக மேந்துவார்புனல்
மாகமேந்துமங்குல் தீயோர்வாயுவைந்தமைந்துகாத்
தேகமேந்திநின்றநீர்மை நின்கணேயியன்றதே. ௬.

ப—ரை.— நாகம்ஏந்து - ஸ்வர்க்கத்தைதரிக்கிற, மேருவெற்பை - மேருபர்வதத்தையும், நாகம் ஏந்து - திக்கஜங்களாலேதரிக்கப்படுகிற, மண்ணினை - பூமியையும், நாகம் - துக்கசந்தரஹிதமான ஸுகத்தாலே, ஏந்து—பூர்ணமான, மாகம்—பரமவ்யோமத்தையும், மாகம்—பரமபதத்தையும், மாகமேந்து—ஆகாசத்தாலே தரிக்கப்படுகிற, வார்புனல்—ப்ரவாஹத்தையுடைய கங்கையையும், மாகமேந்து - ஆகாசம்தரிக்கின்ற, மங்குல் - மேகத்தையும், தீ - வைச்வாநராக்நியையும், ஓர் - அத்விதீயமான, ஐந்துவாயு - பஞ்சவ்ருத்திப்ராணனையும், அமைந்துகாத்து—பொருந்திநின்றுரக்ஷித்து, ஏகம்—ஒருவஸ்துவானது, ஏந்திநின்ற—தரியாநின்றதென்னுச்ருதிசொல்லுகிற, நீர்மை—ஸ்வபாவம், நின்கணேயியன்றதே—தேவரீர் பக்கலிலேயே வர்த்திக்கிறதென்கிறார்.

வ்யா. நாகமேந்து மேருவெற்பை. ஸ்வர்கத்தை தரிக்கிறமேருவாகிற பர்வதத்தை. மேருவுக்கு ஸ்வர்காதாரத்வம் மேருசிகரத்தில் தேஜோத்வாரத்தாலே. நாகமேந்துமண்ணினை. "திக்கஜங்களாலே தரிக்கப்படுகிற பூமியென்னுதல்; பாதாளகதனுயிருந்துள்ள திருவநந்தாழ்வானாலே தரிக்கப்படுகிற பூமியென்னுதல். நாகமேந்துமாகம். துக்கசந்தரஹிதமான ஸுகத்தாலே பூர்ணமான பரம வ்யோமம். "ஏந்தல்" என்று தேங்கலாய், ஆநந்த நிர்பரமான தேசமென்கை. "நாகம்" என்று - துக்கசந்தரஹிதமான ஸுகத்துக்கு வாசகமானபடி யெங்ஙனேயென்னில்; கம் - ஸுகம், அகம் - துக்கம், நாகம் - துக்கரஹிதமித்யர்த்தம். "நாகமேந்தும் ஆக" என்று - ஸம்புத்தியாய், திருவநந்தாழ்வானாலே தரிக்கப்பட்ட திருமேனியை யுடையவனே.

இத்தால் - கீழ்ச்சொன்ன தாரகபதார்த்தங்களும் பகவதாஹித சக்திகமாய்க்கொண்டு தரிக்கின்றனவென்றதாய்த்து. மாகமாகமேந்துவார்புனல். பரமபதமென்ன, ஆகாசத்தாலே தரிக்கப்படுகிற ப்ரவாஹரூபமான கங்கையென்ன, இவையும். மாகமேந்துமங்குல். ஆகாசம்தரிக்கிற மேகத்தையும். தீயோர்வாயுவைந் தமைந்துகாத்தும். வைச்வாநராக்நியையும் பஞ்சவ்ருத்தி ப்ராணன்களையும் ரக்ஷணதர்மத்திலே சமைந்துநின்றுரக்ஷித்து. "ஓய்வாயுவைந்துமைந்துகாத்து" என்று பாடமானபோது - தசதாவிபக்தமான வாயுவைச் சொல்லுகிறது. (க) "மேகோதயஸ்ஸாகரஸந்நிவ்ருத்திঃ" இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே நிராலம்பநமான ஆகாசத்திலே ஸஞ்சரிக்கிற ஸகலபதார்த்தமும் ஈச்வரஸங்கல்பத்தாலே ஸஞ்சரிக்கிறதென்று சொல்லிற்றாய்த்து. (உ) "யதாகாசஸ்திதோநித்யம்" இத்யாதி.

(க) "மேகோதயஸ்ஸாகர ஸந்நிவ்ருத்திঃ" (உ) "யதாகாசஸ்திதோநித்யம்".

ஏகமேந்தினின்றநீர்மை. ஒருவஸ்து தரிக்கிறதென்று ச்ருதிசொல்லுகிற ஸ்வபாவம். நின்க ணேயின்றதே. தேவரீர்பக்கலிலே வர்த்திக்கிறது. இயத்தல் - நடத்தலும், வளர்த்தலும். "யாவர்காணவல்லர்" என்று கீழோடே அந்வயம். இஸ்ஸர்வாதாரத்வத்தைத் தேவரீர் காட்ட நான் கண்டாப்போலே வேறுகாண வல்லாரென்கிறார். ... ... கூ.

அ. ஏழாம்பாட்டு. நாம் ஜ்ஞாநத்துக்கு விஷயமான பின்பு பரிச்சேதித்து அறிய மாட்டாதொழிகிறது ஜ்ஞாநசக்திகளின் குறைபன்றோ, "யார்காணவல்லரே" என்கிற தென்னென்ன; தேவரீர் இதரஸஜாதீயராய் அவதரித்து ரக்ஷிக்கிறபடியை ஜ்ஞாநத்தாலும் சக்தியாலும் அதிகனான ருத்ரனுமறிய மாட்டானென்கிறார்.

மூ.—ஒன்றிரண்டுமூர்த்தியாய் உறக்கமோடுணர்ச்சியாய்
ஒன்றிரண்டுகோலமாகி வேலைஞாலமாயினாய்
ஒன்றிரண்டுதீயுமாகி ஆயனாயமாயனே
ஒன்றிரண்டுகண்ணினானு முன்னைபேத்தவல்லனே. எ.

ப-ரை.— ஒருமூர்த்தி—ப்ரதாநமான ஒருமூர்த்தியும், இரண்டுமூர்த்தியாய்—அப்ர தாநமான இரண்டுமூர்த்தியுமாய், உறக்கமோடு— அஜ்ஞாநத்துக்கும், உணர்ச்சி—ஜ்ஞாநத் துக்கும், ஆய்-நிர்வாஹகனாய், ஒன்றிரண்டுகோலமாகி-ஸத்வரஜஸ்தமஸ்ஸாகிற மூன்றுகுணா ங்களுக்கும் நிர்வாஹகனாய், வேலை-கடல்சூழ்ந்த, ஞாலமாயினாய்—பூமிக்குநிர்வாஹகனாய், ஒன்றிரண்டுதீயுமாகி- ஆஹவநீயம் கார்ஹபத்யம் தக்ஷிணாக்நிகளாகிற மூன்றக்நிகளுக்கும் நிர்வாஹகனாய், மாயனாய்—ஆச்சர்யபூதனான, ஆயனே-க்ருஷ்ணனே, ஒன்றிரண்டுகண்ணி னானும்-முக்கண்ணனானருத்ரனும்,உன்னை—ஸர்வநிர்வாஹகனானவுன்னை,ஏத்தவல்லனோ-உள் ளபடி அறிந்து ஸ்தோத்ரம்பண்ண சக்தனோவென்கிறார்.

வ்யா. ஒன்றிரண்டுமூர்த்தியாய். ப்ரதாநமான ஒருமூர்த்தியும் அப்ரதாநமான இர ண்டுமூர்த்தியுமாய். ப்ரஹ்மருத்ரர்களை சரீரமாகக்கொண்டு அவர்களுக்கு நிர்வாஹகனாய், திவ்யமங்கள விக்ரஹத்தை இதரஸஜாதீயமாக்கிக் கொண்டவதரித்து ப்ரயோஜநாந்தர பர ரோடு முமுக்ஷுக்களோடு வாசியற ஸர்வநிர்வாஹகனாய், உறக்கமோடுணர்ச்சியாய். ஜ்ஞா நாஜ்ஞாநங்களுக்கு நிர்வாஹகனாய். (க) "அநாதிமாயயாஸுப்த:" என்கிறபடியே உறங்கினார்கணக்காய் விழுகையாலே, உறக்கத்தை - அஜ்ஞாநமென்கிறது. இத்தால் - மூன்று ம் ஏகாத்மா திஷ்டிதமென்றும் அநேகாத்மா திஷ்டிதமென்றும் அந்யோந்யம் ஸமமென்றும் அஜ்ஞாநத்துக்கும், மத்யஸ்தன் ரக்ஷகன் ப்ரஹ்மருத்ராதிகள் ரக்ஷ்யபூதர் என்கிற யாதாத் ம்யஜ்ஞாநத்துக்கும் நிர்வாஹகனென்கை. ஒன்றிரண்டுகோலமாகி. ஜ்ஞாநஹேதுவான ஸத்வோத்தர காலத்துக்கும், அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநங்களுக்கு ஹேதுவான ரஜஸ்த மோத்ரிக்த காலத்வயத்துக்கும் நிர்வாஹகனாய். (உ) "ஸத்வாத்ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்" "ஸமௌளஜஹதுதிம்விஷ்ணு" என்னக்கடவதிறே. வேலைஞாலமாயினாய். கடல்சூழ்ந்த பூமி க்கு நிர்வாஹகனாய்.யதாவஜ்ஜ்ஞாநம் பிறந்தவர்களுக்கு ஆவாஸஸ்தாநமான கர்மபூமிக்கு நிர்வாஹகனாய். (ங) "ஸப்தத்வீபவதீஸர்வா பூமிரேஷா ஸபர்வதா" என்கிறபடியே

(க) "அநாதிமாயயாஸுப்த:" (உ) "ஸத்வாத்ஸஞ்ஜாயதேஜ்ஞாநமுச்யதே" "ஸமௌள ஜகத்பதிம்விஷ்ணும்" (ங) "அபந்துநவமஸ்தேஷாம் த்வீபஸ்ஸாகரஸம்வ்ருத:"

கள் ஸ்ருஷ்டிகர்த்தாக்கள்; இந்த்ரன் சதுர்த்தசமநுக்களாகிற இவர்கள் ஸ்திதிகர்த்தாக்கள் ருத்ரன் அக்நி யமன்முதலான இவர்கள் ஸம்ஹாரகர்த்தாக்கள். "ஆதி" என்று—க்ருத்தவைச் சொல்லுகிறது. அண்டமாயவப்புறத்து ஆதியானவானவர்க்கும். அண்ட சப்தவாச்யமான லீலாவிபூதிக்கு அப்புறத்தில் பரமபதத்தில் வர்த்திக்கிற ஜகத்காரண பூதரான நித்யஸூரிகளுக்கும். அஸ்த்ரபூஷணாத்யாயக்ரமத்தாலே நித்யஸூரிகளை ஜகத்துக்குக் காரணபூதராகச் சொல்லக்கடவதிறே. அதவா, (க) "யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:" என்றும், (உ) "யத்ரர்ஷய: ப்ரதமஜா யே புராணா:" என்றும் சொல்லுகிற ஆதிதேவர்களென்றுமாம். ஆதியானவாதிநீ. இப்படி உபயவிபூதியிலும் ப்ரதாநரானவிவர்களுடைய ஸத்தாதிகளுக்கு ஹேதுவானப்ரதாநன்நீ. ஆதியானவானவாணரந்தகாலநீயுரைத்தி. இனிமேல் ஜகத்துக்கு நிர்வாஹகமானகாலதத்வமும் தேவரீரிட்ட வழக்கென்கிறது. ஜகத்ஸ்ருஷ்ட்யாதி கர்த்தாக்களாய் ஸர்த்வலோகங்களுக்கு அத்யக்ஷராய் வர்த்திக்கிற ப்ரஹ்மாதிகளுடைய பதங்களுடைய அவ்வவகாலத்துக்கு நியாமகனாய். "நீ உரைத்தி" என்கிறது—(ங) "ஸஹஸ்ரயுகபர்யந்தமஹர்யத் ப்ரஹ்மணோ விது:" என்றித்யாதிகளிலே நீயருளிச்செய்திருக்கையாலே. ஆதியானகாலநின்னை. கார்யரூபமான ஜகத்தடைய சத்யவஸ்தப்ரளயபோலேலீநமாய், (ச) "ஸதேவ ஸோம்யேதமக்ர" என்கிறபடியே ஆதிகாலத்துக்கு நிர்வாஹகனை யுன்னை. யாவர்காணவல்லரே. தந்தாம் ஸத்தாதிகள் தேவரீரிட்ட வழக்காயிருந்தபின்பு தேவரீரை பரிச்சேதிக்க வல்லாருண்டோ. ... ... அ.

அ.—ஒன்பதாம்பாட்டு. இப்படி அபரிச்சேத்ய வைபவனுகையாலே ப்ரயோஜநாந்தரபரில் அக்ரகண்யனானருத்ரனும், வைதிகாக்ரேஸரராய் அநந்ய ப்ரயோஜநரான ஸாத்விகஜநங்களும் உன்னையே யாச்ரயிக்கையாலே ஸர்வ ஸமாச்ரயணீயனும் நீயே யென்கிறார்.

மூ.—தாதுலாவுகொன்றைமாலை துன்னுசெஞ்சடைச்சிவன்
நீதியால்வணங்குபாத நின்மலாநிலாயசீர்
வேதவாணர்கீதவேள்வி நீதியானகேள்வியார்
நீதியால்வணங்குகின்ற நீர்மைநின்கணின்றதே. ௯.

ப—ரை.— தாதுஉலாவு - தாதுகள்மிக்கிருந்துள்ள, கொன்றைமாலை - கொன்றைமாலையணிந்து, துன்னு - நெருங்கி, செம் - சிவந்த, சடை - ஜடையையுடைய, சிவன் - ருத்ரனானவன், நீதியால்—வேதோக்தப்ரகாரத்தாலே, வணங்கு—உபாஸிக்கிற, பாதம்—திருவடிகளையுடையனான, நின்மலா—சுத்தியோகத்தையுடையவனே, நிலாயசீர்—அமாநித்வாத்யாத்மகுணங்களோடும்சமதமாதி குணங்களோடும் கூடினவர்களாய், வேதவாணவர்- வேதார்த்தத்தையறிந்தவர்களாய், கீதம்—ஸாமகாநப்ரதாநமான, வேள்வி—யாகங்களிலே ப்ரவர்த்தரானவர்களாய், நீதியானகேள்வியார்-ப்ரஹ்மநிஷ்டனான ஆசார்யன்பக்கலிலே வேதார்த்தத்தைக் கேட்டவர்கள், நீதியால் - கர்மாங்கமான அநவரதபாவனைபண்ணுகைக்கு, வணங்குகின்ற — உபாஸ்யனாயிற்கிற, நீர்மை - ஸ்வபாவம், நின்கணே - உன்பக்கலிலேயே, நின்றது - வர்த்திக்கிறதென்கிறார்.

(க) "யத்ரபூர்வேஸாத்யாஸ்ஸந்திதேவா:" (உ) "யத்ரர்ஷய: ப்ரதமஜாயே புராணா:" (ங) "ஸஹஸ்ரயுகபர்யந்தமஹர்யத் ப்ரஹ்மணோவிது:" (ச) "ஸதேவ ஸோம்யேதமக்ர"

வ்யா. தாதுலாவித்யாதி. தாதுமிக்க கொன்றைமாலையென்ன, நெருங்கிச் சிவந்த ஜடையென்ன, இவற்றையுடைய ருத்ரன். கொன்றைமாலையைச் சொல்லுகையாலே - போக ப்ரதாநனென்னும், நிர்க்கதபாவனையாலே செறிந்து, ஸாதநாநுஷ்டாநாயத்தாலே சிவந்திருக்கிற ஜடையையுடையனாகையாலே, அந்த போகந்தான் ஸாதித்து லபித்ததென்னும் சொல்லுகிறது. இத்தால் - போகமே புருஷார்த்தம், அதுதான் ஈச்வரனை ஆச்ரயித்தே பெற வேணுமென்கை. நீதியால் வணங்குபாத. தேவரீரை ஐச்வர்ய விசிஷ்டனாக ஆச்ரயிக்கச் சொல்லுகிற வேதோக்த ப்ரகாரத்தாலே அவன் உபாஸிக்கிற திருவடிகளையுடையவனே. நின்மலா. ப்ரயோஜநாந்தரங்களை அபேக்ஷிக்கிறது, "ஈச்வரோஹம்" என்றிருக்கிற துர் மாநி ஆச்ரயித்தானென்று இத்தோஷங்களை நினையாதே, நம்பக்கலிலே ஸாபேக்ஷனும்ஸர்வ தானென்கிற குணத்தையே நினைந்து, அநந்யப்ரயோஜநருக்குமுகங்கொடுக்குமாப்போலே முகங்கொடுக்கும் சுத்தியோகத்தையுடையவனே. இப்படி விஷயீகரித்து அவனுக்குக்கொடுத்த ஐச்வர்யமேதென்னில், (க) "மஹாதேவஸ்ஸர்வமேதே மஹாத்மா ஹுத்வாத்மாநம் தேவதேவோ பபூவ" என்கிறபடியே தேவதேவத்வத்தைக் கொடுத்தவனே. இது ப்ரயோஜநாந்தர பரரெல்லார்க்கு முபலக்ஷணம். நிலாயசீர். வர்த்திக்கிற குணங்கள். அதாகிறது - ஜ்ஞாந ஸாதனமான அமாநித்வா த்யாத்ம குணங்களாலும், உபாஸநாங்கமான சமதமாதி குணங்களாலும் ஸம்பந்நராயிருக்கை. அங்ஙனன்றியே, "நிலாயசீர்வேதம்" என்று வேதவிசேஷணமாய் - நித்யத்வா பௌருஷேயத்வ நிர்தோஷத்வங்களாலே காரணதோஷ பாதகப்ரத்யயாதி தோஷரஹித கல்யாண குணங்களைச் சொல்லிற்றாகவுமாம். வேதவாணர். வேதங்களுக்கு நிர்வாஹக ரென்னலாம்படி வேதார்த்தத்தைக் கரைகண்டவர். நீதிவேள்வி. அந்த வேதார்த்தாநுஷ்டாநமாய், ஸாமகாத ப்ரதாநமான யாகங்களிலே ப்ரவர்த்தரானவர்கள். அதாவது - ஆத்ம யாதாத்ம்யஜ்ஞாந பூர்வகமாக த்ரிவித பரித்யாகயுக்தராய், பகவத்ஸமாராதந புத்தியாலே அநுஷ்டிக்கும் யஜ்ஞங்கள். நீதியானகேள்வியார். உத்தமான வேதார்த்த தாத்பர்யம் கைப்படுகைக்கும் தத்காரியமான கர்மயோகா த்யநுஷ்டாநங்களுக்கு மடியான கேள்வியை யுடையவர்கள். நீதியான் கேள்வியாரகிறது - (உ) "பரீக்ஷ்ய லோகாந்" இத்யாதியிற் சொல்லுகிறபடியே நிர்வேதாவர்த்தியிறந்து ப்ரஹ்மநிஷ்டனான ஆசார்யன்பக்கலிலே உபஸந்நராய், (ங) "ச்ரோதவ்யோ மந்தவ்ய:" என்கிறபடியே ச்ரவண மநநங்களைப் பண்ணுகை. நீதியால் வணங்குகின்ற நீர்மை. (ச) "நிதித்யாஸிதவ்ய:" என்கிறபடியே - கர்மாங்கமான அநவரதபாவனை பண்ணுகைக்கு உபாஸ்யனாய் நிற்கிற ஸ்வபாவம். நின்கண்நின்றதே. உன் பக்கலிலே வர்த்திக்கிற நித்தனை. அவதாரணத்தாலே - வேறு ஆச்ரயணீயரில்லை யென்கை. ... ... ... ... ௯.

அ. பந்தாம்பாட்டு. ஸர்வஸமாச்ரயணீயத்வத்தால் வந்த உபாஸ்யத்வமே யன்றிக்கே, (ரு) "காரணந்து த்யேய:" என்கிறபடியே ஜகதுபாதாநகாரணவஸ்துவே ஸமாச்ரணீய மென்று சொல்லுகிற காரணத்வ ப்ரயுக்தமான ஆச்ரயணீயத்வமும் தேவரீருடையதென்று த்ர்ஷ்டாந்த ஸஹிதமான உபாதாநகாரணத்வத்தை யருளிச்செய்கிறார்.

---

(க) "மஹாதேவஸ்ஸர்வமேதே மஹாத்மா ஹுத்வாத்மாநம் தேவதேவோ பபூவ." (உ) "பரீக்ஷ்ய லோகாந்" (ங) "ச்ரோதவ்யோ மந்தவ்ய:" (ச) "நிதித்யாஸிதவ்ய:" (ரு) "காரணந்து த்யேய:"

மூ.—தன்னுளேதிரைத்தெழுந் தரங்கவெண்டடங்கடல்
தன்னுளேதிரைத்தெழுந் தடங்குகின்ற தன்மைபோல்
நின்னுளேபிறந்திறந்து நிற்பவுந்திரிபவும்
நின்னுளேயடங்குகின்ற நீர்மைநின்கணின்றதே. எ.

பதவுரை.— தன்னுளே—தனக்குள்ளே, திரைத்து—வாயுவாலேகிளர்ந்து, எழும்—வீசாநின்றுள்ள, தரங்கம்—அலைகளையும், வெண்—வெண்மையையுமுடைத்தாய், தடம்—இடமுடைத்தான, கடல்—ஸமுத்ரமானது, வாயுவசத்தாலே, தன்னுளே—தனக்குள்ளே, திரைத்து—கிளர்ந்து, எழுந்து—மேலெழுந்து, அடங்குகின்ற தன்மைபோல்—அடங்கிவிடுகிற ஸ்வபாவம்போலே; நின்னுளே—உன் ஸ்வரூபத்துக்குள்ளே, பிறந்து இறந்து—பிறந்துநசிக்கிற, நிற்பவும் திரிபவும்—ஸ்தாவரஜங்கமங்களும், நின்னுளேயடங்குகின்ற—தேவரீர் பக்கலிலே யடங்குகிற, நீர்மை—இந்தஸ்வபாவம், நின்கண்நின்றது—தேவரீரிடத்திலே யுள்ள தென்கிறார்.

வ்யா. தன்னுளே திரைத்தெழும் தரங்கவெண் டடங்கடலித்யாதி. த்ருஷ்டாந்தத்திலே அர்த்தத்தை சிக்ஷித்து தார்ஷ்டாந்திகத்திலே அதிதேசிக்கிறார். "தன்னுளே" என்கிறவித்தால் - சரீரபூதசேதநா சேதநங்களும், ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களும், ஸ்வரூபாந்தர் பூதமென்கை. திரைத்தெழும்தரங்கம். நிஸ்தரங்க ஜலதியானது வாயுவாலே கிளர்த்தெழுந்து எங்குமொக்க ஸஞ்சரியாநின்றுள்ள திரைகளையுடைத்தாகை. தார்ஷ்டாந்திகத்தில் வாயுஸ்தாநீய பகவத்ஸங்கல்பமடியாக ஸ்ருஷ்டிகாலத்திலேபிறந்த குணவைஷம்யம். வெண்தடங்கடல். ஸஞ்சாரியான திரையையும் அஸஞ்சாரியான வெண்மையையுமுடைத்தான இடமுடையகடல். இது, மேலே "நிற்பவும்திரிபவும்" என்கிறதுக்கு த்ருஷ்டாந்தம். தன்னுளேதிரைத்தெழுந் தடங்குகின்றதன்மைபோல். வாயுவசத்தாலே பரம்பின திரைகள் மற்றப்படி ஒன்றிலேயொன்று திரைத்தெழுந்து உபஸம்ஹரிக்கிற ஸ்வபாவம் போலே. இத்தால் - ஏகத்ரவ்யபரிணாமத்தைச் சொல்லுகிறதன்று, கீழ்ப்பாட்டிலே உபாஸகம் சொல்லிற்றாய், இப்பாட்டிலே உபாஸ்யமான ஜகதுபாதாநகாரணத்தைச் சொல்லுகிறது. அதாகிறது - ஸூக்ஷ்மசிதசித் விசிஷ்ட ப்ரஹ்மமே காரணம், ஸ்தூலசிதசித் விசிஷ்டப்ரஹ்மமே கார்யமென்று வேதாந்தப்ரஸித்தமான அர்த்தம். இது எத்தாலே அறிவதென்னில்; (க) "நகர்மாவிபாகாத்" என்கிற ஸூத்ரத்தாலே. (உ) "ஸதேவ" என்கிற அவிபாகச்ருதியாலே அக்காலத்தில் க்ஷேத்ரஜ்ஞரில்லாமையாலே கர்மமில்லையென்று பூர்வபக்ஷித்து, (ஙு) "ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீசநீசௌ" (ச) "நித்யோ நித்யாநாம்" என்று க்ஷேத்ரஜ்ஞர்களுக்கும் தத்கர்மப்ரவாஹத்துக்கும் அநாதித்வமுண்டாகையாலே அது அர்த்தமன்றென்று நிஷேதித்து நாமரூபவிபாகாபாவத்தாலே, "ஸதேவ" என்கிற அவதாரணம் உபபந்நமென்றதிறே. த்ருஷ்டாந்தம் ஏகத்ரவ்ய முகத்தாலே சொன்னாரிவரேயன்று, (ரு) "யதாஸோம்யைகேந ம்ருத்பிண்டேந" என்று உபநிஷத்து; (சு) "கடகமகுடகர்ணிகாதிபேதை:" என்று ஸ்ரீபராசரபகவாந். இத்தை தார்ஷ்டாந்திகத்திலே அதிதேசிக்கிறார். நின்னுளேபிறந்திறந்து நிற்பவும்திரிபவும். உன் ஸ்வரூபத்துக்குள்ளே உத்பத்தியும்

(க) "நகர்மாவிபாகாத்" (உ) "ஸதேவ" (ஙு) "ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜா வீசநீசௌ" (ச) "நித்யோ நித்யாநாம்" (ரு) "யதாஸோம்யைகேந ம்ருத்பிண்டேந" (சு) "கடகமகுடகர்ணிகாதிபேதை:"

விநாசமுமாய்ப் போருகிற ஸ்தாவரஜங்கமாத்மகமான ஸகலபதார்த்தமும். நின்னுளேயடங்குகின்றநீர்மை. ப்ராக்ர்தோபஸம்ஹார வேளையிலே, (க) "தஸ்மிந்நேவ லீயந்தே" என்கிறபடியே - தேவரீர்பக்கலிலே அடங்குகின்ற இந்த ஸ்வபாவம். நின்கண்நின்றதே. தேவரீர் பக்கலிலே யுள்ளதொன்று, இவ்வுபாதாநகாரணத்வம் வ்யக்த்யந்தரத்தில் இல்லையென்கை. முதற்பாட்டிற்சொன்ன உபாதாநகாரணத்வத்தை பத்தாம்பாட்டிலே த்ர்ஷ்டாந்த ஸஹிதமாகச்சொல்லி முடித்தாராய்விட்டது. ... ... ... ... ய.

அ.—பதினோராம்பாட்டு. (உ) "ந ஸந்ந சாஸச்சிவ ஏவ கேவல:" "ஹிரண்யகர்ப்ப: ஸமவர்த்ததாக்ரே" என்று ப்ரஹ்மாதிகளுக்கும் காரணத்வஞ் சொல்லுகிற தில்லையோவென்ன; உன்னாலே ஸ்ர்ஷ்டராய் உன்பெருமையை ஓரோப்ரயோஜநங்களிலே பேசக்ஷமருமன்றிக்கே யிருக்கிறவிவர்கள் ஆச்ரயணீயராக ப்ரஸங்கமென்? கீழ்ச்சொன்ன காரணவாக்யமும் அவ்வஸ்துவைப்பற்ற அந்யபரமென்கிறார்.

மூ.—சொல்லினாற்றொடர்ச்சிநீ சொலப்படும் பொருளும்நீ
சொல்லினாற்சொலப்படாது தோன்றுகின்றசோதிநீ
சொல்லினாற்படைக்கநீ படைக்கவந்துதோன்றினார்
சொல்லினாற்சுருங்கநின் குணங்கள்சொல்லவல்லரே. கக.

ப-ரை.—சொல்லினால்—சப்தஸித்தமான புருஷார்த்தத்திலே இழிந்தார்க்கு, தொடர்ச்சி—உறவைப்பிறப்பிப்பாயும், நீ-; சொலப்படும்—ச்ருதிஸ்ம்ர்த்யாதிகளில் ஆச்ரயணீயராய்ச் சொல்லப்படுகிற தேவதைகளுக்கு, பொருளும்—அந்தராத்மாவும், நீ-;சொல்லினால்-வேதாந்தத்தாலே, சொலப்படாது தோன்றுகின்ற-பரிச்சேதிக்கப்படாதென்று தோன்றுகிற, சோதி-தேஜச்சப்தவாச்யன், நீ-;சொல்லினால்-நீகொடுத்தத்தை த்ர்ஷ்டியாகக்கொண்டு, படைக்க-ஜகத்ஸ்ர்ஷ்டி பண்ணுவாராக, நீபடைக்க-நீஸ்ர்ஷ்டிக்க,வந்து—உன் திருநாபீ கமலத்திலேவந்து, தோன்றினார்-தோன்றின ப்ரஹ்மாதிதேவர்கள், நின்குணங்கள்-உன்னுடைய குணங்களை, சொல்லினால்- சொல்லப்புகுந்தால், சுருங்க - ஸங்க்ஷேபமாகவாகிலும், சொல்லவல்லரே—பேசமாட்டார்களென்கிறார்.

வ்யா. சொல்லினால்தொடர்ச்சிநீ. சப்தத்தாலே ஸித்தமான புருஷார்த்தத்திலே இழிந்தார்க்கு அதிலே உறவுபிறப்பிப்பாயும்நீ. தொடர்-உறவு. அதாவது-ப்ரத்யக்ஷவிஷயமான சப்தாதிகளைபுருஷார்த்தமென்றிருக்கும் ஸம்ஸாரிகளையொழியவேதாந்தமுகத்தாலேவைதிகஸமதிகம்யமான வஸ்துவையறிந்து, அவ்வஸ்துவைப்பெற ஆசைபட்டவர்களுக்கும் உபக்ரமதசையிலேருசிஜநகன்நீ;ப்ரஹ்மாதிகள் ப்ராப்தரான ஜநகரல்லாமையாலேருசிஜநகருமல்லர். சொலப்படும்பொருளும்நீ. ச்ருதிஸ்ம்ர்த்யாதிகளில் ஆச்ரயணீயராய்த் தோற்றுகிற தேவதைகளுக்கு ஆத்மாவும்நீ. (ங) "ஏகமேவ தந்த்ரயம்" "சதுர்ஹோதாரோ யத்ர ஸம்பதம் கச்சந்தி" (ச) "யேயஜந்தி" சொல்லினால் சொலப்படாது தோன்றுகின்ற சோதிநீ. வேதாந்தத்தால் பரிச்சேதிக்கப்படாதென்று தோன்றுகிற தேஜச்சப்தவாச்யன்நீ.

(க) "தமேவ்ப்பவதி" (உ) "நஸந்நசாஸச்சிவஏவகேவல:" "ஹிரண்யகர்ப்பஸ்ஸமவர்த்ததாக்ரே" (ங) "ஏகமேகேவதந்த்யக்நிம்" "சதுர் ஹோதாரோயத்ர ஸம்பதம்கச்சந்தி" (ச) "யேயஜந்தி"

(க) "யதோவாசோ நிவர்த்தந்தே" "அவிஜ்ஞாதம் விஜாநதாம்" "யஸ்யாமதம் தஸ்ய மதம்" "பரஞ்ஜ்யோதி ரூபஸம்பத்ய" "நாராயண பரோஜ்யோதி:" இத்யாதிக ளிலே உன் ஸ்வரூபாதிகள் அபரிச்சின்னங்களென்றும் பரஞ்ஜ்யோதிச் சப்தவாச்யன் நீயென்றும் சொல்லப்படா நின்றதிறே. சொல்லினல்படைக்க (உ) [யோவை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை] நீ கொடுத்த வேதத்தைத் த்ருஷ்டியாகக்கொண்டு ஜகத்ஸ்ருஷ்டி பண்ணுவாராக. (ங) "ஸஹஸ்ரசிதிவ்யாஹராக", நீபடைக்கவந்துதோன்றினர் (ச) "யோ ப்ரஹ்மாணம் விதாதி பூர்வம்" என்கிறபடியே - நீ ஸ்ருஷ்டிக்க உன் திருநாபீகமலத்திலேவந்து தோன்றின ப்ரஹ்மாமுதலான தேவர்கள். சொல்லினற்சுருங்க நின்குணங்கள்சொல்லவல்லரே. உன் குணங்களையறிந்து பரக்கப் பேசமாட்டாமையன்றியே, ஓரோ பர்யாயங்களிலே ஸங்க்ஷேபேண உன்குணங்களைப் பேசவும்மாட்டார். பரத்வஸாதகமான குணங்கள், ஜகத்காரணத்வஸாதகமான குணங்கள், ஆச்ரிதார்த்தமான குணங்கள் இவற்றிலே ஓரோகோடியைக் கரைகாணமாட்டார்கள். ... ... ... ... ௰க.

அ. பன்னிரண்டாம்பாட்டு. ஜகத்காரணபூதனாய் ஸ்ருஷ்ட்யாதி முகத்தாலே நின்று ரக்ஷிக்குமளவேயன்றியே, அஸாதாரண விக்ரஹயுக்தனாய் அவதரித்து ரக்ஷிக்கும் உன்படியை லோகத்தில் ஆர் நினைக்கவல்லா ரென்கிறார்.

மூ.—உலகுதன்னைநீபடைத்தி யுள்ளொடுக்கிவைத்தி மீண்
டுலகுதன்னுளேபிறத்தி ஓரிடத்தையல்லை, ஆல்
உலகுநின்னொடொன்றி நிற்கவேறுநிற்றி, ஆதலால்
உலகுநின்னையுள்ளசூழல் யாவருள்ளவல்லரே. ௰உ.

பதவுரை.—நீ—ப்ராக்ருதஸ்ருஷ்டியைப் பண்ணின நீ, உலகுதன்னை—ஸகலபதார்த்தங்களையும், படைத்தி-படையாநிற்றி, நித்யநைமித்திகாதிப்ரளயங்களிலே நாமரூபங்களை இழந்தபதார்த்தங்களை, உள்—உன் திருவயிற்றில், ஒடுக்கிவைத்தி—அடக்கிவைத்து ரக்ஷியாநிற்றி; மீண்டு—மறுபடியும், உலகுதன்னுளே—ஸ்ருஷ்டமான இந்தலோகத்திலே, பிறத்தி—அவதரியாநிற்றி: ஓரிடத்தையல்லை—ஒருஸ்தலத்தாயென்று நிர்ணயிக்கவொண்ணாதவனுமாயிராநிற்றி; உலகு—ஜகத்து, உனக்கு சரீரமாகையாலே, நின்னொடொன்றிநிற்க—உன்னைப்பிரியாதே யிருக்க; அஸாதாரணவிக்ரஹ யுக்தனாய்க்கொண்டு, வேறுநிற்றி — வ்யாவ்ருத்தனாயிராநின்றாய்; ஆதலால்—ஒருவகையாலும் பரிச்சேதித்தறிய வொண்ணாமையாலே, சூழலுள்ள—ஆச்சர்யமான வ்யாபாரத்தையுடைய, நின்னை—உன்னை, உலகு—லௌகிக புருஷர்களில், யாவர்—யார்தான்; உள்ளவல்லர்—அறியவல்லா ரென்கிறார்.

வ்யா. உலகுதன்னைநீ படைத்தி அசித்தை உபகரணமாகக்கொண்டு ப்ராக்ருதஸ்ருஷ்டியைப் பண்ணின நீ, ப்ரஹ்மாதி ஸகல தேவதாந்தர்யாமியாய்க் கொண்டு ஸகலபதார்த்தங்களையும் ஸ்ருஷ்டியாநிற்றி. உள்ளொடுக்கிவைத்தி நித்ய நைமித்திக ப்ராக்ருத ப்ரளயத்திலும்

(க) "அவிஜ்ஞாதம் விஜாநதாம்" "யஸ்யாமதம் தஸ்ய மதம்" "பரஞ்ஜ்யோதி ரூபஸம்பத்ய" "நாராயண பரோஜ்யோதி:" (உ) "யோவை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை" (ங) "ஸஹஸ்ரசிதிவ்யாஹராத்" (ச) "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்"

களிலே நாமரூபங்களையிழந்த பதார்த்தங்களை உன் திருவயிற்றிலே வைத்து ரக்ஷியாநிற்றி. இத்தால் - ஸகல பதார்த்த ஸ்ருஷ்டிக்கும் கர்த்தாவாய் ஸகல ஸம்ஹாரங்களிலும் ரக்ஷகனுமாயிருக்கிறான்; அடியிலே, (க) "பஹுஸ்யாம்" என்கிற ஜகதுபாதாநகாரணபூதனென்றதாய்த்து. மீண்டலகு தன்னுளே பிறத்தி. ஜகதேககாரணத்வத்தால் வந்த வைபவத்தினின்றும் மீட்டு உன்னாலே ஸ்ருஷ்டமான இவ்வுலகத்திலே சில க்ஷேத்ரஜ்ஞர்க்கு புத்ரனாய் வந்தவதரியாநிற்றி. மீண்டே. அதுபோராமே இரியட்டு மென்றுமாம். ஸகல பதார்த்தங்களுக்கும் ஜநகனான நீ உன்னாலே ஸ்ருஜ்யனாயிருப்பானொரு க்ஷேத்ரஜ்ஞனை ஜநகனாகக்கொண்டு ஜநிப்பதே. ப்ரளயாபத்திலே ஸகல பதார்த்தங்களையும் உன் திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்த நீ ஒரு ஸ்த்ரீவயிற்றிலே கர்பபூதனாவதே!. (உ) "ஸ்ரீ த்ராக்ஷம் யாமயேஸாநம் யத்கம் யெ நாவிஷா ஜம்க" என்னக்கடவதிறே. ஓரிடத்தையல்லையால். ஒரு ஸ்தலத்தாயென்று நிர்ணயிக்க வொண்ணாதவனாகையாலே ஒருகோடியிலே சேர்த்தறியப்போகிறதில்லை. அதாகிறது - உபாதாநகாரணத்வத்திலே புரையில்லாமையாலே கார்யமென்ன வொண்ணாது, அவதாரத்தில் ஸஜாதீயபாவத்தில் புரையில்லாமையாலே காரணமென்னவொண்ணாது, இது என்னபடியென்கிறார். உலகுநின்னொடொன்றி நிற்கவேறுநிற்றி. ஜகத்து உனக்கு சரீரமாகையாலே உன்னைப் பிரியாதேநிற்க, அஸாதாரண விக்ரஹயுக்தனாய்க்கொண்டு வ்யாவர்த்தனாயிருத்தி. அதாகிறது - விமுகரான காலத்திலே ஆத்மாவாய் நின்று ஸத்தையை நோக்கியும், அபிமுகீகரித்தவன்று ஸுபாச்ரயனாகைக்கு அஸாதாரண விக்ரஹயுக்தனாயிருக்குமென்கை. ஆதலால். ஒரு வகையாலும் பரிச்சேதித்தறிய வொண்ணாமையாலே. உலகில் நின்னையுள்ளசூழல் யாவருள்ள வல்லரே. ஆச்சர்யமான படிகளையுடைய வுன்னை லௌகிக புருஷர்களில் அறியவல்லவரார். சூழல்—சூழ்ச்சி. ... ... ... ௧௨.

அ. பதின்மூன்றும்பாட்டு. இவ்வவதார ரஹஸ்யம் ஒருவர்க்கறிய வொண்ணாதோ வென்னில்; கோபஸஜாதீயனாய் வந்தவதரித்த நீ காட்டித்தர உன்னைலக்ஷண்யம் காணும் தொழிய ஸ்வஸாமர்த்யத்தாலே காணமுடியா தென்கிறார்.

மூ.—இன்னையென்றுசொல்லலா வதில்லையாதுமிட்டிடைப்
பின்னைகேள்வனேன்பருன் பிணக்குணர்ந்த பெற்றியோர்.
பின்னையாயகோலமோடு பேருமூருமாதியும்
நின்னையார்நினைக்கவல்லர் நீர்மையால்நினைக்கிலே. ௰௩.

ப-ரை.— உன்—உன்நிமித்தமாக ஆச்ரிதர்க்கும் அநாச்ரிதர்க்குமுண்டான, பிணக்கு உணர்ந்த—விவாதத்தை அநுஸந்திக்கிற, பெற்றியோர்—பண்டிதர்களானவர்கள், உன்னைப்பரிச்சேதித்தறியப்புக்கால், இன்னையென்று—இப்படிப்பட்டவனென்று, சொல்லலாவதுயாதுமில்லை—சொல்லலாவதொன்றுமில்லை, இட்டிடை—நேரிய இடையையுடைய, பின்னை—நப்பின்னைப்பிராட்டிக்கு, கேள்வனென்பர்—வல்லபனென்று சொல்லுவர்கள்; பின்னையாய—அவதாரஸமாப்தியில் இளைப்பாறுமிடமான, கோலமோடு—வ்யூஹவிக்ரஹமும், பேரும்—குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களும், ஊரும்—அவதரித்த தேசப்ரபாவமும், ஆதியும்—அவ்விக்ரஹத்துக்கு நிதாநமும், ஆகிய இவற்றையுடையனான, நின்னை—உன்னை,

(க) "பஹுஸ்யாம்" (உ) "ப்ரீத்யாத்வம் தாரயேசாநம் தீர்த்தம்யோகிலம் ஜ..."

டாதிபதியான ப்ரஹ்மாவையும் ஸ்ருஷ்டித்து, ப்ரஹ்மாவாலே ஸ்ருஷ்டமான ப்ரளயார்ண வத்திலே அந்தர்பூதையான பூமியை ஸுபரிபோக்யமான திவ்யவிக்ரஹத்தை வராஹஸ ஜாதியமாக்கி அண்டபித்தியிலே புக்கு இடந்தெடுத்து. இது ஸங்கல்பத்தாலே செய்ய முடியாததொன்றன்றே, "ஸம்ஸாரப்ரளயாபத்தினின்றும் எடுப்பானிவனே!" என்று ஆச்ரிதர் விச்வஸிக்கைக்காகவிறே. அளந்து. அதுக்குமேலே, மஹாபலியாலே அபஹ்ருதமான பூமியை, ஸ்ரீவாமனனாய் எல்லை நடந்து மீட்டுக்கொண்டு. இதுவும் தன்னுடைமைபெறு கைக்குத் தானே அர்த்தியாய் வருமவனென்று ஆச்ரிதர் விச்வஸிக்கைக்காக. அதுண்டு மிழ்ந்து. நைமித்திக ப்ரளயம்வர வடதளசாயியாய், தன்னுடைய சிறியவயிற்றிலே த்ரிலோகத்தையும் வைத்து ரக்ஷித்து, உள்ளேயிருந்து நோவுபடாமல் அவற்றைஉமிழ்ந்து. இதுவும் ஸங்கல்பத்தாலே செய்யலாயிருக்க அப்படிசெய்ததும் ஸர்வசக்தியென்றும், உருவழிந்த பதார்த்தங்களை உண்டாக்குமவனென்றும் ஆச்ரிதர்விச்வஸிக்கைக்காக. "பௌவநீர் படைத்தடைத்து" என்று இங்கேயும் அந்வயிக்கக்கடவது. அண்டகாரணமான ஏகார்ணவத்தை ஸங்கல்பலேசத்தாலே ஸ்ருஷ்டித்த நீ அண்டாந்தர்வர்த்திகளான ஸமுத்ரங்களிலே ஒருஸமுத்ரத்தை, வருணனைச்சரணம்புக்குபடைதிரட்டியும் அடைத்து இதுவும் ப்ரணயினியுடைய விச்லேஷத்தில் பித்ருடைய ஆற்றாமையை ப்ரகாசிப்பித்த விதனையிறே. முன் அதில்கிடந்த. ப்ரஹ்மாதிகள் ஆர்த்தரானதசையிலே தூரஸ்தராகவொண்ணாது என்றும், அபிமுகீகரித்தார்க்கு அவதரித்து ஸுபாச்ரயமாகைக்கும் திருப்பாற்கடலிலே கண் வளர்ந்தருளி. (க) "ஜ்யோதீம்ஷி விஷ்ணு:" என்கிறபடியே ஸர்வர்க்கும் ஸந்நிஹிதரான தேவரீர் இப்படி செய்தருளிற்று, ஆச்ரிதரக்ஷணத்திலே ஸ்ரோத்யுக்தமொன்று தோற்று கைக்காகவிறே. கடைந்தபெற்றியோய். தூர்வாஸச் சாபத்தாலே தேவர்களிழந்த பதார்த்தங்களடங்கக் கடலிலேயுண்டாக்கிக் கொடுக்கைக்காக அக்கடலைக்கடைந்த மஹாப்ரபாவத்தை யுடையவனே. "பெற்றி" என்று - ஸ்வபாவம். இதுவும் ஆச்ரிதருடைய இழவுகளைத் தானேவ்யாபரித்துத்தீர்க்குமென்று தோற்றுகைக்காக. மிடைத்தமாலி. கோபித்தமாலி. மாலிமான்விலங்கு. பெருமிடுக்கனனஸுமாலியான திர்யக்கு. திர்யக்ப்ரவர்த்தனான ஸுமாலியென்னவுமாம். காலனூர்புக்கப் படைக்கலம்விடுத்த. அவர்களையும் அப்புறத்திலே புகும்படி ஆயுதத்தை யேவினவன். இத்தால் - ஆச்ரிதவிரோதிகளை அழியச்செய்யுமிடத்தில் ஸங்கல்பத்தாலன்றிக்கே கைதொட்டு ஆயுதத்தாலே அழிக்குமவனென்கிறது. பல்படைத் தடக்கை மாயனே. பின்பு விரோதி நிரஸநத்துக்கிடான அநேக ஆயுதங்களையுடைத்தாய், அவ்வாயுதங்களுக்கு ஸத்ர்சமான சுற்றுடைத்தான திருக்கையையுடைய ஆச்சர்யபூதனே.

அ.—இருபத்தொன்பதாம்பாட்டு. கீழ்ப்பாட்டில் (உ) "ஏநஸைவஜகத்ஸ்ருஷ்டி" என்கிறபடியே ஸங்கல்பலேசத்தாலே ஜகத்ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைப் பண்ண வல்லவன், ஆச்ரிதாநுக்ரஹத்தாலே எளியகாரியங்களுக்கு அநேகவிக்ரஹபரிக்ரஹங்களைப் பண்ணி ரக்ஷிக்குமென்கிறது ; இதில் - இவ்வநுக்ரஹத்துக்கு ஹேது ஸர்வாதிகத்வத்தால் வந்த பூர்த்தியும், ச்ரிய:பதித்வத்தால்வந்த நீர்மையும், அவர்ஜநீயமான ஸம்பந்தமு மென்றும், அநுக்ரஹகார்யம் வ்யூகவிபவாத்யவதாரங்களென்றும் சொல்லி, இப்படிப்பட்ட வநுக்ரஹம் ஏவம்விதமென்று பரிச்சேதிக்க வொண்ணாதென்கிறார்.

(க) "ஜ்யோதீம்ஷி விஷ்ணு:" (உ) "ஏநஸைவஜகத்ஸ்ருஷ்டம்"

மூ.—பரத்திலும்பரத்தையாதி பௌவநீரணைக்கிடந்
துரத்திலுமொருத்திதன்னை வைத்துகந்ததன்றியும்
நரத்திலும்பிறத்திநாத ஞானமூர்த்தியாயினாய்
ஒருத்தரும்நினைதுதன்மை யின்னதென்னவல்லரே. உ௯.

ப-ரை.—பரத்திலும் - த்ரிவிதாத்மவர்க்கத்துக்கும், பரத்தையாதி-மேலான வைலக்ஷண்யத்தையுடையையாய், உரத்தில்-திருமார்பிலே, ஒருத்திதன்னை-அத்விதீயையான பெரிய பிராட்டியாரை, வைத்து-பிரியாமல்வைத்து, உகந்து-ஸம்ச்லேஷ ரஸங்களை அநுபவிக்கிற நீ, (ஆச்ரிதரக்ஷணத்துக்காக அநிருத்தரூபியாய்க்கொண்டு,) பௌவம்—க்ஷீராப்தியிலே, நீர் அணை—நீரேபடுக்கையாக, கிடந்து—கண்வளர்ந்தருளி, (சேதநர் விஷயத்தில் செய்த அநுக்ரஹம் பர்யவஸியாமையாலே,) அது அன்றியும்-அதுக்குமேலே, நரத்திலும் - மநுஷ்யயோநியிலும், பிறத்தி - ராமக்ர்ஷ்ணாதிரூபேணவந்தவதரித்தவனாய், நாத—ஸகல ஆத்மாக்களுக்கும் நாதனாய், ஞானமூர்த்தியாயினாய் - ஜ்ஞாநஸ்வரூபனானவனே!, ஒருத்தரும் - வேதவைதிகர்களில் ஒருவரும், நினைதுதன்மை - உன் அநுக்ரஹத்தினெல்லையை, இன்னதென்னவல்லரே-ஏவமித்தமென்று பரிச்சேதிக்கவல்லரோ.

வ்யா. பரத்திலும் பரத்தையாதி. (க) "பராத்பராணாம்பரம:" என்கிறபடியே த்ரிவிதாத்மவர்க்கத்துக்கு மவ்வருகான ஸ்வரூபவைலக்ஷண்யத்தை யுடையையாய். அநந்தரம், "உரத்திலும் ஒருத்திதன்னை வைத்துகந்து" என்கிறவிது அந்விதமாகக் கடவது. மேற்சொன்ன ஸ்வரூப வைலக்ஷண்யத்துக்கும் அவ்வருகான உத்கர்ஷத்துக்கும் ஹேதுவாயிறே ஸ்ரீயபதித்வமிருப்பது. உரத்திலும். சசப்தத்தாலே - ஸ்வரூபாந்தர்ப்பாவத்தையும் ஸமுச்சயிக்கிறது. அதுக்குமேலே, மஹிஷீவர்க்கத்தையும் வ்யாவர்த்திக்கிறது. ஒருத்தி. அத்விதீயை. "வடிவிணையில்லாமலர்மகள்." அதாகிறது - த்ரிவிதாத்மவர்க்கத்துக்கும் ஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு ப்ரதாந மஹிஷியாயிருக்கை. தன்னை வைத்து. "அகலகில்லேனிறையும்" என்று மேல்விழுக்கடவ இவள்தன்னை, தான் "இறையுமகலகில்லேன்" என்று திருமார்விலேவைத்து. உகந்து. * துல்யசீலவயோவ்ர்த்தையாயிருந்துள்ளவளோடே ஸம்ச்லேஷரஸங்களை யநுபவிக்கிற நீ. பௌவநீரணைக்கிடந்து. ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணம், பிராட்டிபக்கல் ப்ரீதிக்குப் போக்குவீடாயிறேயிருப்பது. ஆர்த்தரக்ஷணத்துக்காக அநிருத்தரூபியாய்க் கொண்டு க்ஷீராப்தியிலே நீரே படுக்கையாகக் கண் வளர்ந்தருளி. (உ) "தாவாமேத புஜகசயநாயிநம்" என்கிறபடியே - தாபார்த்தர்க்குப் புகலாய்க்கொண்டு அபேக்ஷாநிரபேக்ஷமாகக் கண்வளர்ந்தருளுகிற நீர்மையைச் சொல்லுகிறது. இது-ஸங்கர்ஷணப்ரத்யும்ந வ்யூஹங்களுக்கும் உபலக்ஷணம். அதன்றியும். ஸம்ஸாரத்தில் அசித்கல்பமாய்க் கிடந்தசேதநர்க்கு ரூபநாமங்களைக் கொடுத்தும், சாஸ்த்ரப்ரதாநாதிகளைப் பண்ணியும், ப்ரஹ்மாதிகளுண்டாய ஆர்த்திகளைப் பரிஹரித்தும், இப்படி ரக்ஷித்துப்போந்த வ்யூஹாவதாரங்களாலே தேவரீருடைய அநுக்ரஹம் பர்யவஸியாமையாலே, அதுக்குமேலே. நரத்திலும் பிறத்தி. (ங) "ஸர்வகந்த:" என்கிற நீ ப்ரஹ்மாதிகளுக்கும் $ க்ஷுத்ரவிஷயமான மநுஷ்யயோநிகளிலே தத்ஸஜாதீயனாய்க் கொண்டு ராம க்ர்ஷ்ணாதி ரூபத்தாலே வந்தவதரித்து. இது, தேவயோநியிலும் திர்யக்யோநியிலுமுண்டான அவதாரங்களுக்கு முப

(க) "பரேபராணாம்பரம:" (உ) "தாபார்த்தோஜலசாயிநம்" (ங) "ஸர்வகந்த:"
$ க்ஷுத்ர—வெறுப்பு.

லக்ஷணம். (௧) "ஸஹாநாதிரஹ்ஸ்வேதாந" என்னக்கடவதிறே. ராத. இப்படி விஸஜாதீயமான ஹேயயோநியிலே வந்து அவதரிக்க வேண்டுகிறது இவற்றையுடைய ஞகையாலேயென்கை. ஞானமூர்த்தியாயினாய். ஜ்ஞாநஸ்வரூபனாயினாய். இப்போது ஜ்ஞாநாதிக்யம் சொல்லுகிறது ரக்ஷிக்கைக்கு விரகறியுமவனென்கைக்காக. ப்ராப்தியுண்டானாலும் விரகறியாதவன்று ரக்ஷிக்கப்போகாதிறே. சாஸ்த்ர ப்ரதாநமென்ன, ஆசார்யோபதேசமென்ன, அழகென்ன, சீலமென்ன, வ்யமாதிகளாலே ஆச்ரயணநுகூலமானருசியைப் பிறப்பிக்க வேண்டும்படியிறே சேதநனுடைய ப்ரக்ருதிபேதமிருப்பது. ஒருத்தரும் நினைதன்மை இன்ன தென்னவல்லரே. வேதங்களென்ன, ஜ்ஞாநாதிகரான வைதிகரென்ன, இவர்களொருத்தரும் உன்னுடைய அநுக்ரஹத்தினுடைய எல்லையை ஏவம்விதமென்று பரிச்சேதிக்கவல்லரோ. தன்னைப்பழியமாறி பகவத்ஸம்பந்தத்தை அறுத்துக்கொள்ளும் ஸம்ஸாரிகளை, தன்னை அழியமாறி ரக்ஷிக்கிற அநுக்ரஹத்தை எவரறியவல்லரே. ... ... ... ௨௯.

அ. முப்பதாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே - "நரத்திலும் பிறத்தி" என்று - மநுஷ்யயோநியில் அவதாரங்கள் ப்ரஸ்துதமாகையாலும், அதுக்குக் கீழ்ப்பாட்டிலே, "அதுண்டுமிழ்ந்து" என்று - வடதளசாயியவதாரம் ப்ரஸ்துதமாகையாலும், வடதளசாயியுடைய மௌக்த்யத்திலும் சக்தியிலும், சக்ரவர்த்தி திருமகனுடைய அவதாரத்தின் பெய்ப்பாட்டால் வந்த மௌக்த்யத்திலும் வீரஸ்ரீயிலும் ஈடுபடுகிறார்—இப்பாட்டில்.

மூ.—வானகமும்மண்ணகமும் வெற்புமேழ்கடல்களும்
போனகஞ்செய்தாலிலைத் துயின்றபுண்டரீகனே
தேனகஞ்செய்தண்ணறு மலர்த்துழாய் நன்மாலையாய்
கூனகம்புகத்தெறித்த கொற்றவில்லியல்லையே. ௩௦.

ப-ரை.— வானகமும்—ஸ்வர்க்கலோகத்தையும், மண்ணகமும்—பூலோகத்தையும், வெற்பும்—அந்த பூமிக்கு ஆதாரமான ஸப்தகுலபர்வதங்களையும், ஏழ்கடல்களும்—ஸப்தஸமுத்ரங்களையும், போனகம்செய்து—அமுதுசெய்தருளி, ஆலிலை—ஆலந்தளிரிலே, துயின்ற—கண்வளர்ந்தருளினவனாய், புண்டரீகனே—தாமரைமலரையொத்த அவயவங்களையுடையையாய், தேன் அகம்செய்—வண்டுகள் நெருங்கியிருப்பதாய், தண்—குளிர்ந்திருந்துள்ளதாய், நறு - பரிமளிதமாய், மலர் - செவ்வியையுடைத்தான, துழாய் - திருத்துழாயால் தொடுக்கப்பட்டு, நல்—விலக்ஷணமான, மாலையாய்—திருமாலையையுடையவனே. கூன் - கூனியுடைய கூன், அகம் புக-உள்ளேயடங்ும்படி, தெறித்த-உண்டைவில்லைத்தெறித்தவனாய், கொற்றம் வில்லி அல்லையே—ஜயப்ரதமான வில்லையுடையவனல்லையோ! என்று ஈடுபடுகிறார்.

வ்யா. வானகமும் மண்ணகமும். ஸ்வர்க்கவாஸிகளான இந்த்ராதி தேவர்களும், அவர்களுக்கு போக்ய போகோபகரண போகஸ்தாநமான ஸ்வர்க்கந்தானும், பூமியிலுள்ள மநுஷ்யாதிகளும் அவர்களுக்கு வாஸஸ்தாநமான பூமியும். (௨) "மஞ்சா: க்ரோசந்தி" என்னுமாப்போலே, தேசவாசிசப்தத்தாலே-தத்தீகளையும் சொல்லுகிறது; ப்ரளயத்தில் ஆபந்நரானர் நைந்திகராகையாலே. இத்தால் - பூமியிலுள்ளார்க்கு ஆராத்யராய் அவர்களுக்கு அபிமத பலப்ரதருமான இந்த்ராதிகளோடு ஆராதகரான மநுஷ்யாதிகளோடு வாசியற ப்ரளயாபத்தில் வந்தால் எல்லாருமொக்க ஈச்வரரக்ஷ்யபூதரென்கிறது. வெற்பும். அந்தபூமிக்கு

(௧) "ஸஹாநாதிரச்சாமவதாந்" (௨) "மஞ்சா: க்ரோசந்தி"

ஆதாரமாயிருந்துள்ள ஸப்தகுலபர்வதங்களும், இத்தால் - ஆதாரமான குலபர்வதங்களோடு ஆதேயமான பூமியோடுவாசியறஎல்லாவற்றுக்கும்தத்காலத்திலேசஸ்வரனே ஆதாரமென்கை. "வெற்பு" என்று- ஸ்தாவர ஜாதிக்கு முபலக்ஷணம். ஏழ்கடல்களும், த்வீபங்களுக்கு பேதகமான ஸப்த ஸமுத்ரங்களும். அத்தாலே- ஜலவாஸிஸத்வங்களையும் சொல்லுகிறது. ஆக, ஆராத்யரான இந்த்ராதிகளோடு, ஆராதகரான மநுஷ்யர்களோடு, தாரகங்களான பர்வதங்களோடு, தார்யையான பூமியோடு, ஸமுத்ரங்களோடு, ஜலசரஸத்வங்களோடுவாசியற எல்லாவற்றுக்கும் ஸர்வேச்வரனேரக்ஷகனென்றதாய்த்து. "போனகஞ்செய்து" என்றது-ரக்ஷகனுக்குரக்ஷணதர்மம் பசியர்க்குச் சோறுபோலே அபிமதமா யிருக்குமென்கை. (க)" யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ்ச உபே பவத ஓதந:" (உ) "அத்தா சராசரக்ரஹணாத்". ஆலிலைத்துயின்ற. அவ்வடிவுக்களவாய் தன்ஸௌகுமார்யத்துக்குச் சேர்ந்த ஆலந்தளிரிலே கண்வளர்ந்தருளின. புண்டரீகனே. புண்டரீகாக்ஷனே. "செங்கனிவாய்ச் செங்கமலம் கண் பாதங்கைகமலம்" என்கிறபடியே - திவ்யாவயவங்கள் அப்போதலர்ந்த செந்தாமரைகள்போலே யிருக்கையாலே புண்டரீக சப்தவாச்ய னென்கிறது. த்ரைலோக்ய ரக்ஷணத்தால் வந்த ப்ரீதி திருவடிவிலே தோற்றியிருக்கிறபடி. தேனகஞ்சேய். உள்ளெல்லாம் வண்டுகளாலே மிடைந்திருக்குமென்னுதல்; மதுவாலே பூர்ணமாயிருக்குமென்னுதல். தண்ணறுமலர்த்துழாய். ச்ரமஹரமாய் பரிமளிதமாய்ச் செவ்வியையுடைத்தான திருத்துழாய். நன்மாலையாய். அவயவசோபையிற்காட்டில் ஆகர்ஷகமாயிருக்கும் மாலையென்னுதல்; ரக்ஷணத்துக்கிட்ட தனிமாலையாகையாலே விலக்ஷணமென்னுதல். ஆக, ஸத்தாப்ரயுக்தமான சக்த்யதிசயத்தையும், அவயவசோபையையும், அலங்கார சோபையையும் அநுபவிக்கிறார். கூன்அகம்புகத்தெறித்த. கூனியுடைய கூன் உள்ளே யடங்கும்படியாகச் சுண்டுவில்லைத் தெறித்த. இத்தால் - அவதாரத்தில் மெய்ப்பாட்டால்வந்த மௌக்த்யமும் ரக்ஷகமாயிருக்கு மென்கை. ரக்ஷகவஸ்துவானால் அதிலுள்ளதெல்லாம் ரக்ஷகமாயிறேயிருப்பது. கோற்றவில்லியல்லையே. வில்பிடித்தபோது ஆக்கையையும் வில்லையும் கண்டபோதே ராவணாதிகள் குடல்குழம்பும்படியான வீரஸ்ரீயைச் சொல்லுகிறது. கொற்றம் - வென்றியும், வலியும். "புண்டரீகனே - கொற்றவில்லியல்லையே" என்று - அவதாராந்தரமா யிருக்கச்செய்தேயும் தர்மைக்யத்தாலே பால்யயௌவநா த்யவஸ்தா விசேஷங்கள்போலே தோற்றுகிறதாய்த்து இவர்க்கு. இப்பாட்டுத்தொடங்கி, மேல் "மாயமென்னமாயம்" என்கிறபாட்டளவும் வர அதுவே க்ரியையாகக்கடவது. ... ... ... ... ... ... ௩௰.

அ. முப்பத்தோராம்பாட்டு. கீழ்ப்பாட்டில் - அவதாரங்களிலுண்டான ரக்ஷகத்வத்தை யநுபவித்தார்; இதில் - ஆச்ரயணோந்முகரானவர்கள் திறத்தில் அவதாரகார்யமான உபகாரபரம்பரைகளை அநுபவிக்கிறார்.

மூ.—காலநேமிகாலனே கணக்கிலாத கீர்த்தியாய்
ஞாலமேழுமுண்டுபேண்டோர் பாலனாயபண்பனே
வேலைவேவவில்வளைத்த வெல்சினத்தவீரநின்
பாலராயபத்தர்சித்தம் முத்தி செய்யுமூர்த்தியே. ௩௧.

ப-ரை.— காலநேமி-காலநேமியாகிற அஸுரனுக்கு, காலனே—ம்ருத்யுவாய், கணக்கிலாத—அஸங்க்யேயமான, கீர்த்தியாய்-ஸௌலப்யாதி கல்யாணகுணங்களை யுடையனாய்,

(க) "யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ் சோபே பவத ஓதந:" (உ) "அத்தா சராசரக்ரஹணாத்"

ஞாலமேழும்—ஸகலலோகங்களையும், உண்டு—திருவயிற்றிலேவைத்து, பண்டு—பூர்வகல்பாவஸாநத்திலே, ஓர்பாலனாய்—அத்விதீயபாலனான, பண்பனே—ஆச்சர்யசக்தியை யுடையனாய், வேலை—கடல், வேவ—தக்தமாம்படி, வில்வளைத்த—வில்லைவளைத்தவனாய், வெல்சினத்த—பகைவரைவெல்லும் சினத்தையுடைய, வீர—வீரனே, நின்பாலராய—உன்விஷயத்தில் அநந்யப்ரயோஜநராய், பத்தர் சித்தம்—பக்திமான்களாயிருப்பவர்களுடைய மநஸ்ஸில், முத்திசெய்யும்—உன்னையொழிய வேறு ப்ராப்யப்ராபகங்களுண்டென்னும் ஸம்சயமறுக்கவல்ல, மூர்த்தியே—மஹாப்ரபாவத்தை யுடையவனே! இதென்னவாச்சர்ய மென்கிறார்.

வ்யா. காலநேமிகாலனே. காலநேமியாகிற அஸுரனுக்கும் ம்ருத்யுவானவனே. இத்தால், முமுக்ஷுக்களாய் தேவரீரை ஆச்ரயிக்கையிலே உத்யுக்தரானவர்களுடைய ஆச்ரயண விரோதிபாபங்களை, காலநேமியை நசிப்பித்தாப்போலே நசிப்பிக்குமவனென்கை. பிராட்டி பொறுப்பிக்க ஈச்வரன் பொறுக்குமாயிருக்கச்செய்தேயும், தாம் அதுக்கு அஞ்சினபடியாலே காலநேமியை த்ருஷ்டாந்தீகரிக்கிறாரிறே. கணக்கிலாத கீர்த்தியாய். ஆச்ரயணத்துக்கு ஏகாந்தமாய், எண்ணிறந்த ஸௌலப்யாதி கல்யாண குணங்களை யுடையையென்னும் குணவத்தாப்ரதையையுடையவனே. "குடந்தையன் கோவலன்" என்று—இந்த ஸௌலப்யாதிகள் பரத்வத்திலும் ப்ரஸித்தமிறே. * அபாரகாருண்யந்தொடங்கி, "ஸௌந்தர்யமஹோததே" என்னக்கடவதிறே. ஞாலமேழுமுண்டு பண்டோர் பாலனாய பண்பனே. ஆச்ரயித்தால் பண்ணுமுபகாரத்தைச் சொல்லுகிறது. ஸப்தத்வீபவதியான பூமியை யுண்டு பூர்வகல்பாவஸாநத்திலே அத்விதீயபாலனை ஆச்சர்யசக்தியை நிரூபகமாக வுடையவனே. பண்பு—இயல்வு. த்ரைலோக்யத்துக்கு முபலக்ஷணம். இத்தால், ஸ்வாதந்த்ர்யமே நிரூபகமாய்ப்போந்த ஸம்ஸாரியை சேஷத்வமே நிரூபகமென்னும்படி பண்ணவல்ல சக்தியையுடையவனென்கை. அதாகிறது—(க) "வியாஸஜெ,பக்ஷெ,வட ந நடேபடி." யென்றிருக்குமவனை, (உ) "ஓஷாகு தபூவேஜீவாவ" என்றும், "நின்னலால் இலேன்காண்" என்னும் சொல்லும்படி பண்ணுகை. வேலைவேவவில்வளைத்த வெல்சினத்தவீர. கடல் சுஷ்கதர்ணஸமூஹம்போலே தக்தமாம்படி வில்வளைத்தவனாய், ப்ரதிபக்ஷத்தை வெல்லுஞ் சினத்தை யுடைய வீரனே. இத்தால், ஆச்ரிதர்க்கு ஸ்வாநுபவ விரோதிவர்க்கத்தை அநாயாஸேந போக்குமவனென்கை. நின்பாலராயபத்தர் சித்தம் முத்திசெய்யும் மூர்த்தியே. உன்திறத்தில் அநந்யப்ரயோஜநராய், (ங) "ஸாயாவரவஸக்ஷ ந மஷெ ஙக" என்கிறபடியே—உன்பார்ச்வத்தை விடமாட்டாத பக்தர்களுடைய மநஸ்ஸை உன்னையொழிய வேறுப்ராப்யப்ராபகங்களுண்டென்னும் ஸம்சயமறுக்கவல்ல மஹாப்ரபாவத்தையுடையவனே. இதென்ன வாச்சர்யமென்று வாக்யசேஷம். ஆச்ரிதவிஷயத்தில் கீழுக்தமான தன்படிகளையநுஸந்தித்தால், அது தன்னையொழிய வேறொன்றையறியாதபடி பண்ணுமவனென்கை. ... ஙக.

அ.—முப்பத்திரண்டாம்பாட்டு. ஆச்ரிதவிரோதிநிரஸநம்பண்ணுமிடத்தில் சக்ரவர்த்திதிருமகன் செவ்வைப்பூசலாலே ராக்ஷஸரையழியச் செய்தாப்போலே விரோதிவர்க்கத்தைப்போக்கவுமாம், மஹாபலிபக்கலிலே வாமநனாய் அர்த்தித்துச்சென்று வஞ்சித்தழித்தாப்போலே யழிக்கவுமாம், ஆச்ரிதவிரோதி நிரஸநத்தில் ஸ்வபாவநியதியில்லையென்கிறார்.

(க) "த்விதாபஜ்யேயமப்யேவம் நநமேயம்" (உ) "முஹூர்த்தமபிஜீவாவ" (ங) "சாயாவாஸத்வ மநுகச்சேத்"

மூ.—குரக்கினப்படைகோடு குரைகடலின்மீதுபோய்
அரக்கரங்கரங்கவெஞ் சரந்துரந்தவாதிநீ
இரக்கமண்கொடுத்தவற் கிரக்கமொன்றுமின்றியே
பரக்கவைத்தளந்துகொண்ட பற்பபாதனல்லையே. ௩௨.

ப—ரை.—குரங்கு இனம் படைகொடு - வாநரஸேனையைக்கொண்டு, குரை- கோஷியா நின்றுள்ள, கடலில்—கடலில் அணைகட்டி, மீதுபோய்—அதின்மேலேபோய், (லங்கையில் ப்ரவேசிக்க,) அங்கு—அந்த வாநரஸேனையைக்கண்ட, அரக்கர்—ராக்ஷஸர், அரங்க - அழியும்படியாக, வெம்சரம் - அக்நிஸத்ர்சங்களான திருச்சரங்களை, துரந்த - நடத்தினவனாய், ஆதி நீ—வீரர்களில் ப்ரதாநனான நீ, இரக்க—வாமநாவதாரஞ்செய்தருளி யஜ்ஞவாடத்திலே சென்று இரக்க, மண்கொடுத்தவற்கு- பூமியைத்தந்த மஹாபலிவிஷயத்திலே, ஒன்றும் இரக்கமின்றி—சற்றேனும் இரக்கமில்லாமல், பரக்கவைத்து—திருவடிகளைப் பரப்பிவைத்து, அளந்துகொண்ட - பூமியையெல்லா மளந்துகொண்ட, பற்பபாதனல்லையே-தாமரைமலரையொத்த திருவடிகளையுடையவனல்லையோ! இதென்ன ஆச்சர்யமென்கிறார்.

வ்யா. குரக்கினப்படைகோடு. வாநர ஸமூஹமானஸேனையைக்கொண்டு. குரைகடலின்மீதுபோய். கடலின் விஸ்த்தியையும் கோஷத்தையுங்கண்டு, "இக்கடலை எங்ஙனே கடக்கக்கடவோம்" என்று அந்தஸேனை பயப்படும்படி கோஷத்தையுடைத்தான கடலைத் தூர்த்து அதின்மேலேபோய். இத்தால், ப்ரபலபதார்த்தங்களை க்ஷுத்ரபதார்த்தங்களைக் கொண்டு அழிக்கவல்லவனென்கை. அரக்கரங்கரங்க. அவ்வபதாநத்தைக்கண்டு, "வரபல புஜபலங்களால் நமக்கெதிரில்லை" என்றிருக்கும் ராக்ஷஸர், போக்கடிதேடி அஞ்சும்படியாக. அரக்கல்—காத்தல். "அரங்க" என்று மெல்லொற்றாய்க்கிடக்கிறது. வெஞ்சரந்துரந்த. (க) "பாவகஸங்காசை:" என்கிறபடியே அக்நிஸத்ர்சங்களான திருச்சரங்களை நடத்தின. ஆதிநீ. லங்கைக்கு அரணான ஸமுத்ரத்தைத்தூர்த்து, அரணையழித்து, ராக்ஷஸருடைய ஹ்ர்தயங்களையழித்து, திருச்சரங்களாலே உடல்களைத்துணித்துச்செய்த ஆனைத்தொழில்களாலே வீரர்களில் ப்ரதாநனான வீரன் நீயென்கிறார். ஆதிசப்தம்-ப்ராதாந்யத்தைச் சொல்லுகிறது. இரக்க மண்கொடுத்தவற்கு. நீ அர்த்தியாய்ச் செல்ல ப்ரத்யாக்யாநம் பண்ணுதல், சுக்ரனுடைய உபதேசங்கேட்டல் செய்யாதே, பூமியைத்தந்த மஹாபலிக்கு. இரக்கமொன்றுமின்றியே. பூமியில் அவனுக்கு ஒரு பதந்யாஸமும் சேஷியாதபடி. பரக்கவைத்தளந்துகொண்ட. சிறுகாலைக்காட்டி மூன்றடியிரந்து, இரண்டடியாலே பூமிப்பரப்படைய அளந்துகொண்ட. பற்பபாதனல்லையே. புஷ்பஹாஸஸுகுமாரமான திருவடிகளைக்கொண்டு காடுமோடையுமளந்துகொண்டவனல்லையோ. திருவடிகளின் ஸௌகுமார்யமும் பார்த்திலை, மஹாபலிபக்கல் ஔதார்யமும் பார்த்திலை, அர்த்திக்கிறவன் ப்ரயோஜநாந்தர பரனென்றும் பார்த்திலை, இந்த இந்த்ரனுடைய இரப்பையேபார்த்த வித்தனையிறே. இதென்ன ஆச்சர்யமென்று வாக்யசேஷம். ... ... ... ... ... ௩௨.

அ. முப்பத்து மூன்றாம்பாட்டு. ஆச்ரிதரக்ஷணத்தில் ஸ்வபாவநியதியில்லாதவோபாதி ஆச்ரயிப்பார்க்கும் ஜாதிநியதியில்லை யென்கிறார்.

(க) "பாவகஸங்காசை:"

மூ.—மின்னிறத்தெயிற்றரக்கன் வீழவெஞ்சரந்துரந்து
பின்னவற்கருள்புரிந் தரசளித்த பெற்றியோய்!
நன்னிறத்தோரின்சொலேழை பின்னைகேள்வ! மன்னுசீர்ப்
பொன்னிறத்தவண்ணனாய புண்டரீகனல்லையே. ௩௩

ப-ரை.—மின்—மின்னலையொத்த, நிறத்து—ஒளியையுடைத்தான, எயிறு—பற்களையுடைய, அரக்கன்—ராக்ஷஸனானவன், வீழ—முடியும்படியாக, வெம்—க்ரூரமான, சரம் துரந்து—சரங்களையேவி, பின்னவற்கு—அவன் தம்பியான ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு, அருள் புரிந்து—க்ருபைசெய்து, அரசளித்த—ராஜ்யத்தைக்கொடுத்த, பெற்றியோய்—சீலத்தை யுடையவனே, நல் நிறத்து—நல்லநிறத்தையும், ஓர் இன்சொல்—மிகவுமினிதான சொல்லையு முடையவளாய், ஏழை—தேவரீர்பக்கல் அதிசபலையான, பின்னை—நப்பின்னைப் பிராட்டிக்கு, கேள்வ—வல்லபனானவனே, மன்னு—நித்யமான, சீர்—ஔதார்யாதிகுணங்களையும், பொன் நிறத்த வண்ணனாய—ஸ்ப்ருஹணீயமானவிக்ரஹத்தையுமுடைய, புண்டரீகனல்லையே—புண்டரீகாக்ஷனல்லையோ.

வ்யா. மின்னிறத்தெயிற்றரக்கன். மின்போலே ஒளியையுடைத்தான எயிற்றோடே கூடின, ராக்ஷஸனான ராவணன். "மின்னிறத்தெயிறு" என்று—புஜபலத்தால்வந்த செருக்குக்கு ஸூசகமாயிருக்கிறது. "அரக்கன்" என்கையாலே, அத்தோள் வலி பரஹிம்ஸைக்கேயாகை ஜாதிஸ்வபாவமாயிருக்கை. ஸத்ப்ரக்ருதிகளுடைய தோள்வலியிறே ஸாத்விகர்க்கு ஒதுங்க நிழலாயிருப்பது. வீழவெஞ்சரம் துரந்து. அவன்முடியும்படியாக க்ரூரமான சரங்களையேவி. பின்னவற்கருள்புரிந் தரசளித்தபெற்றியோய். அவன் தம்பிக்கு ப்ரஸாதத்தைப்பண்ணி ராஜ்யத்தைக்கொடுத்த சீலத்தையுடையவனே. (௧) "ராகவம் சரணங்கத:" என்ற அத்தையேகொண்டு ஸ்ரீவிபீஷணாழ்வானை அவன் தம்பியென்று பாராதே, (௨) "வத்யதாம் வத்யதாம்" என்றமஹாராஜ ப்ரப்ருதிகள் வார்த்தையையுங் கேளாதே, (௩) "நத்யஜேயம்" (௪) "ஏதத்வ்ரதம் மம" என்று-ப்ரஸாதத்தைப்பண்ணி, ராஜ்யஸ்பர்ஶஹ அவனுக்கின்றிக்கே யிருக்க, (௫) "தாஸவச்சாவமாநித:" என்று-புறப்பட விட்டானென்று அந்த லங்காராஜ்யத்தைக் கொடுப்பதே!, இதென்ன ஸ்வபாவ மென்கிறார். பெற்றி—ஸ்வபாவம். நன்னிறத்தோரின்சொ லேழை பின்னைகேள்வ. நல்ல நிறத்தையும், இனிய பேச்சையு முடையவளாய், தேவரீர்பக்கல் அதிசபலையான நப்பின்னைப் பிராட்டிக்கு வல்லபனானவனே. இத்தால்-நப்பின்னைப்பிராட்டியுடைய ரூபகுணங்களும் ஆத்மகுணங்களும் தேவரீர்க்கு போக்யமாயிருக்குமாபோலே, ஸ்ரீ விபீஷணாழ்வான் தேவரீர்க்கு போக்யனா யிருக்கும்படியைச் சொல்லுகிறது. மன்னுசீர்ப்பொன்னிறத்த வண்ணனாய புண்டரீகனல்லையே. நித்யமான ஔதார்யாதி குணங்களையும், (௬) "அந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே" என்றும், (௭) "ருக்மாபம்" என்றும் சொல்லுகிற ஸ்ப்ருஹணீயவிக்ரஹத்தையு முடையையாய், (௮) "யதாகப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ" என்கிறபடியே புண்டரீகாக்ஷனா யிருக்கிறவனல்லையோ. இதென்ன ஆச்சர்யமென்று வாக்ய

(௧) "ராகவம் சரணங்கத:" (௨) வத்யதாம் வத்யதாம்" (௩) "நத்யஜேயம்" (௪) "ஏதத்வ்ரதம்மம" (௫) "தாஸவச்சாவமாநித:" (௬) "அந்தராதித்யே ஹிரண்மய: புருஷோத்ர்ச்யதே" (௭) "ருக்மாபம்" (௮) "யதாகப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ"

சேஷம். நிறம்—வடிவு. வண்ணம்—நிறம். ஆக, அவயவசோபையையும் வர்ணசோபையையும் சொல்லுகிறது. இத்தால் - ஆதித்யமண்டல மத்யவர்த்தியின் ஆத்மகுணங்களும் ரூபகுணங்களும் மஹிஷீவர்க்கத்துக்கு போக்யமாயிருக்குமாபோலே, ஸ்ரீகிருஷ்ணாழ்வானுக்கு போக்யபூதனாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது. ... ... ... ... ௧௨.

அ. முப்பத்திரண்டாம்பாட்டு. கீழ்ப்பாட்டில்—ருசியுடைய கிரீஷ்ணாழ்வானை ஜந்மத்தால் தாழ்வுபாராதே விஷயீகரிக்கும் சக்ரவர்த்தி திருமகனுடைய சீலத்தை அநுபவித்தார்; இதில் கார்ய காரணங்களென்ன, ப்ரமாண ப்ரமேயங்களென்ன, ஸகலமும் தானேயாய் நிற்கிறநீ புருஷார்த்தருசியில்லாதார்க்கு ருசிஜநகனாய்க்கொண்டு கோபஸஜாதீயனாய் அவதரித்த இது என்ன ஆச்சர்யமென்கிறார்.

மூ.—ஆதியாதியாதிநீ யோரண்டமாதியாதலால்
சோதியாதசோதிநீ யதுண்மையில்விளங்கினாய்
வேதமாகிவேள்வியாகி விண்ணினோடுமண்ணுமாய்
ஆதியாகியாயனாய மாயமென்னமாயமே. ௧௩.

ப-ரை.—ஆதியாதியாதி-த்ரிவிதகாரணமும் நீ; ஓர் அண்டம் ஆதி-ஏகரூபமான அண்டஜாதியுமாகிறாய்; ஆதலால்-இப்படி ஸகலஜகத்காரணபூதனாகையாலே, சோதியாத—பரீக்ஷிக்கவேண்டாத, சோதிநீ—தேஜஸ்தத்வம் நீ; அது—அந்த தேஜஸ்தத்வம் நித்யநிர்த்தோஷமாகையாலே, உண்மையில்—இதரவிஜாதீயனாய்க்கொண்டு, விளங்கினாய்—விளங்கினவனே, வேதமாகி—நித்யநிர்த்தோஷமான வேதத்துக்கு நிர்வாஹகனாய், வேள்வியாகி—ததர்த்தமான யாகத்துக்கு நிர்வாஹகனாய், மண்ணுமாய்—போகபூமிக்கும், விண்ணினோடு—மோக்ஷபூமிக்கும், ஆய்—நிர்வாஹகனாய், ஆதியாகி—இத்தருசிஜநகனாய்க்கொண்டு, ஆயனாய மாயம்—கோபஸஜாதீயனாய் அவதரித்த ஆச்சர்யம், என்னமாயம்—என்ன ஆச்சர்யமென்று அநுபவிக்கிறார்.

வ்யா. ஆதியாதியாதிநீ. (க) "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம்" என்கிறபடியே த்ரிவிதகாரணமும் நீ. எதுக்குக் காரணமாகிற தென்னில்; மஹதாதி விசேஷாந்தமான ப்ராக்ருதஸ்ருஷ்டிக்கு (உ) "பஹுஸ்யாம்" என்கிற ஸங்கல்பத்தாலே காரணபூதன். ஓரண்டமாதி. மஹதாத்யவஸ்தனை நீயே ஏகரூபமான அண்டஜாதியுமாவுதி. (ங) "அண்டாநாம் து ஸஹஸ்ராணாம்" என்கிறபடியே அண்டங்கள் ஏகரூபமாயிறே யிருப்பது. ஏகவசநம் - ஜாத்யபிப்ராயத்தாலே. அதாகிறது - அண்டத்தில் உத்பந்நமான ப்ரஹ்மாதி பிபீலிகாந்தமான ஸகலபதார்த்தங்களையும் ஸ்ருஷ்டித்து, ததநுப்ரவேசத்தாலே ஸகலாந்தர்யாமியாய் நிற்கை. ஆதலால் சோதியாத சோதிநீ. இப்படி ஸகலஜகத்காரணபூதனாகையாலே பரீக்ஷிக்க வேண்டாத உபாஸ்ய தேஜஸ்தத்வம் நீ. உபாஸ்யமான தேஜஸ்தத்வம் - த்ரிவிதமஹாபூதமோ, தேவதையோ, ஆதித்யனோ, வைச்வாநராக்நியோ வென்று சங்கித்து, ஸர்வநிர்வாஹகமான தேஜஸ்தத்வமே உபாஸ்யமென்று நிர்ணயிக்க வேண்டாதிருக்கை. (ச) "அதயதத:பரோதிவோஜ்யோதி:" (ரு) "தமேவ ஜ்யோதிஷாம் ஜ்யோதி:" (சு) "நாராயணபரோஜ்யோதி:" என்கிறதத்வமல்லவோநீ. அதுண்மையில் விளங்கினாய்.

(க) "ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீத், ஏகமேவாத்விதீயம்" (உ) "பஹுஸ்யாம்" (ங) "சத்ராசராம்ருதா" (ச) "அதயதத:பரோதிவோஜ்யோதி:" (ரு) "தமேவஜ்யோதிஷாஞ்ஜ்யோதி:" (சு) "நாராயணபரோஜ்யோதி:"

அந்த தேஜஸ்தத்வம் நித்யநிர்த்தோஷ ப்ரமாணஸித்த மாகையாலே, இதரவிஸஜாதீயனாய்க் கொண்டு விளங்கினவனே. வேதமாகி. வேதத்திலுடைய நித்யநிர்த்தோஷத்வத்துக்கு நிர்வாஹகனாய். அதாவது - ஸம்ஹாரவேளையில் திருவுள்ளத்திலே ஸம்ஸ்காரத்தாலே வைத்து, (க) "வாசாவிரூபநித்யயா" என்கிறபடியே ஆதியிலே வேதத்துக்கு அத்யாபகனானவனே. வேள்வியாகி. தகர்க்தமான யாகத்துக்கு நிர்வாஹகனானவனே. அதாவது - ஆராத்யனானவனே. விண்ணினோடு மண்ணுமாய். ஆராதநபலமான போகமோக்ஷ பூமிகளுக்கு நிர்வாஹகனாய். "விண்" என்று - பரமபதம். "மண்" என்று - சதுர்த்தசபுவநத்துக்கு உபலக்ஷணம். யாகம் அந்யோந்ய விருத்தங்களான போகமோக்ஷங்களிரண்டுக்கும் ஸாதநமாமோ வென்னில்; ஜீவபரயாதாத்ம்யஜ்ஞாந பூர்வகமான யாகம் மோக்ஷத்துக்கும், கேவலயாகம் போகத்துக்கும் ஸாதநமாகையாலே அவிருத்தம். ஆதியாகி. இதெல்லாம் ருசியுடையவனுக்கங்கமிறே, அந்தருசிஜநகனாய்க்கொண்டு. ஆயனாயமாய மே ன்ன மாயமே. அதீந்த்ரியமான இவ்விக்ரஹத்தை கோபஸஜாதீயமாக்கி ருசியில்லாதார்க்கு ருசிஜநகனாய்க்கொண்டு வந்தவதரித்த விது என்ன ஆச்சர்யம். ... ... கூச.

அ. முப்பத்தைந்தாம்பாட்டு. அதீந்த்ரியமான திவ்யவிக்ரஹத்தை கோபஸஜாதீயமாக்கி, ருசியில்லாதார்க்கு ருசிஜநகனாய்க்கொண்டு அவதரித்த ஏற்றத்தை யநுபவித்தார் - கீழ்ப்பாட்டில்; இதில் - ஒரு கோபஸ்த்ரீக்குக் கட்டவும் அடிக்கவும் விடவுமாம்படி நியாம்யனான குணத்தையநுஸந்தித்து, திரியவும் க்ர்ஷ்ணாவதாரத்திலே ஈடுபடுகிறார்.

மூ.—அம்புலாவுமீனுமாகி யாமையாகியாழியார்
தம்பிரானுமாகிமிக்க தன்புமிக்க தன்றியும்
கொம்பராவுநுண்மருங்கு லாயர்மாதர் பிள்ளையாய்
எம்பிரானுமாயவண்ண மென்கொலோ வெம்மீசனே. கரு.

ஆழியார் தம்பிரானுமாகி-திருவாழியையுடைய ஸர்வாதிகனானவன், அன்புமிக்கு-சேதநர்பக்கல் ஸங்காதிசயத்தாலே, அம்பு—ஜலத்திலே, உலாவு-வர்த்திக்கிற, மீனுமாகி-மத்ஸ்யமாய், (அம்ர்தமதநவேளையிலே மந்தரதாரணார்த்தமாக,) ஆமையாகி-கூர்மமாய், மிக்கது—கைகழியவவதரித்து; அன்றியும்—, கொம்பு—பூங்கொம்பு போலேயும், அராவு-ஸர்ப்பம் போலேயும், நுண்—ஸூக்ஷ்மமான, மருங்குல்—இடையையுடைய, ஆயர்மாதர் பிள்ளையாய்—யசோதைப் பிராட்டிக்குப் பிள்ளையாய், எம்பிரானுமாய வண்ணம்—எங்களை அநந்யார்ஹமாக்கிக் கொண்டது, என்கொல்—என்ன ஆச்சர்யம், எம் ஈசனே—எங்களுக்கு நியந்தாவானவனே! என்று ஈடுபடுகிறார்.

வ்யா. "ஆழிபார் தம்பிரானுமாகி - அம்புலாவுமீனுமாகி யாமையாகி - மிக்கது" என்றந்வயமாகக் கடவது. (உ) "தவைவஸ்மோ ஸ்ஷ ஸரஜாவ்ரயாஹ்" என்கிற படியே ஸர்வேச்வரத்வ ஸூசகமான திருவாழியையுடைய ஸர்வாதிகனுமாய் வைத்து. அம்புலாவுமீனுமாகி. அம்பிலே வர்த்திக்கிற மத்ஸ்யமாய். அப்பை, "அம்பு" என்று மெலித்துக்கிடக்கிறது. "முதுகில் மலைகளை மீதுகொண்டு வருமீனை" என்கிறபடியே

(க) "யோவைவேதாம்ச்ச ப்ரஹிணோதிதஸ்மை" (உ) "தமஸ: பரமோதாதா ஸங்கசக்ரகதாதர:"

ப்ராபார்ணவத்திலே நோவுபட்ட தேவர்களுடைய ஆபத்தைப் போக்குகைக்காகத் தன்னிலமான நீரிலே ஸஞ்சரிக்கக்கடவதான மத்ஸ்யமுமாய். சசப்தத்தாலே-தேவயோநி மநுஷ்யயோநிகளில் பண்ணின அவதாரங்களால் பர்யவஸியாத அநுக்ரஹாதி சயத்தைச் சொல்லுகிறது. ஆமையாகி. அர்ணவதர வேளையிலே மந்தராதாரணார்த்தமாக கூர்மமாய். (க) "கூர்ம்மம் ஸ்ரஸ்டவாந்" என்கிறபடியே ப்ரளயவேளையில் கூர்மவிக்ரஹத்தைச் கொள்ளிற்றுகவுமாம். மிக்கது. க்ஷூத்ரயோநியென்றும் பாபயோநியென்றும் பாராதே கைகழிய அவதரித்து. அன்புமிக்கு. ஆபந்நராய், அவதாரங்களுக்கு நிமித்தபூதரான சேதநர்பக்கலுண்டான ஸங்காதிசயத்தாலே யவதரித்த வித்தனையிறே. ஒரு கர்மம் ப்ரேரிக்கவாதல், ஒரு கர்த்தா ப்ரேரிக்க வாதலன்றிறே; "மீனோடேனமுமாகி தானானன்னில் தானுயசங்கு" என்னக்கடவதிறே. அன்றியும். அதுக்குமேலே ஸுரிபோக்யமான வடிவை ஜலசரஸத்வஸஜாதீயமாக்குவதே! என்று அதிலே யீடுபட்டாய்த்து இவர்தாமிருப்பது. அதிற்காட்டிலும் க்ருஷ்ணாவதாரத்தில் குணாதிக்யம் தம்மை யீடுபடுத்தினபடியைச் சொல்லுகிறார்மேல்; கோம்பராவுநுண் மருங்குலாயர்மாதர்பிள்ளையாய். கொம்புபோலேயும் அரவுபோலேயும் நுண்ணிய இடையையுடைய அசோதைப்பிராட்டிக்குப் பிள்ளையாய். மத்ஸ்யாத்யவதாரங்களில் ரக்ஷணத்திலே தன்ஸ்வாதந்த்ர்யங்கள் குலைந்ததில்லை; இதில் ஒருகோபஸ்த்ரீக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படி நியாம்யனாய்வந்தவதரித்தகுணாதிக்யமுண்டிறே, (உ) "ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம்" என்கிற ஸ்வரூபமும் அழிந்ததிறே இதில். அவதாரங்களில் ஸ்வரூபத்தையும் அழியமாறின வித்தனையிறே. எம்பிரானுமாயவண்ணமேன்கொலோ. அவர்களுக்குக் கட்டவும் அடிக்கவுமாம்படியான நீர்மையைக்காட்டி எங்களை அநந்யார்ஹமாக்கிக்கொண்டதென்செய்தபடி!. பஹுவசநத்தாலே-மற்ற ஆழ்வார்களையும் கூட்டிக்கொள்ளுகிறார். எம்ஈசனே. அதின்தோம்-எங்களுடைய இழவுபேறுகள் உன்னதென்னும்படியான ஸம்பந்தத்தாலே. ௩௫.

அ.—முப்பத்தாறும்பாட்டு. கீழ்ச்சொன்ன பாரதந்த்ர்யத்தை அநுபாஷித்து அவ்வவதாரங்களின் ஆச்சர்ய சேஷ்டிதங்களிலே யீடுபடுகிறார்.

மூ.—ஆடகத்தபூண்முலை யசோதையாய்ச்சிபிள்ளையாய்ச்
சாடுதைத்தோர்புள்ளதாவி கள்ளதாயபேய்மகள்
வீடவைத்தவெய்யகொங்கை யையபாலமுதுசெய்
தாடகக்கைமாதர்வா யமுதமுண்டதேன்கொலோ. ௩௬.

ப—ரை.—ஆடகத்த-பொன்னால்செய்த, பூண்-ஹாரத்தாலே அலங்க்ருதமான, முலை-ஸ்தநங்களையுடையளான, ஆய்ச்சி - இடைச்சியான, அசோதை - யசோதைப்பிராட்டிக்கு, பிள்ளையாய்-, (முலைவரவுதாழ்த்துச் சீறி நிமிர்த்த திருவடிகளாலே,) சாடு-சகடாஸுரனை, உதைத்து—உதைத்து முறித்து, ஓர்—ஒப்பற்ற, புள்ளது ஆவி—புள்ளின்கருத்தையுடையளாய், கள்ள தாய—க்ருத்ரிமத்தாயான, பேய்மகள்—பூதனையானவள், வீட—நீயமுடியும்படிக்கோக, வைத்து-உன் திருப்பவளத்திலேவைத்த, வெய்ய கொங்கை-க்ரூரமானமுலையிலுள்ள, ஐய—ஸூக்ஷமமான ப்ராணனை க்ரஹிக்கவல்ல, பால்—பாலை, அமுதுசெய்து—அமுது

(க) "கூர்ம்மம்பூதம் ஸர்ப்பந்தம்" (உ) "ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம்"

செய்தருளி, § ஆடகம் - ஸ்வர்ணபரணங்களாலே அலங்க்ருதமான, கை-கைகளையுடையரான, மாதர்வாய் அமுதம்-ஸ்த்ரீகளின் அதராம்ருதத்தை, உண்டது-புஜித்தவிது, என்கொலோ—அவ்விஷத்துக்குப் பரிஹாரமாகவோவென்கிறார். [§ ஆடகம்—ஹாடகம்; வடசொல்திரிபு.]

வ்யா.— ஆடகத்தபூண்முலையசோதையாய்ச்சி பிள்ளையாய். "கொம்பராவு நுண்மருங்கு லாயர் மாதர்பிள்ளையாய்" என்றதுதன்னையே முகபேதத்தாலே அநுபவிக்கிறார். ஆடகத்தபூண்முலை. பொன்னாலேசெய்த ஹாரத்தாலே அலங்க்ருதமான முலையையுடையவள். "க்ருஷ்ணன் அமுதுசெய்யக்கடவன்" என்று முலையையொப்பித்துக்கொண்டு நிற்கிறாளாய்த்து-அவள்; அந்தப்ரேமத்தை அநுபவிக்கிறாரிறே இவர். "ஆயர்மாதர் பிள்ளையாய்" என்ற ஸாமாந்யத்தை, "அசோதையாய்ச்சிபிள்ளையாய்" என்று விசேஷிக்கிறார். ஸர்வநியந்தாவானவன், ஓரிடைச்சி "என்மகன்" என்று நியமிக்கலாம்படியிருக்கிற ஆச்சர்யத்தில்நின்றும் கால்வாங்கமாட்டுகிறிலர். சாடுதைத்து. ஸ்தந்யார்த்தியாய்த் திருவடிகளை நிமிர்த்து சகடாஸுரனை நிரஸித்து. (க) "யந்நசேஷ்டம் தவபாதபங்கஜம்" என்றும், "கோலமாமென் சென்னிக்கு" என்றும்—அநந்யப்ரயோஜநர்க்கு ப்ராப்யமான திருவடிகளை துஷ்ப்ரக்ருதிகளுக்கு (உ) வதஸாதநமாக்குவதே! என்கை. ஓர்புள்ளதாவிகள்ளதாய பேய்மகள். பிள்ளைகள் அணுங்க ஸஞ்சரிக்கும்புள்ளின் கருத்தையுடையளாய், அபூர்வையென்று சங்கித்து விலங்கவொண்ணாதபடி க்ருத்ரிமஜநநியான பேய்ப்பெண். "ஓர்புள்" என்று—தப்பவொண்ணாதபடி அணுங்கப்பண்ணும் புள்ளென்றபடி. வீடவைத்த வெய்யகொங்கை. ஜகஜ்ஜீவநமான உன்திறத்திலே தீங்கை விளைப்பாளாகத் திருப்பவளத்திலேவைத்த க்ரூரமான முலையில். ஐயபால் அமுதுசெய்து. ஸூக்ஷ்மமான ப்ராணனைப்புக்கு க்ரஹிக்கவல்ல அதிஸூக்ஷ்மமான பாலை அமுதுசெய்து. அவள் தன்னுடையக்ரௌர்யத்தையும், ஸ்தநத்தினுடைய க்ரௌர்யத்தையும் விரித்துப்பேசுகிறாராய்த்து - தம்முடைய பயாதிசயத்தாலே. "ஐய" என்று ஸம்போதநமாகவுமாம். பூதனையைத் தாயென்று மௌக்த்யத்தாலே அவள் முலையை யமுதுசெய்தான். ப்ரகாசஸந்நிதியில் தமஸ்ஸுப்போலே துஷ்ப்ரக்ருதிகள் நசிக்கும் தர்மிஸ்வபாவத்தாலே அத்தலை இத்தலையான வித்தனை. ஆடகக்கைமாதர்வாய் அமுதமுண்டதென்கொலோ. அப்பருவத்திலே "உன்னையுமொக்கலையில்கொண்டு" என்னுமாப்போலே, அவ்வூரில் கந்நிகைகள் தங்கள்க்ருஹத்திலே கொண்டுபோக, யௌவநதசையைப் பரிக்ரஹித்து விதக்தருப்கலந்து அவர்கள் வாகம்ருதத்தையுண்டவிது என்னோ!. ஆடகக்கைமாதர். பொன்னாலே அலங்கரித்த கைவளையையுடையபெண்கள். அவன் பிடிக்குங்கையென்றும், அவனணைக்கும் கொங்கையென்றும் அலங்கரிக்கிறார்களாய்த்து. "என்கொலோ" என்றது—அவ்விஷத்துக்கு இவ்வாகம்ருதம் பரிஹாரமோ, ஸர்வதாரகனாய் வேறுதாரகாந்தரமின்றிக்கேயிருக்கிற உனக்கு ப்ரதிகூலர் ப்ராணனும் அநுகூலர்ப்ரேமமும் தாரகமாயிருந்ததோ. பால்யாவஸ்தையிலே யுவாவாயும், யுவாவான நீ பாலனாயுமிருந்த விது என்ன ஆச்சர்யமென்கிறார். ... ... ... ... ... ... கக.

அ.—முப்பத்தேழாய்ப்பாட்டு. பின்பு க்ருஷ்ணவதாரத்தில் விதக்த சேஷ்டிதங்களையும் முக்தசேஷ்டிதங்களையும் அநுபவிக்கிறவர், மௌக்த்யத்தாலும் ஸௌலப்யத்தாலும் வரையாதே எல்லாரையும் தீண்டினபடியாலும் க்ருஷ்ணவதார ஸத்ருசமான வடதளசாயியையும், ஸ்ரீவராஹவாமந ப்ராதுர்ப்பாவங்களையும், க்ருஷ்ணவதாரத்தோடொக்க வநுபவிக்கிறார்.

(க) "தம்மதீயம் தவபாதபங்கஜம்" (உ) வயஸாபந.

மூ.—காய்த்தநீள்விளங்கனி யுதிர்த்தெதிர்ந்த பூங்குருந்தம்
சாய்த்துமாபிளந்தகைத் தலத்தகண்ணனென்பரால்
ஆய்ச்சிபாலையுண்டுமண்ணை யுண்டுவெண்ணெயுண்டுபின்
பேய்ச்சிபாலையுண்டபண்டோ ரேனமாயவாமனா. ௯௭.

ப-ரை.—(க்ர்ஷ்ணன்மேலே விழுகைக்குறுப்பாக,) காய்த்த - பரப்புமாறக்காய்த்து, நீள்—ஓங்கிநின்ற, விளங்கனி—விளாவான அஸுரனுடையகனிகளை, உதிர்த்து—கன்றைவிட்டெறிந்து உதிர்த்து, எதிர்ந்த—போகாதேநின்று, பூ—மூட்டாக்கிட ப்பூத்துக்கிடக்கிற, குருந்தம்-குருந்தமரத்தை, சாய்த்து—வேரோடேபறித்துவிழவிட்டு, மா—கேசியை, பிளந்த—இருகூறாகப்பிளந்துபொகட்ட, கைத்தலத்த-திருக்கையையுடைய, கண்ணன் என்பர்-க்ர்ஷ்ணனென்று வ்யாஸபராசராதிகள்சொல்லாநின்றார்கள்; ஆய்ச்சி—யசோதைப்பிராட்டியுடைய, பாலை உண்டு - பாலையமுதுசெய்து, வெண்ணெய் உண்டு - வெண்ணெயை யமுதுசெய்து, பேய்ச்சி—தாய்வடிவுகொண்டு வஞ்சகையாய்வந்த பூதனையுடைய, பாலை உண்டு—முலைப்பாலை அமுதுசெய்து, பின்—கல்பாவஸாநத்திலே, (சிறிய திருவயிற்றிலே,) மண்ணை உண்டு—ஜகத்தையடைய அமுதுசெய்து, பண்டு—கல்பாதியிலே, ஒரு—அத்விதீயமான, ஏனம் ஆய—வராஹாவதாரஞ்செய்தருளி பூமியையெடுத்து ரக்ஷித்து, (அந்த பூமியை மஹாபலி அபஹரிக்க,) வாமனா—வாமநாவதாரஞ் செய்தருளி அளந்துகொண்டவனே! என்று ஈடுபடுகிறார்.

வ்யா. காய்த்தநீர் விளங்கனியுதிர்த்து. க்ர்ஷ்ணன்மேலே விழுகைக்குறுப்பாகப் பரப்புமாறக்காய்த்து ஓங்கிநின்ற விளாவான அஸுரனுடைய கனிகளை, கன்றைவிட்டெறிந்து உதிர்த்து. எதிர்ந்த பூங்குருந்தம் சாய்த்து. விளாவான அஸுரனையழியச் செய்து, க்ர்ஷ்ணன் கிட்டின பின்பும் போகாதே நின்ற பூங்குருந்தை ஊசி வேரோடே பறித்து விழவிட்டு. இதுவும் அவன்மேலே விழுந்து புஷ்பாபசயம் பண்ணுகைக் குறுப்பாகப் பரப்புமாறப் பூத்துநின்ற தாய்த்து. இவை யிரண்டாலும் – அநுகூல வேஷராய் நலியவந்த அஸுரர்களை அழியச்செய்தபடி சொல்லிற்று. மாபிளந்த. ப்ரதிகூலனாயே வாய்பாறி ஊரையழிக்கவந்த கேசியை அநாயாஸேந இருகூறாகப் பிளந்து அவ்வாபத்தைப் போக்கினவன். கைத்தலத்த கண்ணனென்பரால். ஓராயுதத்தா லன்றிக்கே லீலையாகவழித்த திருக்கையையுடைய க்ர்ஷ்ணனென்று ஜ்ஞாநாதிகரான வ்யாஸபராசராதிகள் சொல்லாநிற்பர்கள். ஆய்ச்சிபாலையுண்டு மண்ணையுண்டு வெண்ணெயுண்டு பின்பேய்ச்சி பாலையுண்டு. ஆய்ச்சிபாலையுண்டு-வெண்ணெயுண்டு. யசோதைப்பிராட்டியுடைய பாலையும் வெண்ணெயையும் அமுதுசெய்து. இத்தால் (க) "விஜிவத்ஸ:" என்கிற தத்வத்துக்கு ஆச்ரிதஸ்பர்ச முள்ளதொரு த்ரவ்யத்தாலன்றிக்கே செல்லா திருக்கிறபடியைச் சொல்லிற்று. பேய்ச்சிபாலையுண்டு. தாய்வடிவு கொண்டு விநாசிகையாய் வந்த பூதனையி னுடைய முலையை யமுதுசெய்து, அவ்வழியாலே அவளை முடித்து. யசோதையி னுடைய பாலோபாதி பூதனையுடைய ப்ராணனும் தாரகமாயிருக்கிறபடி. பின்மண்ணையுண்டு. க்ர்ஷ்ணனுடைய மௌக்த்யத்தை யநுபவித்த ஸமநந்தரம் தத்ஸத்ர்சமான வடதளசாயியுடைய மௌக்த்யத்தை யநுபவிக்கிறார். கல்பாவஸாநத்திலே சிறிய திருவயிற்றிலே ஜகத்தையடைய அமுதுசெய்தால் ஸாத்மியாதென்றறியாத மௌக்த்யமிறே வடதளசாயியுடைய மௌக்த்யம். பண்டோரேனமாயவாமனா. கல்பாதியிலே ஸ்ரீவராஹமாய், ஒருத்தர் அர்த்தியா திருக்க பூமியையெடுத்து ரக்ஷித்து, அந்தபூமியை மஹா

(க) "விஜிகத்ஸ:"

பலியைபஹரிக்க ஸ்ரீவாமநனுயளந்து கொண்டவனே. தன்னைபழியமாறி ரக்ஷித்தஸௌலப்யத்துக்கும், லரையாதே எல்லாரையுந்தீண்டின சீலத்துக்கும் க்ர்ஷ்ணவதாரத்தோடு ஸாம்யமுண்டாகையாலே இவ்வவதாரங்களை யநுபவிக்கிறார். ... ... ... கூஎ.

அ. முப்பத்தெட்டாம்பாட்டு. (க) "பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்" என்கிறபடியே - ப்ரதிகூலரை அழியச்செய்தும் அநுகூலரை உகப்பித்தும் செய்தருளின க்ர்ஷ்ணவதார சேஷ்டிதங்களை அநுபவிக்கிறார்.

மூ.—கடங்கலந்தவன்கரி மருப்பொசித்தோர்பொய்கைவாய்
விடங்கலந்த பாம்பின்மேல் நடம்பயின்ற நாதனே
குடங்கலந்த கூத்தனாய கொண்டல்வண்ண தண்டுழாய்
வடங்கலந்தமாலைமார்ப காலநேமிகாலனே. கூஅ.

ப-ரை,— கடம் கலந்த—மதஜலம் வ்யாப்தமான உடம்பையுடைய, வன்—அதிப்ரபலமாயிருந்த, கரி-குவலயாபீடமென்னும் யானையினுடைய, மருப்பு—கொம்பை, ஒசித்து-முறித்து, ஓர்—அதிபயங்கரமாகையாலே அத்விதீயமான, பொய்கைவாய்-பொய்கையிலே, விடம் கலந்த-மிக்கவிஷத்தையுடைய, பாம்பின்மேல்—காளியனுடைய பணங்களின்மேலே, நடம் பயின்ற—நர்த்தநஞ்செய்தருளி, (அத்தாலே,) நாதனே—உன்னுடைய நாதத்வத்தை ப்ரகாசிப்பித்தவனாய், கலந்த—கையில்பொருந்தின, குடம்—குடத்தையுடையனாய், கூத்தனாய்—ஜாதிப்ரயுக்தமான கூத்தையுடையனாய்,கொண்டல் வண்ண-காளமேகநிபச்யாமமான வடிவையுடையனாய், தண்—குளிர்ந்த, துழாய் வடம்—திருத்துழாய் வடத்தோடும், மாலை கலந்த—வநமாலையோடுங் கூடின, மார்ப—திருமார்பையுடையவனாய், காலநேமி—தேவர்களுக்கு விரோதியான காலநேமிக்கு, காலனே—ம்ர்த்யுவானவனே! என்று அவனுடைய ஆச்ரிதபக்ஷபாததிசயத்தில் ஈடுபடுகிறார்.

வ்யா. கடங்கலந்தவன் கரிமருப்பொசித்து. குவலயாபீடத்தை மதிப்பித்தபடியாலே அம்மதஜலம் உடம்பிலே வ்யாப்தமாய் அதிப்ரபலமாயிருந்த அதின் கொம்பை முறித்து. இத்தால் - ஸ்வாபாவிகமான பலத்தாலும் மதபலத்தாலும் துர்ஜயமான குவலயாபீடத்தை அநாயாஸேந அழித்தானென்கை. கடம் - ஆனைமதம். ஓர்பொய்கைவாய் விடங்கலந்த பாம்பின்மேல் நடம்பயின்றநாதனே. (உ) "வாதாஹதாம்புவிக்ஷேபஸ்பர்சதக்தவிஹங்கமம்" என்கிறபடியே அதிபீஷணமாகையாலே அத்விதீயமான பொய்கையிலே. முதலைகிடந்த பொய்கையும் இதுக்கு ஸத்ர்சமன்றென்கை. விஷமே இவனுக்கு உபாதாநமென்னும்படி விஷப்ரசுரமான காளியனுடைய பணங்களிலே வல்லாரடினாப்போலே திருவடிகளை மாறியிட்டு, அவ்வழியாலே அவனை தமித்துப்போகவிட்டு, யமுனையை ஸர்வோபஜீவ்யமாம்படி பண்ணி, உன்னுடைய நாதத்வத்தை ப்ரகாசிப்பித்தவனே. (ங) "துஷ்டுவுர்முதிதாகோபா த்ருஷ்ட்வா (சிவ)ஜலாம் நதீம்" என்னக்கடவதிறே. இவ்வளவால் துஷ்க்ர்த்விநாசஞ்சொல்லி, மேல் ஸாது பரித்ராணஞ்சொல்லுகிறது. குடங்கலந்தகூத்தனாய கொண்டல்வண்ண. கையில் திருவாழிபொருந்தினாப்போலே பொருந்தின குடத்தையுடையனாய், ஜாதிப்ரயுக்த

(க) "பரித்ராணாயஸாதூநாம் விநாசாயச துஷ்க்ர்தாம்" (உ) "வாதர்ஹத்தாம்புவிக்ஷேப ஸ்பர்சதக்தவிஹங்கமம்" (ங) "துஷ்டுவுர்முதிதாகோபாத்ர்ஷ்ட்வா (சிவ)சிதஜலாம்நதீம்".

மான கூத்தையாடி, மன்றிலே உன்னுடையவழகை ஸர்வஸ்வதாநம்பண்ணினவனே. ப்ரயோஜநாந்தர நிரபேக்ஷமாக ஜலஸ்தலவிபாகமன்றிக்கே வர்ஷிக்கும் மேகஸ்வபாவனே. குடக்கூத்தாடினபோதை காளமேகநிபச்யாமமான நிறத்தைச்சொல்லிற்றாகவுமாம். தண்டுழாய் வடங்கலந்தமாலைமார்ப. இப்படிக்ருஷ்ணாவதாரான இடையருடைய சேஷ்டிதத்திலே யீடுபட்டவன், ஸர்வசேஷியாய், (க) "அவாப்தஸமஸ்தகாமனாய்" என்கிற பூர்ணனென்கிறார். ஐச்வர்ய ஸூசகமான திருத்துழாய்வடத்தோடும் வநமாலையோடும்கூடின திருமார்வையுடையவனே. வடம்—தொடை. மாலை—வநமாலை. காலநேமிகாலனே. ஆபத்ஸகனாய்த்திருவடிகளிலே வீழ்ந்த தேவர்களுக்கு விரோதியான காலநேமிக்கு ம்ருத்யுவானவனே. இத்தால்—ஸர்வஸ்மாதாரணனாயிருக்கச்செய்தேயும் தன் திருவடிகளிலே தலைசாய்த்தார்க்கு விரோதிகளானார், தனக்கு சத்ருவென்கை. ... ... ... ... ... ருஅ.

அ.—முப்பத்தொன்பதாம்பாட்டு. ஸாதுபரித்ராணமும் துஷ்க்ருத்விநாசமும் சொல்லிற்று—கீழ்ப்பாட்டில்; இதில்—இவ்வளவு புகுரவில்லாத இந்த்ராதிகளுடைய விரோதிகளான ராக்ஷஸவர்க்கத்தை அழியச்செய்து அவர்கள் குடியிருப்பைக்கொடுத்தபடியையும், அவ்விந்த்ரன்றான் ஆச்ரிதரைக்குறித்து ப்ரதிகூலனானபோது அவனை அழியச்செய்யாதே முகாந்தரத்தாலே ஆச்ரிதரை ரக்ஷிக்கும் நீர்மையையும் அநுபவிக்கிறார்.

மூ.—வெற்பெடுத்துவேலைநீர்கலக்கினாயதன்றியும்
வெற்பெடுத்துவேலைநீர் வரம்புகட்டிவேலைசூழ்
வெற்பெடுத்தவிஞ்சிசூ ழிலங்கைகட்டழித்தநீ
வெற்பெடுத்துமாரிகாத்த மேகவண்ணனல்லையே. ருக.

ப-ரை.—வெற்பு எடுத்து - மந்தரபர்வதத்தைப் பரிகரமாகக்கொண்டு, வேலை நீர் - திருப்பாற்கடலை, கலக்கினாய்—; அது அன்றியும்—அதுக்குமேலே, வெற்பு எடுத்து—கண்டமலைகளைப்பிடுங்கி, வேலை நீர்—ஸமுத்ரஜலத்தின்மேலே, வரம்பு கட்டி—அணைகட்டி, வேலை சூழ்—கடலை அகழாகவுடைத்தாய், வெற்பு—த்ரிகூடபர்வதத்திலே விச்வகர்மாவாலே சமைக்கப்பட்டிருப்பதாய், எடுத்த—கடக்கவரிதான, இஞ்சி சூழ்—மதிளாலே சூழப்பட்ட, இலங்கை - லங்கையிலே, கட்டு - தர்மம் தங்காதபடியான ஸ்வபாவத்தை, அழித்த - மாற்றியருளின, நீ - தேவரீர், வெற்பு எடுத்து - கோவர்த்தநபர்வதத்தையெடுத்து, மாரி காத்த - வர்ஷாபத்தைப்போக்கியருளின, மேகம் வண்ணன் அல்லையே - காளமேக நிபச்யாமமான வடிவையுடையவனல்லையோ என்கிறார்.

வ்யா. வெற்பெடுத்து வேலைநீர்கலக்கினாய். தூர்வாஸச்சாபத்தாலே இந்த்ராதிகள் ஐச்வர்யத்தையிழந்து, (உ) "சரணம்த்வாமநுப்ராப்தாः" என்கிறபடியே திருவடிகளிலே சரணம்புகுர, கடல்கொண்டு முழுகும் மந்தரத்தைப் பரிகரமாகக்கொண்டு ஸமுத்ரஜலத்திலே அவர்களிழந்தவையடங்கலும் உத்பந்நமாம்படி கலக்கினாய். (ங) 'ரத்நாகரம்' 'மத்ஸ்யாகரம்' என்று லோகப்ரஸித்தமாயிருந்துள்ள ஸமுத்ரஸ்வபாவத்தைத்தவிர்த்து

(க) "அவாப்தஸமஸ்தகாம:" (உ) "சரணம்த்வாமநுப்ராப்தாः" (ங) "ரத்நாகரம், மத்ஸ்யாகரம்"

ஸ்வர்க்கத்திலுள்ள பதார்த்தங்களுக்கு உத்பாதகமாக்கினாய். (க) "ஏதத்கதம் கதய யந்மதிதஸ்த்வயா ஸௌ ஹித்வா ஸ்வபாவ நியமம் ப்ரதிதம் த்ரிலோக்யாம் । அச்வாப்ஸரோ விஷஸுதாவிது பாரிஜாதலக்ஷ்ம்யாத்மநா பரிணதோ ஜலதிர்ப்பபூவ" என்னக்கடவதிறே. "ப்ரயோஜநாந்தரபரன்" என்று அவன் சிறுமைபாராதே, மோக்ஷப்ரதனாயிருக்கிற தன்பெருமைபாராதே, "ஈச்வரோஹம்" என்றிருக்குமவனென்று அவனுடைய பூர்வவ்ருத்தம்பாராதே, "சரணமென்று நின்றான்" என்றதத்தையேபார்த்து ரக்ஷித்தருளினாய். அன்றியும். இதுதானே போருமாய்த்து- ஆச்ரிதர் உன்னைத் தஞ்சமென்று விச்வஸித்திருக்கைக்கு, அதுக்குமேலே. வெற்பெடுத்து வேலைநீர் வரம்புகட்டி. கண்டமலைகளைப்பிடுங்கி, ஸமுத்ரஜலத்தின்மேலே, பூமியிலேவரப்புகட்டுமாப்போலே, ப்லவங்கங்கள் காலாலேநடந்துபோம்படி அணைகட்டி, இதொரு அதிமாநுஷமான ஆச்சர்யம். அகாதமான ஸமுத்ரத்தில் மலையமிழ்ந்ததில்லை, திரைக்கிளர்த்தியில் மணற்கரையப்பெற்றதில்லை. வேலைசூழ் வெற்பெடுத்த இஞ்சிசூழிலங்கை கட்டழித்தநீ. கடலை அகழாகவுடைத்தாய், த்ரிகூடபர்வதத்திலே விச்வகர்மாவாலே சமைக்கப்பட்டதாய், கடக்கவரிதான மதிளாலே சூழப்பட்ட லங்கையினரணை, (உ) "யதா ஸைகதமம்பஸி" என்னும்படியே அநாயாஸேந அழித்தநீ. இஞ்சி-மதிள். கட்டு-அரணும்; இயல்வும். தர்மந்தொடங்கக்கடவதன்றிக்கேயிருக்கிற லங்காஸ்வபாவத்தை அழித்து, (ங) "விபீஷணஸ்து தர்மாத்மா" என்கிறபடியே தார்மிகனை நிர்வாஹகனாக்கி, தர்மமே ஸஞ்சரிக்கும்படியைச்சொல்லிற்று; இனி இந்த்ரன்றான் ஆச்ரிதர்க்கு துஷ்கர்த்தானால் அவனை யழியச்செய்யாதே முகாந்தரத்தாலே ஆச்ரிதரை ரக்ஷிக்கும்படி சொல்லுகிறது வெற்பெடுத்துமாரிகாத்த மேகவண்ணனல்லையே. "இடையர் க்ர்ஷ்ணனையண்டைகொண்டு நம்முடைய ம(மு)கபங்கம்பண்ணினார்கள்" என்று ஸம்வர்த்தககணத்தையேவி வர்ஷிப்பிக்க; அவனை அழியச்செய்கை ப்ராப்தமாயிருக்க ப்ராதிகூல்யத்தில் நியதனல்லாமையாலும், (ச) "நகமேபம்" என்கிறபடியே திருவடிகளில் தலைசாயுமவனென்கிற நியதியில்லாமையாலும், கோவர்த்தநகிரியையெடுத்து வர்ஷத்தால்வந்த அநர்த்தத்தைப்பரிஹரித்த மஹோதாரனல்லையோ. காளமேகநிபச்யாமமாய் ச்ரமஹரமான விக்ரஹத்தைச் சொல்லவுமாம். ஒரு மேகஸமூஹம் பாதககோடியிலேயாய் நிற்க ஒருமேகத்தாலே வந்த ஆபத்தைப்பரிஹரித்தாப்போலே யிருந்ததென்கை. ... ... ... ... ... ௩௯

அ. நாற்பதாம்பாட்டு. ஈச்வராபிமாநிகளான தேவதைகளுடைய ரக்ஷணப்ரகாரம் சொல்லிற்று - கீழ்; இப்பாட்டில் - அநந்யப்ரயோஜநரை ரக்ஷிக்குமிடத்தில் நித்யஸூரிகளுக்கு மேலெல்லையான பிராட்டிமாரோடு ஸம்ஸாரிகளுக்குக் கீழான திர்யக்குக்களோடுவாசியறத் தன்னையொழியச் செல்லாமை யொன்றுமே ஹேதுவாக விரோதிநிரஸந பூர்வகமாக ரக்ஷிக்கும் ஆச்சர்யங்களை யநுபவிக்கிறார்.

மூ.—ஆனைகாத்தோரானைகோன் றதன்றியாயர்பிள்ளையாய்
ஆனைமேய்த்தியானெயுண்டி யன்றுகுன்றமொன்றினால்
ஆனைகாத்துமையரிக்கண் மாதரார்திறத்துமுன்
ஆனையன்றுசேன்றடர்த்த மாயமேன்னமாயமே. ௪௦.

(க) "ஏதத்கதம் கதயந்மதிதஸ்த்வயாஸௌ ஹித்வாஸ்வபாவ நியமம் ப்ரதிதம்த்ரிலோக்யாம் । அச்வாப்ஸரோ விஷஸுதாவிது பாரிஜாதலக்ஷ்ம்யாத்மநா பரிணதோ ஜலதிர்ப்பபூவ"
(உ) "யதாஸைகதமம்பஸி" (ங) "விபீஷணஸ்து தர்மாத்மா" (ச) "நகமேபம்"

ப-ரை.— ஆனை—முதலையாலே இடர்பட்ட ஸ்ரீகஜேந்த்ராழ்வானை, காத்து—ரக்ஷித்து, அது அன்றி—அதுக்குமேலே, ஆயர்பிள்ளை ஆய்—இடைச்சாதிக்கு நியாம்யனுயவதரித்து, ஓர்—அத்விதீயமான, ஆனை—குவலயா பீடமென்கிற யானையை, கொன்று—அநாயாஸேநக்கொன்று, அது அன்றி—அதுக்குமேலே, (அந்தஜாதிக்கு உசிதமாக,) ஆனை—பசுக்களை, மேய்த்தி—புல்லுள்ளவிடம் தேடி மேய்க்காநிற்றி; ஆ நெய்—பசுக்களின் நெய்யை, உண்டி—அமுதுசெய்யாநிற்றி; (அதுக்குமேலே,) அன்று—இந்த்ரன் ஸப்தமேகங்களையும் வர்ஷிப்பித்தபோது, குன்றம் ஒன்றினால்—கைக்கெட்டிற்றொரு மலையை எடுத்து, ஆனை காத்து—பசுக்களை ரக்ஷித்து, மை—அஞ்சநத்தாலே அலங்க்ருதமாய், அரி—செவ்வரி கருவரிகளோடுகூடின, கண்—திருக்கண்களையுடைய, மாதரார் திறத்து—நப்பின்னைப்பிராட்டிக்காக, முன்—ஸம்ச்லேஷார்த்தமாக ஒப்பித்திருக்கிற தசையிலே, சென்று—அவள் ஸந்நிதியிலே சென்று, ஆனை—ரிஷபங்களேழையும், அடர்த்த—ஸம்ஹரித்த, மாயம்—ஆச்சர்யம், என்ன மாயம்—என்ன ஆச்சர்யமென்கிறார்.

வ்யா. ஆனைகாத்து. அநந்யப்ரயோஜநத்வமொழிய இவ்வருகு ஜந்மாதிகளாலே ஒருயோக்யதையில்லாத ஸ்ரீ கஜேந்த்ராழ்வானை ரக்ஷித்து. இன்னவானை யென்னுதே, "ஆனைகாத்து" என்கிறாய்த்து அவனுடைய ஆபத்ப்ரஸித்தியாலும் அவனை ரக்ஷித்த (ரக்ஷண) ப்ரகாரத்தின் ப்ரஸித்தியாலும். (க) "கஜஆகர்ஷதே தீரே" (உ) "பரமாபதமாபந்ந:" என்னும்படியிறே அவனுடைய ஆபத்து. (ங) "ஸ சக்ரீ சவங்குவதி ஸூரஹி ந ஸஹஸ்தூ" "தவஞ்செய்தார் வெள்கிநிற்ப விண்ணுளார் வியப்ப" என்னக்கடவதிறே. "அதன்றியாயர் பிள்ளையாய் - ஓரானைகொன்று" என்றந்வயம். அதன்றியாயர் பிள்ளையாய். தேவரீரைத் தஞ்சமென்றிருக்கைக்கு ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுடைய ரக்ஷணப்ரகாரமே அமையும், அதுக்குமேலே, இடைச்சாதிக்கு நியாம்யனுயவதரித்து. கீழ் "அசோதைபாய்ச்சி பிள்ளையாய்" என்றத்தை வ்யாவர்த்திக்கிறது. ஓரானைகொன்று. ஸ்ரீ வஸுதேவர் தேவகிப்பிராட்டி, (ச) "நலஸமம் யாஜஸி.க)ஹை.ஃ" என்கிற ஸ்ரீ மதுரையில் பெண்களாக இவ்வநுகூலவர்க்கமடைய பயப்படும்படி மதிப்பித்து கம்ஸன் நிறுத்தின அத்விதீயமான குவலயாபீடத்தை அநாயாஸேநக்கொன்று. ஸ்வாபாவிகமான பலமும் மதபலமுமாய் அத்விதீயமாயிறே யிருப்பது. "கடங்கலந்தவன்கரி" என்னுரிறே. அதன்றியானை மேய்த்தி. அதுக்குமேலே, அந்தஜாதிக்கு உசிதமாகப் பசுக்களை ரக்ஷியா நிற்றி. (ரு) "விஜிவ஥ஃ" "விளையாடுசூழலைச்சூழவே நின்று காலிமேய்க்கவல்லாய்" என்கிறபடியே தன்னழகாலே வயிறுநிரம்பும்படியிறே பசுக்களைரக்ஷித்தது. ஆநெயுண்டி. பசுக்களின் நெய்யை அமுது செய்யாநிற்றி. ஸத்யகாமனுப் விஜிகத்ஸனுயிருக்கிற நீ ஆச்ரிதஸ்பர்சமுடைய தொரு த்ரவ்யத்தை யொழியச் செல்லாமையாலேயிறே அத்தைவிரும்பி அமுதுசெய்தது. அன்றுகுன்றமொன்றினலானைகாத்து. அதுக்குமேலே இந்த்ரன், "ஸம்வர்த்தககணம்" என்கிற மேகஸமூஹத்தைக்கொண்டு வரையழியச்செய்கிற தசையிலே கைக்கெட்டிற்றொருமலையையெடுத்து பசுக்களை ரக்ஷித்து. ஆன் - பசு. கீழிற்பாட்டிலும் இவ்வபதாநம் சொல்லிற்று. அதுக்கும் இதுக்கும் வாசியென்னென்னில்; ப்ராதிகூல்யத்தில் நியதனல்லாமையாலே இந்த்ரனை யழியச்செய்யமாட்டாத நீர்மையைச் சொல்லிற்று - அங்கு; இங்கு - தன்னை யொழியச் செல்லாத

(க) "கஜஆகர்ஷதே தீரே" (உ) "பரமாபதமாபந்ந:" (ங) "அதந்த்ரிதசமூபதி ப்ரஹிதஹஸ்தம்" (ச) "ஸமயம்புத்தமித்யாஹு:" (ரு) "விஜிகத்ஸ:"

யசுக்களை ரக்ஷித்தபடியைச் சொல்லுகிறது. மையரிக்கண் மாதரார்திறத்து. அஞ்ஜநத்தாலே அலங்க்ருதமாய், செவ்வரிகருவரிகளோடேகூடின திருக்கண்களையுடைய நப்பின்னைப்பிராட்டிக்காக. முன்னானையன்று சென்றடர்த்தமாயம். ஸம்ச்லேஷார்த்தமாக ஒப்பித்து நிற்கிற தசையிலே அவள் ஸந்நிதியிலே சென்று ரிஷபங்களையுடடர்த்த ஆச்சர்யம். என்ன மாயமே. முன்புசெய்த செயல்களுக்கும் அவ்வருகேயொன்றாயிருந்ததே!. ... சo.

அ.—நாற்பத்தோராம்பாட்டு. நீ உகந்தாரை, தத்ஸஜாதீயனாய் வந்தவதரித்து ஸ்வரூபாநுரூபமாக ரக்ஷிக்கும்படியையும், விமுகரான ஸம்ஸாரிகளை ஸங்கல்பத்தாலே கர்மாநுகூலமாக ரக்ஷிக்கும்படியையும், அநுஸந்திக்கப்புக்கால் பரிச்சேதிக்க முடியாதாயிருந்ததே! என்கிறார்.

மூ.—ஆயனாகியாயர்மங்கை வேயதோள்விரும்பினாய்
ஆயநின்னையாவர்வல்ல ரம்பரத்தோடிம்பராய்
மாயமாயமாயைகொல் அதன்றிநீவகுத்தலும்
மாயமாயமாக்கினாயுன் மாயமுற்றுமாயமே. சுக.

பதவுரை.—ஆயன் ஆகி—இடைச்சாதியிலேபிறந்து, ஆயர் மங்கை—நவயௌவநஸ்வபாவையான நப்பின்னைப்பிராட்டியுடைய, வேய—மூங்கில்போலே ஸ்ப்ருஹணீயமான, தோள் விரும்பினாய்—திருத்தோளோடே ஸம்ச்லேஷித்தாய்; அம்பரத்தொடு—ப்ரஹ்மாதிதேவர்களிலும், இம்பராய்—இஹலோகஸ்தரான மநுஷ்யர்களிலும், நின்னை—ஸர்வசக்தியுக்தனான உன்னை, யாவர்—யார், ஆய வல்லர்—ஆராய்கைக்கு ஸமர்த்தர்; மாய—ஆச்சர்யசக்தியுக்தனே, மாயம்—ப்ரக்ருதி ஸம்பந்தத்தால்பிறந்த, மாயைகொல்—அஜ்ஞாநத்தாலேயோ; அது அன்றி—அந்த அவதாரவைபவத்தையொழிய, நீ—தயாளுவான நீ, வகுத்தலும்—மஹாதிகளை விபஜித்திருந்தபோதிலும், (அவன் தந்த கரணகளேபரங்களைக்கொண்டு தங்களுக்கு ஹிதம் பார்க்கமாட்டாதே,) மாய-விஷயாந்தரப்ரவணராய் நசிக்க; (அவ்வளவிலும் உபேக்ஷியாதே,) மாயம் ஆக்கினாய்—ஸ்வசரீரமான ப்ரக்ருத்யவஸ்தமாக்கினாய், உன்—உன்னுடைய, மாயம் முற்றும்—மாநஸவ்யாபாரமான ஸங்கல்பஜ்ஞாநமடங்கலும், மாயமே—ஆச்சர்யாவஹமேயாயிராநின்றதே! என்கிறார்.

வ்யா. ஆயனாகி ஆயர்மங்கை வேயதோள் விரும்பினாய். இடைஜந்மத்திலே அவதரித்து நவயௌவநஸ்வபாவையான நப்பின்னைப்பிராட்டியுடைய, சுற்றுடைமையாலும் பசுமையாலும் செவ்வையாலும் வேய்போலே ஸ்ப்ருஹணீயமான திருத்தோளோடே ஸம்ச்லேஷித்தாய். நித்யமங்கள விக்ரஹத்தை கோபஸஜாதீயமாக்கிக்கொண்டவதரித்து அத்யாதரத்தைப் பண்ணினாய். "ஆனையன்று சென்றடர்த்த" என்று கீழ்ப்பாட்டிலும் இவ்வபதாநத்தைச்சொல்லிற்று, இதுக்கு மதுக்கும் வாசியென்னென்னில்; விரோதி நிரஸநத்திலே நோக்கு. அது—ஸுரிபோக்யமான விக்ரஹத்தை கோபஸஜாதீயமாக்கி வந்தவதரித்தபடியைச்சொல்லுகிறது; இது—அநந்யப்ரயோஜநரான ஆச்ரிதர்களுடைய ரக்ஷணத்துக்கு உபலக்ஷணம். ஆயநின்னையாவர்வல்ல ரம்பரத்தோடிம்பராய். உபரிதநலோகங்களிலுண்டான ப்ரஹ்மாதிகளிலும், பூமியில் விசேஷஜ்ஞரான மநுஷ்யாதிகளிலும் ஸர்வசக்தியுக்தனான உன்னையார் ஆராயவல்லார், அப்ராக்ருத விக்ரஹத்தை ப்ராக்ருத ஸஜாதீயமாக்கின இத்தை எவர்

பரிச்சேதிக்கவல்லார்; ஒருவருமில்லையென்கை. மாய. ஆச்சர்யசக்தியுக்தனே. மாயமாயை கோல். (க) "தைவீஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா" என்கிறபடியே ப்ரக்ருதி ஸம்பந்தத்தால்பிறந்த அஜ்ஞாநத்தாலேயோ, அன்றிறே. "விப்-கேஷபே." (உ) "மாயா வயுநம் ஜ்ஞாநம்" என்கிறபடியே மாயாசப்தம் ஜ்ஞாநவாசியாகிறது. அஜ்ஞாநமும் ஜ்ஞாநவிசேஷமிறே. அஸ்ப்ர்ஷ்ட ஸம்ஸாரகந்தனை தான், அப்ராக்ர்தமாய் அதீந்த்ரியமான திவ்யவிக்ரஹத்தை ப்ராக்ர்தஸஜாதீயமாக்கி சக்ஷுர்விஷயமாக்கின இத்தையறியலாமோ. (ந) "அவாக்யநாதர:" என்கிறபடியே ஸ்வயம் பூர்ணனனவன் ஒரு கோபஸ்த்ரீயுடைய வடிவழகிலே அத்யாதரத்தைப் பண்ணினவித்தைத்தான் எவர்பரிச்சேதிக்க. அதன்றி. அந்த அவதார வைபவத்தையொழிய. ஸகலஜகத்ஸ்ர்ஷ்ட்யாதிகளால் பண்ணின உபகாரங்களைப்பரிச்சேதிக்கவொண்ணுதென்கிறது மேல்; நீவகுத்தலும். ஸம்ஸாரிகளுடைய இழவிலே * தயமாநமநாவாயிருந்துள்ளநீ, உன்னை லபிக்கைக்கு ஹேதுவான ஜ்ஞாநமுண்டாய் நல்வழிபோகைக்குக் கரண களேபரங்களைக் கொடுக்கச்செய்தேயும், மஹதாதி விசேஷாந்தமான வகுப்பு, தத்கார்யமான அண்டங்களாகிற வகுப்பு, அண்டாந்தர்க்கதமான சதுர்த்தச புவநாத்மகமான வகுப்பு, ததந்தர்க்கத தேவாதிகளாகிற வகுப்பு. மாய. நசிக்க. அந்த சரீரங்களைக் கொண்டு தந்தாம் ஹிதம் பார்க்க மாட்டாதே விஷயாந்தரப்ரவணராய் நசிப்பார்கள். மாயமாக்கினாய். அவ்வளவினு முபேக்ஷியாதே இவற்றுக்கு இனி ஸம்ஹாரமே ஹிதமென்று பார்த்து ஸ்வசரீரமான ப்ரக்ர்த்யவஸ்தமாக்கினாய். உன்மாயமுற்றுமாயமே. உன்னுடைய மாநஸ வ்யாபாரரூபமான ஸங்கல்ப ஜ்ஞாநமடங்கலும் ஆச்சர்யாவஹமாகாநின்றதீ!. ... ... ... ... சக.

அ. நாற்பத்திரண்டாம்பாட்டு. "நீவகுத்தலும் மாயமாய மாக்கினாய்" என்று ஸ்ர்ஷ்டி ஸம்ஹாரங்கள் சேர ப்ரஸ்துதமாகையாலே, (ச) "விச்வம் ருத்ர: ஸர்வோ ஹ்யேஷ ருத்ர:" என்று ச்ருதிப்ரஸித்தராயிருப்பாருமுண்டாயிருக்க, நம்மையே அபரிச்சிந்த ஸ்வபாவராகச் சொல்லக்கடவீரோ வென்று பகவதபிப்ராயமாக; அந்த ருத்ரனுக்கு வந்த ஆபத்தை, அவதரித்துத் தாழநின்று அந்நிலையிலே போக்கின தேவரீர்க்கு இது பரிஹரிக்கை பரமோவென்கிறார்.

மூ.—வேறிசைந்தசெக்கர்மேனி நீறணிந்தபுன்சடைக்
கீறுதிங்கள்வைத்தவன்கை வைத்தவன்கபாலமிசை
ஊறுசெங்குருதியால் நிறைத்தகாரணந்தனை
ஏறுசென்றடர்த்தவீச பேசுகூசமின்றியே. சஉ.

பஊரை.— வேறு—வேறாக, இசைந்த—தன்னுடைய ஸம்ஹர்த்ர்த்வத்துக்குச்சேர்ந்த, செக்கர் மேனி—க்ருத்தமான வேஷத்தையும், நீறு அணிந்த—பஸ்மம்தரித்த சரீரத்தையும், புன்—கோரமாயிருந்துள்ள, சடை—ஜடையையுமுடையனாய், (அந்தஜடையிலே,) கீறு திங்கள் வைத்தவன்—கலாமாத்ரமான சந்த்ரனை தரித்தவனாய், கை வைத்த—கையிலே வைத்த, வல்—வலிய, கபாலம்மிசை—கபாலத்திலே, ஊறு—உன் திருமேனியிலே ஊறிநின்றுள்ள, செம் குருதியால் நிறைத்த—சிவந்த ரத்தமாகிற ஜலத்தாலே நிறைத்த, கார

(க) "மம மாயா துரத்யயா" (உ) "மாயா வயுநம் ஜ்ஞாநம்" (ந) "அவாக்யநாதர:" (ச) "விச்வருத்ர: ஸர்வோ ஹ்யேஷ ருத்ர:"

னைந்தனை—ஹேதுவை; ஏறு—ரிஷபங்களை, கூசம் இன்றி—கூசாமல், சென்று—அவற்றி னருகேசென்று, அடர்த்த—நிரஸித்த, ஈச—நியாமகனே, பேசு—எனக்கருளிச் செய்ய வேணும்.

ஸ்யா. வெறிசைந்த சேக்கர்மேனி. வேறுகத்தன்னுடைய ஸம்ஹாரகத்வத்துக்குச் சேர்ந்த க்ருத்தமான வேஷத்தையுடையனாய். சேக்கர் - சிவப்பு. சிவத்தல் - கோபித்தல். ஸ்ர்ஷ்ட்யாதிக்ரபத்துக்கும் தேவரீர்க்கு தமையேயிறே ஸ்வபாவம். நீறணிந்தபுன்சடை. பஸ்மோத்தூளித ஸர்வாங்கனாய் க்ர்பணமானஜடையை யுடையனாய். புன்மை - பொல்லாமை. இத்தால்- ப்ராயச்சித்தத்துக்கும் பாதகித்வத்துக்கும் ஏகாந்தமான லிங்கத்தையுடையவனென்கை. கீறுதிங்கள் வைத்தவன். அந்த ஜடையிலே கலாமாத்ரமான சந்த்ரனை வைத்தவன். ஆக, ஸம்ஹார்த்ர்த்வமாத்ரமே தொழிலென்றும், சாஸ்த்ரவச்யதையை ஸூசிப்பிக்கிற ஜடாதிகளை யுடையவனென்றும், சந்த்ரதாரணத்தாலே - போகப்ரதானனென்றும் சொல்லிற்றுப்த்து. கைவைத்த வன் கபாலமிசை. கையில்வைத்த வலியகபாலத்திலே. பாதகித்வப்ரகாசகமான கபாலதாரணம், பாதகம் போனாலல்லது போகாத ப்ராபல்யத்தையுடைத்தான கபாலமென்றும் சொல்லிற்றுப்த்து. சாஸ்த்ரவச்யனுக்கிறே இப்பாதகமுண்டாவது. ஊறுசெங்குருதியால் நிறைத்த காரணந்தனை. உன்திருமேனியிலே ஊறுகின்றுள்ள ரக்தஜலத்தாலே நிறைத்தஹேதுவை. பேசு. உன்னுடைய ஈச்வரத்வமும் அவனுடைய ஈசிதவ்யத்வமுமொழிய வேறுஹேதுவுண்டாகில் அருளிச்செய்யவேணும். உன்னுடைய ரக்ஷகத்வமும் அவனுடைய ரக்ஷ்யத்வமுமொழிய ஹேதுவுண்டோ. இங்கே, “ செங்குருதி ” என்றும், மேலே, “ அலங்கல் மார்வில் வாசநீர் கொடுத்தவன் ” என்றுமருளிச்செய்யாநின்றார், இரண்டுக்கும் பேதமென்னென்னில்; அப்ராக்ர்தஸம்ஸ்தாநத்தை இதரஸஜாதீயமாக்கின மெய்ப்பாட்டைச் சொல்லுகிறது—இங்கு; (க) “ ஸவடூமநூ: ” என்கிற அப்ராக்ர்த ஸம்ஸ்தாநத்தை இதரஸஜாதீயமாக்கிற்றென்று தோற்றுகைக்காகவந்த வைலக்ஷண்யத்தைச் சொல்லுகிறது - அங்கு. கூசமின்றியே - ஏறுசென்றடர்த்தவீச பேசு. ரிஷபங்களினுடைய க்ரௌர்யத்தையும் தன் ஸௌகுமார்யத்தையும் பார்த்துக்கூசாதே, மேல் விழுந்தடர்த்து உன்னீச்வரத்வம் நிறம்பெறும்படி நின்றவனே! எனக்கருளிச் செய்யவேணும். சாஸ்த்ரவச்ய ஜந்மத்திலே பிறந்து எழுகோஹத்யை பண்ணச்செய்தேயும் ஈச்வரத்வம் நிறம் பெறுகின்றுப்ரே; ருத்ரன் ஈச்வரத்வத்தால் வந்த மேன்மை குலையாதே நிற்கிறவளவிலே பாதகியானன், அப்பாதகத்தை, அவதரித்துத் தாழநின்ற நிலையிலே போக்கியருளினாய், இந்நெடுவாசியை தேவர்களோ எதிரிகளாயழிக்கப் புக்கால்தான் அழியுமோ. “கூசமின்றியே—பேசு” என்னவுமாம். (உ) “ ஜஹாமெள வாநூவெரஜாத: ” என்று - சிலர்க்கு தேவரிருடைய மேன்மையை மறைத்துப் பரிமாறுகிறபடியை நினைத்துக்கூசாதே, (ங) “ ஜநூ கஸிஹூவமெ8ஷியூழ ” என்கிறபடியே அவதாரத்தினுடைய அப்ராக்ர்தத்வத்தையுள்ளபடி அறிகிற வெனக்கு அருளிச்செய்யவேணும். ... ... ... ... சஉ.

அ. நாற்பத்துமூன்றும்பாட்டு. ருத்ரனுடைய பாதகத்தைப் போக்கின வளவேயன்றிக்கே, க்ர்ஷ்ணனாய்வந்தவதரித்து பூபாரமான கம்ஸனை ஸபரிகரமாக நிரஸிக்கையாலும்,

(க) “ ஸர்வகந்த: ” (உ) “ அஹமேவா பரந்தவேஜாத: ” (ங) “ ஜந்மகர்மச மே திவ்யம் ”

அந்த ருத்ராதிகளோடு க்ரிமிகீடாதிகளோடு வாசியற ஸ்ரீ வாமனனாய் எல்லார்தலைகளிலும் திருவடிகளைவைத்து உன் ஸர்வசேஷித்வத்தை ப்ரகாசிப்பித்தபடியாலும் ஜகத்காரணபூதன் நீயேயென்கிறார். (க) "காலநேமிஹநோதாயோஸௌ" என்று-பூமி, கம்ஸனை பூபாரமாகச் சொன்னவிறே.

மூ.—வெஞ்சினத்தவேழவெண் மருப்பொசித்துருத்தமா
கஞ்சனைக்கடிந்துமண் ணளந்துகொண்டகாலனே
வஞ்சனத்துவந்தபேய்ச்சி யாவிபாலுள்வாங்கினாய்
அஞ்சனத்தவண்ணனாய வாதிதேவனல்லையே. ௯௩.

ப-ரை.—வெம் சினம்-மிக்ககோபத்தையுடைய, வேழம்-குவலயாபீடத்தினுடைய, வெள்—வெளுத்த, மருப்பு—கொம்பை, ஒசித்து—அநாயாஸேநமுறித்து, (அந்தச்செய்தியைக்கேட்டு,) உருத்த—கோபித்தவனாய், மா—மிக்கவலிமையையுடையனான, கஞ்சனை—கம்ஸனை, கடிந்து—நிரஸித்து, வஞ்சனத்து வந்த-வஞ்சகையாய்வந்த, பேய்ச்சி-பூதனையினுடைய, ஆவி—ப்ராணனை, பால்—பாலோடேகூட, உள்வாங்கினாய்—அமுதுசெய்தருளினவனாய், (வாமநாவதாரஞ்செய்தருளி நீரேற்றுப்பெற்ற,) மண்-பூமியை, அளந்துகொண்ட - திருவடிகளாலே அளந்துகொண்ட, காலனே - ப்ரதிகூலர்க்கு ம்ர்த்யுவானவனே, அஞ்சனத்தவண்ணன் ஆய—மைபோன்ற திருநிறத்தையுடையனாய், ஆதி தேவன் அல்லையே—உத்பாதகனானவனே! என்று கூப்பிடுகிறார்.

வ்யா. வெஞ்சினத்த வேழவெண் மருப்பொசித்து. வெவ்விய சினத்தையுடைய குவலயாபீடத்தினுடைய வெளுத்தகொம்பை அநாயாஸேநமுறித்து. வெவ்வியசினம்—அதிகோபம். அதினுடைய சினமும் ஹிம்ஸாபரிகரமானகொம்பும் பயஹேதுவானவோபாதி கொம்பினுடையவர்ணமும் பயஹேதுவாயிருக்கிறதாய்த்து இவர்க்கு. உருத்தமாகஞ்சனைக்கடிந்து. அதுகேட்டு க்ருத்தனாய் ப்ரக்ர்த்யா (உ) பலோத்தரனான கம்ஸனுடைய நினைவைக்கடிந்து—அவன் நினைத்த நினைவையவன்றன்னோடேபோக்கி. (ங) "கிம்ஸ்ரேணாயஷ்வீரேண." "வஞ்சனத்துவந்தபேய்ச்சியாவி பாலுள்வாங்கினாய் — மண்ணளந்துகொண்டகாலனே" என்றந்வயம். குவலயாபீடத்தைப்போலேயும் கம்ஸனைப்போலேயும் எதிரியாய்த் தோன்றுகையன்றிக்கே, தாய்வடிவுகொண்டு * வஞ்சனையால்வந்த பூதனையினுடைய ப்ராணனைப்பாலோடேகூட வாங்கினாய். அவளும் தாயாய் முலைகொடுக்கவந்தாள்; இவனும் பிள்ளையாய் ஆதரத்தோடே அம்முலைப்பாலை யமுதுசெய்தான். துஷ்ப்ரக்ர்திகளுக்கு நாசகமான தர்மிஸ்வபாவத்தாலே அவள்நினைவு அவள்தன்னோடே போனவித்தனை. முலைவழியாலே ப்ராணனைவாங்கின ஆச்சர்யத்தாலும், ஆர்வர்க்கத்துக்கு ஜ்ஞாததயாவன்றிக்கே ஸத்யா நாசகனாகையாலும், ஸர்வாதிகன் நீயேயென்கை. (ச) "ஸ்தந்யம் தத்விஷஸம்மிஶ்ரம் ரஸ்யமாஸீஜ்ஜகத்குரோ:" என்னக்கடவதிறே. "உருத்து" என்று பாடமானபோது - குவலயாபீடநிரஸநத்தாலும் திருவுள்ளத்திலே சினம் மாறாமையைச்சொல்லிற்றாகக்கடவது. மண்ணளந்துகொண்டகாலனே. பூபாரமானகம்ஸநிரஸநமேயன்றிக்கே, தன்சேஷித்வத்தை ப்ரகா

(க) "காலநேமிர்ஹதோயோஸௌ" (உ) வஜ்ரோத்தர. (ங) "கிமிந்த்ரேணாலப்யவீர்யேண" (ச) "ஸ்தந்யம் தத்விஷஸம்மிஶ்ரம் ரஸ்யமாஸீஜ்ஜகத்குரோ:".

கொள்ளீரென்று பெரியபெருமா ளருளிச்செய்ய; திருநாமஞ் சொல்லும்போதை ரஸமொழிய அவ்வருகுபோ யநுபவிக்கும் ரஸமெனக்கு வேண்டா வென்கிறார்.

மூ.—பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச்செங்கண்
அச்சுதா வமரரேறே யாயர்தங் கொழுந்தேயென்னும்
இச்சுவைதவிர யான்போ யிந்திரலோக மாளும்
அச்சுவை பெறினும் வேண்டே னரங்கமா நகருளானே. உ.

ப-ரை.— அரங்கம் மாநகர் உளானே—ஆச்ரிதார்த்தமாகக் கோயிலிலேவந்து நித்ய வாஸம் பண்ணுமவனே, மா—ச்லாக்யமான, பச்சை மலைபோல்—மரதககிரியையொத்த, மேனி—திருமேனியையும், பவளம்-பவளத்தையொத்த, வாய்-திருவதரத்தையும், கமலம்—தாமரைமலரையொத்த, செம் கண்—சிவந்த திருக்கண்ணையு முடையனாய், அச்சுதா—ஆச்ரிதரையொருக்காலும் நழுவவிடாதவனே, அமரர் ஏறே—* அயர்வறுமமரர்க ளதிபதியானவனே, ஆயர் தம் கொழுந்தே—இடையருக்கும் பசுக்களுக்கும் நியாமகனானவனே, என்னும்—என்கிற, இ சுவை தவிர—இப்படியநுபவிக்கும் ரஸத்தைவிட்டு, யான்—திருநாமம் சொல்லுகைக்குப் பாங்கானநாவையுடையனானநான், போய்—நெடுந்தூரம்போய், இந்திர லோகம் ஆளும்—பரமபதத்தை ஆளுகிற, அ சுவை பெறினும்—அந்தபோகத்தைக் கிட்டப் பெற்றாலும், வேண்டேன்—விரும்பேனென்கிறார்.

வ்யா. பச்சைமாமலைபோல் மேனிபவளவாய்க் கமலச்செங்கண் அச்சுதாவமரரேறே ஆயர்தங் கொழுந்தே யென்னுமிச்சுவை. இந்தரஸமிருந்தபடி கண்டீர், உமக்குத் தான் புறம்பே போவென்ன வேண்டியிருந்ததோ வென்கிறார். பச்சைமாமலைபோல்மேனி. பச்சை நிறத்தை யுடைத்தாய் ச்லாக்யமா யிருப்பதொரு மலைபோலே யாய்த்துத் திருமேனியிருப்பது. காணப் புக்கால் கண்ணுங் குளிர்ந்து நெஞ்சுங்குளிரும்படி ச்லாக்யமா யாய்த்திருப்பது. தாபத்ரயாதுரருடைய ஸகலதாபங்களும் கண்டபோதே ஆறும்படியாய்த்துத் திருமேனி யிருப்பது. நெய்திலுங்கிளைப்போலே அகவாயில் தண்ணளியினுடைய செறிவெல்லாம் வடிவிலே காணலாம்படி யிருக்கை.

"மாமலை" என்றது - பூஜ்யமான மலையென்றபடி. ப்ரதமத்தில் சுபாச்ரயமாய் பின்பு நித்யா நுபாவ்யமா யிருக்கும் ச்லாக்யதையைச் சொல்லுகிறது. மலையானது ஸ்தைர்யத்துக்குக் கொப்பாய், வளர்த்திக்கு மொப்பா மித்தனை யொழியத் திருமேனியி லுண்டான போக்யதாதிசயமெல்லா மில்லையே அதுக்கு.

மேனி. (க) "ஆநந்தமயஃ" என்கிற ஸ்வரூபமும் ஆநந்தாதி குணங்களுமல்ல இவரையுகப்பிப்பது, இவையிரண்டும் அகவாயிலே யாம்படியான இவ்வடிவாய்த் திவரையுகப்பிப்பது. (உ) "ஐக்ஷ்வாகரூபஸௌந்தர்யஸுபூஷ:," "குன்றுடகொழுமுகில் போல் குவளைகள்போல் குரைகடல்போல் நின்றுடகொண மயில்போல் நிறமுடைய நெடுமால்" என்னக்கடவதிறே. கழுத்தேகட்டளையாக நீரைமுகந்து போக மாட்டாதே மலையினுச்சியிலே சாய்ந்தமேகம்போலவும், கண்ணாலேமுகந்து அநுபவிக்கக் குவளைகள் போலவும், அநுபவித்து முடிக்கவொண்ணாமைக்குக் கடல்போலவும், வைத்த கண்வாங்க

(க) "ஆநந்தமயஃ" (உ) "இச்வாக்ரூபஸௌந்தர்யஸுபூஷ:"

வொண்ணுமைக்கு மயில்திரள் போலவுமாய்த்து இத்திருமேனி யிருப்பது. (க) "விஷ்ணு ஜநமிந்த்ரியா தழிதாநு ஸஹஸ்ரமணிசக்ர திவிந்து நாராயண: । ஸ்ரீரங்கசாயி த்யாநஸந்நிதா ஷஷ்டைஸவைத் ரூபாணீவ ஸ்ரீதமகாளமேக:."

பவளவாய் கமலச்செங்கண். திருமேனி ஒருபெருங்கடல் போலேயாய், அதிலே கொண்டுமுழுகுஞ் சுழிகள்போலேயாய்த்து இவ்வாவயவங்களிருப்பது. திருமேனிக்கு பரபாகமான பவளம் படர்ந்தாப்போலே யாய்த்துத் திருவதரத்திலழகிருப்பது. மலையிலே பவளம் படர்ந்தாப்போலேயிருக்கை. சந்த்ரோதயத்தில் கடல் கொந்தளித்தாப்போலே ஆச்ரிதமுக சந்த்ரதர்சநத்தாலே வந்தவழகு ஒதமேறினபடி. (உ) "சுவஸாவஸாதுயித்வா" என்கிறபடியே ஆச்ரிதரை வினவுகிற திருவதரமிருக்கிறபடி.

கமலச்செங்கண். ஜீவநாதர்ஷ்டத்தாலே இத்திருப்பவளத்துக்குத் தப்பினாரையு மகப்படுத்திக் கொள்ளும் கண்கள். வாயால்சொல்லமாட்டாத குறைபுங்கண்ணாலேயிறே தலைக்கட்டுவது. (ங) "ஜௌவநாஸ்யாஷிவபுஷ்ச" என்கிறபடியே அகவாயில் வாத்ஸல்யாதி குணங்களுக்கு ப்ரகாசமா யிருக்கிறபடி. மென்மை குளிர்த்தி நாற்றம் தொடக்கமானவற்றுக்கொரு போலியாமத்தனையல்லது அகவாயில் தன்னளவிப்பெல்லாமில்லையே யதுக்கு. ' "விக்ரஹமில்லை, குணமில்லை, விபூதியில்லை' என்கிற குத்ருஷ்டிகள் ஸஞ்சரிக்கிற ஸம்ஸாரத்திலே இப்படி விக்ரஹத்தை ஆதரித்த விவர்கள் உத்தேச்யராகப் பெற்றோமே" என்று ஜீயரருளிச் செய்வர்.

அச்சுதா. த்ர்ஷ்டாந்தமாகச்சொன்ன மலை பவளம் தாமரைபோலே நாள்செல்லாநாள் செல்லச் செவ்விமாறுதல், தானழிதல் செய்யாதே ஏகரூபமாயிருக்கை. (ச) "ஸமேதரூபவாய" என்னக்கடவதிறே. அதவா, இச்செவ்வி மாறாதே செல்லவேணுமென்று மங்களாசாஸநம் பண்ணுகிறாரென்றுமாம். "சேவடிசெவ்வி திருக்காப்பு" என்னக்கடவதிறே. இவ்வழகிலே அகப்பட்டாரை ஒருநாளும் நழுவவிடானென்றுமாம். அமரரேறே. இவ்வழகை ஸதாதர்சநம் பண்ணும் போக்தாக்களைச் சொல்லுகிறது. காலமெல்லாமிடைவிடாதே அநுபவியாநின்றாலும் எல்லைகாணவொண்ணாதபடி அவ்வருநாயிருக்கை. "அயர்வறுமமரர்களதிபதி" என்னக்கடவதிறே. அவ்வநுபவம் மாறினால் முடியுமவர்களென்று தோற்றுகைக்காக, அநுபவத்தினுடைய அவிச்சேதத்தாலே "அமரர்" என்கிறது. (ரு) "ஸதாபச்யந்தி ஸூரய:" என்னக்கடவதிறே. ஆனால் பிராட்டி திருவடி திருவநந்தாழ்வான் போல்வார்கள் அநுபவிக்குமதாய் அதிக்ர்தாதிகாரமா யிருக்கிறதோ வென்னில்; ஆயர்தங்கோழுந்தே. மேன்மைக்கெல்லையானவர்களுக்கு நியாமகனுமிருக்குமாப்போலே தாழ்வுக்கு எல்லையான இடையர்க்கும் பசுக்களுக்கும் ஸுலபனானபடி. வடிவழகும் மேன்மையும் நீர்மையு மொருபசுங்கூட்டாயிறே பரத்வ மிருப்பது.

என்னும். இஸ்வபாவங்களை அநுபவித்தோ உமக்கு இவ்வினிமை பிறந்ததென்னில்; அங்ஙனன்று, திருநாமத்தினுடைய உக்திமாத்ரத்தாலே வந்தவினிமை. இச்சுவைதவிர-

(க) "விஞ்சேதிமஞ்சஜந மிந்த்ரியாதடித்வாந் பூஷாமணித்யுதிபி ரிந்த்ரதநுர்த்விதாந: । ஸ்ரீரங்கதாமநி தயாரஸ நிர்ப்புரத்வாதத் சௌசயாளுரிவ சீதள காளமேக:"
(உ) "வசஸாஸாந்த்வயித்வா" (ங) "லோசநாப்யாம் பிபந்நிவ" (ச) "ஸதைகரூபரூபாய" (ரு) "ஸதாபச்யந்தி ஸூரய:"

இந்தரஸத்தைவிட்டு. சுவை-ரஸம். கைப்பட்டத்தை விட்டு இவ்வறுசுவைக்கு வேறேயொரு சுவை யிருந்தவிடந்தேடிப் போகச்சொல்லுகிறீரோ. இவருடைய அறுசுவை யிருக்கிறபடி. திருநாமத்தை உம்முடைய நாக்கிலேயிட்டுப் பாராமையிறே நான் உபதேசிக்க வேண்டுகிறது. யான். திருநாமம் சொல்லுகைக்குப் பாங்கானநாவையுடையநான். யான், ஒருதேசவிசேஷத்தே போயநுபவிக்குமளவும் விளம்பத்தை ஸஹியாதத்வரையையுடைய நான். போய். கோயிலுக்கணித்தா யிருக்கையுமன்றியே நெடுங்கை நீட்டான அத்தூரமெல்லாம் போய். இந்திரலோகம். நிரவதிகைச்வர்ய யுக்தனுடைய லோகம். "ப்ரஹ்மேந்த்ராதி சப்தங்கள் பரமாத்மவாசகம்" என்கிற வேதாந்த வாஸனை தோற்றவருளிச்செய்கிறார். ஆளும். "ஆள்மின்கள் வானகம்" என்னும்படியே இஷ்டவிநியோகார்ஹ மாம்படியிருக்கை. அச்சுவை-இச்சுவை. அதுச்ருதிஸித்தம், இது ப்ரத்யக்ஷஸித்தம்; அதுகேட்டார்வாய் கேட்டுப்போமது; இது கைப்பட்டது. பெறினும் வேண்டேன். கிட்டுமளவும் வேண்டாவென்கிறீர், கிட்டினவாறே நீரே அதிலே தோள்மாறுகிறீரென்ன; பெற்றாலு மெனக்குவேண்டா. அத்தைத்தந்து பார்க்கலாகாதோ நான் ஆதரிக்கும்படிகாணவென்கிறார். "உறாது" என்றொழிந்தது தம்மிலு மளவுடையார் நித்யாநுபவம் பண்ணுகிற விஷயத்துக்குக் குற்றஞ்சொன்னோமாகவொண்ணாதென்று; இன்ன மூமதுக்கு உத்கர்ஷம் சொல்லுகிற ப்ரமாணங்களையும் அநாதரித்தாராவர். பால் கைக்கும் புளிக்குமென்னிலன்றோ பிணங்கவேண்டுவது, அதுதான் வேண்டேனென்பாரைச் செய்யலாவதில்லையே. (க) "ஹாவொ நா ஹ்)ஆ ஹவூதி" என்றவனைச்செய்யலாவ துண்டோ.

பரமபதம் வேண்டாவென்ன இங்குத்தை நன்மையேதென்ன; அரங்கமாநகருளானே. பரமபதத்திலநுபவத்தைவிட்டு, இவ்வழகையும் சீலத்தையு மிங்குள்ளாரை அநுபவிப்பிக்கைக்கு வந்து கிடக்கிறது போராதோ. தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கிற நீர்மையை அநுபவிக்கைக்கு அங்குள்ளாரு மிங்கேவாராநிற்க என்னை அங்கே போகவிடத் தேடுகிறதென். இத்தால் சொல்லிற்றாய்த்து - இங்கேயிருந்து திருநாமத்தை அநுபவிக்கு மினிமைக்கு பரமபதாநுபவமும் ஸத்ர்சமன்றென்னும்படி தமக்குத் திருநாமம் ரஸித்தபடியைச் சொல்லிற்றாய்த்து. ... ... ... ... ... ... ... உ.

அ. மூன்றாம்பாட்டு. வேதநூல். உமக்குப் பரமபதம் வேண்டாவாகில் கோயிலோடே தோள்தீண்டியான ஸம்ஸாரத்திலேயிருந்து திருநாமத்தை அநுபவியுமென்றுபெரியபெருமாளருளிச்செய்ய; அத்தையும் நிரூபித்தவாறே திருநாமம் சொல்லுகைக்கு அவகாசமில்லாதபடி துரிதபரம்பரையே யாயிருந்தது, ஆகையாலே எனக்கு அதுவேண்டாவென்ன; திருநாமம் சொல்லுகைக்கவகாச மில்லாதபடி ஸம்ஸாரத்துக்கு நீர்சொல்லுகிற குறையென்னென்று கேட்டருள; ஸம்ஸாரத்தினுடைய தோஷங்களை உபபாதித்துக் காட்டுகிறார். இத்தால் பழகிப் போருகிற ஸம்ஸார யாத்ரையிலும் ஜுகுப்ஸை பிறக்கும்படி திருநாம மினிதென்றும் அம்முகத்தாலே திருநாமத்தினுடைய போக்யதா ப்ரகர்ஷத்தைச் சொல்லுகிறது.

மூ.—வேதநூற் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவரேலும்
பாதியு முறங்கிப்போகும் § நின்ற விப்பதினையாண்டு
பேதைபாலகனதாகும் பிணிபசி மூப்புத்துன்பம்
ஆதலாற் பிறவிவேண்டே னரங்கமா நகருளானே. ௩.

(க) "பாவோநாந்யத்ரகச்சதி", § "நின்றதிற்பதினையாண்டு" என்றும் பாடம்.

ப-ரை.— அரங்கமாநகருளானே-, மனிசர்தாம்-மநுஷ்யர்கள், வேதம் நூல்-வேத சாஸ்த்ரத்தின்படி, நூறு பிராயம்— நூறுஸம்வத்ஸரம், புகுவரேலும்-ஜீவித்திருப்பார்களே யாகிலும், பாதியும்—அதில்பாதியான ஐம்பதுஸம்வத்ஸரமும், உறங்கி போகும்—நித்ரையாலே கழியும்; நின்ற-மிகுந்திருக்கிற, இ பதினை ஆண்டு-இந்த ஐம்பது ஸம்வத்ஸரங்களோவென்றால்; பேதை—தாயின் அறிவின்படி நடக்கும் குழவிப்பருவமும், பாலகன்—செய்யும் தீம்பைக்கண்டார் கடியவொண்ணாத பால்யப்பருவமும், அது ஆகும்—விஷயப்ரவணனாய்த் திரியும் யௌவநப் பருவமும், பிணி—முலையடியே திரிவதாலுண்டான வ்யாதியும், பசி-பஞ்சேந்த்ரியங்களுக்கும் ஐம்புலனிலுண்டான ஆசையும், மூப்பு-கிழத்தனமும், துன்பம்—துன்பமுமாய்த் தலைக்கட்டும்; ஆதலால்—இப்படியிருக்கையாலே, பிறவி—ஹேயமாயிருக்குமுள்ள ஜந்மத்தை, வேண்டேன்—நான் ஒருக்காலும் விரும்பேன் என்கிறார்.

வ்யா. வேதநூல்பிராயம்நூறு. (க) "வேதசாஸ்த்ராவிரோதிநா" என்கிறபடியே வேதமாகிற நூல்-வேதாக்யசாஸ்த்ரமென்னக்கடவதிறே. நூல்-சாஸ்த்ரம். அதவா, வேதங்களும் நூல்களுமென்னவுமாம். வேதங்களும், வேதார்த்தஜ்ஞாநமுடைய புருஷர்களுடைய வசநங்களும். பிராயம் நூறு. (உ) "சதாயுர்வை புருஷ:" என்றிறே சொல்லுவது; இதிறே பரமாவதி. இதுதான் ஓலைப்புறத்திலே கேட்டுப்போமித்தனை, புகுகைக்கு ஸம்பாவனையில்லை. அந்த நூல்தான் அளவுகோல் வாசியால்வந்த ஏற்றத்தாலே இலர்பக்கலிலே செடிவாசிபட்டிருக்கும், அத்தை வ்யாவர்த்திக்கிறது மனிசர் என்று. (ங) "நஜாயதே ம்ரியதே வா கதாசிந்நாயம் பூத்வாபவிதாவாநபூய:" என்கிறபடியே-கல்பாதியிலே தோற்றி, கல்பாந்தத்திலே முடிவாயிருக்குமிறே; இலர்க்கு அங்ஙனன்றியேயிருக்கை. தாம். கர்ப்பந்தொடங்கி மரணத்துக்கு யோக்யமாயிருக்க, தமக்கொரு ஜீவநமும் பரிக்ரஹமுங்காணென்று க்ஷேபிக்கிறார். புகுவரேலும். முதலிலே புகுவாரில்லை, கர்ப்பத்திலே முடிதல், ஜநியாநிற்கமுடிதல், பிறந்துமுடிதல், நாலுநாளிருந்து முடிதல், பால்யத்திலே முடிதல், செருக்கித்திரியும் யௌவநத்திலே முடிதல், ஜரையிலே முடிதலாய், மரணத்தை நிர்ணயிக்க அரிதாம்படியிறேயிருப்பது. (ச) "கர்ப்பே விலீயதே பூயோ ஜாயமாநோஸ்தமேதிச। ஜாதமாத்ரேச ம்ரியதே பாலபாவேதயௌவநே॥ மத்யமம்வாவய: ப்ராப்ய வார்த்தகேவா த்ருவாம்ருதி:" என்னக்கடவதிறே. ப்ராணிகள் தங்களாயுஸ்ஸுபோகிறபடி ஒன்றையுமறியாதே உதயாஸ்தமயங்களைக்குறித்து உகவாநிற்பர்கள். (ரு) "நந்தந்த்யுதித ஆதித்யே நந்தந்த்யஸ்தமிதேரவௌ। ஆத்மநோநாவபுத்யந்தே மநுஷ்யாஜீவிதக்ஷயம்." (சு) "ஜாயஸ்வ; ம்ரியஸ்வ", "மின்னின்னிலையில" "வாள்களாகி நாள்கள்செல்ல." புகுவரேலும். வருந்தி நூறுவயஸ்ஸுப்புக்காராகில்.

---

(க) "வேதசாஸ்த்ராவிரோதிநா" (உ) "சதாயுர்வை புருஷ:" (ங) "நஜாயதே ம்ரியதே வா கதாசிந்நாயம் பூத்வாபவிதாவாநபூய:" (ச) "கர்ப்பேவிலீயதே பூயோ ஜாயமாநோஸ்தமேதிச। ஜாதமாத்ரேச ம்ரியதே பாலபாவேதயௌவநே। மத்யமம்வாவய: ப்ராப்ய வார்த்தகேவா த்ருவாம்ருதி:" (ரு) "நந்தந்த்யுதித ஆதித்யே நந்தந்த்யஸ்தமிதேரவௌ। ஆத்மநோநாவபுத்யந்தே மநுஷ்யாஜீவிதக்ஷயம்." (சு) "ஜாயஸ்வ, ம்ரியஸ்வ."

பாதியுமுறங்கிப்போகும். அதிலே செம்பாதி § கடிக்கூறுகப் பாழாய் நித்ரையாலே கழியும். பாதியுமுறங்கிப்போகிற கணக்கிலே, திருநாமஞ்சொல்லக்கடவ காலம் வ்யர்த்தமேபோகிறதே! என்று வெறுக்கிறுராய்த்து. (க) "ஜந்மஹளமிஜாஹுதந்ருஹு" என்று—இளைய பருமாளைப்போலே யிருக்கவிறேயடுப்பது. (உ) "ஸததங்கீர்த்தயந்த:" என்று ஸர்வகாலமும் திருநாமஞ்சொல்லவிறே கண்டது. நின்றதில் பதினையாண்டு. சேஷித்ததிலே இனைந்து ஸம்வத்ஸரம் பாலனாயும் யுவாவாயும் விஷயப்ரவணனாயும் இங்ஙனேகழியும். நின்ற இப்பதினையாண்டு" என்றபோது – சேஷித்தநாள், பஞ்சதஞ்ச - ஐம்பது ஸம்வத்ஸரமென்றுகிறது. இவன் போசப்பொலியப் பாரிக்கிறகாலமெல்லாம் தமக்கொன்றுயிராமையாலே, "இது" என்று - கூத்ஸித்ரமாகப்பேசுகிறுர். பேதை. திருநாமஞ்சொல்லுகைக்கும் யாக்யதை யின்றிக்கே, தன்னுடைய ஹிதாஹிதங்கள் ஜநநியினுடைய புத்த்யதீநமாயிருக்கும் அத்யந்த சைசவம். பாலகன் அதாகும். பாலனுகிற அந்தவவஸ்தையாமென்றபடி. நிம்கள் செய்தாலும் பொடியவொண்ணுதபருவம். இவனே "திருநாமம் சொல்லிற்றிலன்" என்று வெறுக்கவொண்ணுதே. அதாகும். தருநந்தரமான அந்த அவஸ்தையா மென்றபடி. தநந்தரம் யௌவநம்வந்து ப்ரவேசித்து விஷயப்ரவணனுய்த் திரியும். ஜநநியுடைய புத்த்யதீநமான பேதைத்தனமே நன்றெனும் படியாய்த்து இதின் அறிவுகேடிருப்பது. உள்ளவிவு அக்ர்த்யகரணத்துக்கு உடலாகையாலே அந்தயௌவநம் கழிவதற்குமுன்னே வ்யாதிவந்து கைக்கொள்ளும். அத்தை வேரும் விறகுந்தேடி யொருபடி பரிஹரித்துக் கொள்ளக்கண்டு பசிதலைபெடுக்கும். பசிபாவது - ஸர்வேந்த்ரியங்களும் ஸ்வஸ்வ விஷயங்களிலே ப்ரவணமாகை. ஆரோக்யம் பிறந்தவாறே இந்த்ரியங்கள் தலையெடுத்து, "விஷயங்களைக் காட்டுக்காட்டு" என்று நலியத்தொடங்கும். "ஐவர் திசை திசைவலித் தெற்றுகின்றனர்" என்றும், "ஐவருத்துத் தின்னிடவஞ்சி நின்னடைந்தேன்" என்றும் சொல்லக்கடவதிறே.

காலன்கொண்டு பாஹிப்பை பண்ணி த்ரவ்யார்ஜநம் பண்ணுகிறது இந்த்ரியங்களால்வரும் நலிவு தீர்க்கைக்கிறே. இங்ஙனே செல்லாநிற்க ஜரைவந்து கைக்கொள்ளும். ஜரையாகிறது — சாலப்பொல்லாததொன்றிறே. போகயோக்யதை யன்றிக்கே யிருக்கச்செய்தே சாபலமநுவர்த்திக்குமிறே. "பண்டு காமரானவாறும்" என்று வ்ருத்தகீர்த்தநம் பண்ணியாகிலும் தரிப்போமென்று பார்க்குமிவ்வளவிலே இடிவிழுந்தாற்போலே மரணம் வந்து உபஸ்திதமாம். துன்பம். இதுவே து:கமாய் நிரவயவிநாசத்தோடே தலைக்கட்டும். (ங) "வாரெஹு க்ரீடநகாஸக்தா:யௌவநே விஷயோந்முகா: | † அஜ்ஞாநயந்த்யசக்தாஸ் ஸமுபஸ்திதம்." ஆதலால்பிறவிவேண்டேன். காடுபிடித்தார்க்கு ஒருகைக்காட்டிக் காட்டமும் திடரும்மணலும் மடையுமாக வெற்றி வெறும்பாழாக்கிக் காட்டுவாரைப்போலே, திருநாமஞ் சொல்லுகைக்கு அவகாசமில்லாதபடி உள்ளவாயுஸ்ஸைப் புறம்பே செல்லுகிற படியைப் பேசி, பெரியபெருமாளுக்கு விண்ணப்பம் செய்கிறுர். நீர், "அச்சுவைபெறினும் வேண்டேன்" "ஆதலால் பிறவிவேண்டேன்" என்று விபூதித்வயத்துக்கும் கண்ணழிவு

§ "கடிக்கூறுகப்பாழாய்" என்றது - ஒருசெய்யிலே செம்பாதி உழுமாய்ப்பாழாய்ப்போலே யென்றபடி. (க) "ஜந்மஹளநித்ராஞ்சதந்த்ரீஞ்ச" (உ) "ஸததங்கீர்த்தயந்தோ" (ங) "பால்யேக்ரீடநகாஸக்தா யௌவநேவிஷயோந்முகா:| அஜ்ஞாநயந்த்யசக்தாஸ்ச்சவார்த்தகம் ஸமுபஸ்திதம்" †! இது அநந்விதம்போல் தோற்றுகிறது.

சொல்லாநின்றீர், “ நிற்பாயாகில் திருவாணை, கிடப்பாயாகில் திருவாணை ” என்பாரைப் போலே நீர்படுத்துகிறதென்? நமக்கு விபூதித்வய மேயன்றோ வுள்ளதென்ன; அரங்கமாநகருளானே. விபூதித்வயத்துக்கும்புறம்பாய் த்ர்(ரு)தீயாவிபூதியான கோயிலிலே எனக்குஒரிருப்பரிதோ வென்கிறார். கோயிலில்வந்தால் அதிபால்யத்திலே அங்கப்ராசநத்துக்கு என்றுகிஆம் திருவடிகளிலே கொண்டு புகுருவர்கள், க்ரீடாவஸ்தையிலும் (க) “ பாலா அபிக்ரீடமாநா: ” என்கிறபடியே செல்வரெழுந்தருளும்படியை அநுகரியா நிற்பர்கள். பக்வனானால் தான்விரும்பின விஷயங்களைப்பற்ற உள்ளே புகக்கடவனா யிருக்கும். பெருமாளுடைய வடிவழகும் அங்குத்தைபாவநத்வமும் விஷயாந்தரங்களில் ருசியைமறுக்கும். வ்ர்த்தனாய் உள்ளுப்புகமாட்டாதவற்றைக்கு இவன்வாசலிலே வந்து நிற்பர். ஆக இப்படி வாஸிதமாகையாலே ஸ்வப்நத்திலுங்காண்பது இவர்வடிவேயாயிருக்கும். இனி (உ) “ தேசோயம்ஸர்வகாமதுக் ” என்கிறபடியே தேசந்தானே யெல்லா நன்மையும் பண்ணிக் கொடுக்கவற்று; ஆகையாலே கோயில்வாஸம் அடிக்கழஞ்சு பெற்றுச் செல்லா நிற்குமிறே. ௩.

அ. நான்காம்பாட்டு. மொய்த்த. கீழ் மூன்றுபாட்டாலும் - ஸ்வலாபத்தைப் பேசினாராய், மேல் பதினொருபாட்டாலே — பரோபதேசம் பண்ணுகிறார். ஸ்வாநுபவத்தை விட்டு இவர் பரோபதேசம் பண்ணுகைக்கு ஹேதுவென்னென்னில்; ப்ராப்தமுமாய் ஸுலபமுமான இவ்விஷயத்தை ஸம்ஸாரிகளிழக்கிற இழவு பொறுக்கமாட்டாமையாலும், இவ்விஷயந்தான் ஸம்ஸாரிகளைப் பெற்றல்லது தனியநுபவிக்க அரிதாகையாலும், (௩) “ ஏகஸ்ஸ்வாது நபுஞ்ஜீத ” என்கிறபடியே அநுபூதாம்சம் பிறரை அநுபவிப்பித்தல்லது நிற்கமாட்டாத ப்ரக்ருதியாகையாலும், பரோபதேசத்திலே ப்ரவர்த்தராகிறார். இதில் முதல்பாட்டு, ஸம்ஸாரிகள், பாபிகளான எங்களுக்குத் திருநாமஞ்சொல்லுகைக்கு யோக்யதையுண்டோ வென்ன; ப்ராயச்சித்த ஸாத்யமல்லாதபடி பாபப்ரசுரனான க்ஷத்ரபந்துவும் திருநாமப்ரபாவத்தாலே பரமபதப்ராப்தியைப் பண்ணினபடியைக் கேட்டார்க்கு ‘ அயோக்யன் ’ என்று அகல விரகுண்டோ வென்ற விடத்திலும் விமுகராகக்கண்டவாறே அத்தைக்கேட்டுவைத்து பாபபலமான ஜந்மாதிக்லேசத்தை அநுபவிப்பதே! என்று விஸ்மிதராகிறார்.

மூ.—மொய்த்தவல் வினையுள்நின்று மூன்றெழுத்துடைய பேரால்
கத்திரபந்துமன்றே பராங்கதி கண்டுகொண்டான்
இத்தனை யடியரானார்க் கிரங்குநம் மரங்கனாய
பித்தனைப் பெற்றுமந்தோ பிறவியுள் பிணங்குமாறே. ௪.

ப-ரை.—மொய்த்த—மொய்த்துக்கொண்டு கிடப்பதாய், வல்—காலதத்வமுள்ளதனையும் அநுபவித்தாலும் நசியாததான, வினையுள் நின்று—பாபமாகிற ஸமுத்ரத்தின் உள்ளே நின்று, மூன்று எழுத்து உடைய பேரால்—மூன்றெழுத்தையுடைய கோவிந்தாவென்னும் திருநாமத்தாலே, கத்திரபந்தும் அன்றே—க்ஷத்ரபந்துவுமன்றோ, பராங்கதி—உத்க்ர்ஷ்டகதியான பரமபதத்தை, கண்டுகொண்டான்—கண்டநுபவிக்கப்பெற்றான்; இத்தனை அடியர்

(க) “ பாலா அபிக்ரீடமாநா: ” (உ) “ தேசோயம்ஸர்வகாமதுக் ” (௩) “ ஏகஸ்ஸ்வாது நபுஞ்ஜீத ”

ஆனர்க்கு—மகஸ்ஸஹகாரமின்றிக்கே "கோவிந்தா" என்னும்திருநாமத்தை வாயால் உச்சரிக்கும் தாஸபூதருக்கு, இரங்கும்—இரங்கி க்ருபைசெய்தருளுமவராய், நம் அரங்கனாய—நமக்கு ஸ்வாமியான அழகியமணவாளனாகிற, பித்தனை—ஸௌசீல்யகுண யுக்தனானவனை, பெற்றும்—கிட்டி அநுபவிக்கப் பெற்றிருந்தும், பிறவியுள்—ஐந்மங்களிலகப்பட்டு, பிணங்கும் ஆறு—வருந்துகிறபடியே!; அந்தோ—ஐயோவென்று வெறுக்கிறார்.

வ்யா. மொய்த்தவல்வினை. பாபங்கள்மிகைத்து அஹமஹமிகயா,"நான் முற்பட நான் முற்பட" என்று மேல்விழுந்து மொய்த்துக்கொண்டு கிடக்கிறபடி.தேன்கூட்டை ஈ மொய்த்துக் கொள்ளுமாப்போலே மொய்க்கை. "நெய்க்குடத்தைப் பற்றியேறு மெறும்புகள்" என்னக்கடவதிறே. முதலிகள் லங்கையை 'எனக்கு' என்னுமாப்போலே. (க)"மேரு மந்தரமாத்ரோபி" (உ) "இஷீகதூலமக்நௌப்ரோதம்." ஜகத்ஸ்ர்ஷ்டியில் ஈச்வரனுக்குண்டான சக்திபோரும் சேதநனுக்கு பாபஸ்ர்ஷ்டியிலுண்டான சக்தியும். வல்வினை. ஒரு பாபந்தானே காலதத்வமுள்ளதனையும் அநுபவிக்கவேண்டும் படியாயிறே அதின்கநமிருப்பது. (ங) ["யத்ப்ரஹ்மகல்பநியுதாநுபவேபி"]ஒருஸர்வசக்தி போக்குதல் தவிருதல் செய்யவேண்டும்படியிறே பாபத்தின் கநமிருப்பது. உள்நின்று. ஸமிதையிடா மாணி போலே தானே சூழ்த்துக்கொண்டு கிடக்கிறபடி. நடுக்கடலிலே ஒரு க்ஷுத்ரஜந்து நின்று அலையுமாப்போலே, அணுபரிமாணவஸ்து, பாபஸமுத்ரத்திலே நின்றலைகிறபடி. "சிறியனேயும் செய்வினையோ பெரிதால்" என்னக்கடவதிறே. நின்று. பாபங்களுக்கு இடையா தொழிகை. (௪) "ஸர்வம்ஸஹே" என்னக்கடவதிறே. நெருப்பிலே கால்பாவினாப்போலே, பாபங்களிலேவேர்விழுவதே!. மூன்றெழுத்துடையபேரால். மூன்றெழுத்தையுடைய திருநாமத்தாலே. "கெடுமிடராயவெல்லாம்" இத்யாதி.

பாபங்களைப்பண்ணின காலப்பரப்பும் பாபத்தின் கநமும் போலேயிருக்கிறதோ பாபவிமோசகமென்னில் ; "மூன்றெழுத்து" என்கிறது - ஓரோ திருவக்ஷரமே போருமென்கைக்காக. ப்ரக்ர்திப்ரத்யய யோகத்தாலே பதமாயிருக்கையன்றியே மூன்றக்ஷரமாயிருக்கை. 'ஓர் அயுதாக்ஷரீ, ஸஹஸ்ராக்ஷரீ' என்னுமவைபோலே முடிந்ததாய்விடவற்றே என்றிருக்குமதன்றே இது. பேரால். மந்த்ரமென்னுதொழிந்தது, 'ரிஷிச்சந்தோதேவதை சக்திபீஜம் வர்ணம் விநியோகத்யாநம்' என்னுமாப்போலே, சிலசடங்குகளுண்டாய் அதிகர்த்தாதிகாரமாயிருக்கையன்றியே ஸர்வாதிகாரமாய், ஸ்த்ரீயால் ஸாத்யமாயிருக்கை. இடறினவன் "அம்மே" என்னுமாப்போலே இடர்வந்தபோது ஸர்வருக்கும் சொல்ல ப்ராப்தியுண்டாயிருக்கை. இன்ன திருநாமமென்னாதே "மூன்றெழுத்துடையபேரால்" என்றது—குருபிறந்தவன்று உபதேசிக்கைக்காக ஆச்சாதிக்கிறார்; "மூன்றெழுத்ததனை" என்று பெரியாழ்வார் மறைத்தாப்போலே.

கத்திரபந்தும். (ரு) "க்ஷத்ரபாணாமபிஜீ" இதி-க்ஷத்ரபந்தூ. "ப்ரஹ்மபந்தூ" என்னுமாப்போலே. சகாரத்தாலே-தன்மைக்கெல்லை நிலமான இவனும். அன்றே. நம்முதலிகள் கோஷ்டியில் "நாலூரான்" என்றாப்போலே, ரிஷிகள் கோஷ்டியில் "க்ஷத்ரபந்து"

(க) "மேருமந்தரமாத்ரோபி" (உ) "இஷீகதூலமக்நௌப்ரோதம்" (ங) "யத்ப்ரஹ்மகல்பநியுதாநுபவேபி" (௪) "ஸர்வம்ஸஹேஹமே" (ரு) "க்ஷத்ரியாணாமதமபி"

என்றால் செவி புதைக்கும்படியாயாய்த்திருப்பது. (௪) "ஸத்ருஷ்ணுவநு ஜனோ ஜக்ஷ தவிஷுஷு ஸுஷ்ருக்ஷ்வதவி, விஷாஷவகாரவஷ்ணிஃ ஸுதுவதௌளதயாவாஃ ॥" பராங்கதி கண்டுகொண்டான். பாபவிமோசநமே பலம்போந்திருக்க அவ்வளவன்றிக்கே, ஸ்வர்க்காதி பலங்களினளவன்றிக்கே, ஐச்வர்யகைவல்யங்களினளவன்றிக்கே உத்தமபுருஷார்த்தத்தைக்கிடீர்! லபித்தது. ஸம்ஸாரிகளில் கடையானவன் அஸ்ப்ரஷ்டஸம்ஸாரகந்தருடைய அநுபவத்தையிறே பெற்றது. கண்டுகொண்டான். என்றது- இழந்தது பெற்றாப்போலேயிருக்கை. திருநாமஞ்சொன்னதுக்குப் பலம்பெற்றானாயிருக்கையன்றிக்கே தன்னதுதான் பெற்றானாகவாய்த்து இவன் நினைத்திருப்பது. அஜ்ஞாநத்தாலே மறைந்துகிடந்ததாய் பகவத்விஷயீகாரத்தாலே அதில் நிவர்த்திபிறந்தால், ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான வ்ருத்திவிசேஷமும் ப்ரகாசிக்குமித்தனையிறே. (௫) "ப்ரகாசந்தே ந ஜந்யந்தே" என்னக்கடவதிறே.

இத்தனையடியரானார்க்கு. க்ஷத்ரபந்துவினளவு ஆநுகூல்யமுடையார்க்கென்னுதல். ஈச்வரன்சேஷி, நீ சேஷபூதன் என்றால் அதில் அத்வேஷமுடையார்க்கென்னுதல்; (௬) "பதிம்விச்வஸ்ய" (௭) "யஸ்யாஸ்மி" என்று சிலர் சொன்னால் மறுத்திராதிருக்கை. இவ்வளவைக்கொண்டு "அடியரானார்க்கு" என்னலாமோவென்னில்; பகவதபிப்ராயத்தாலே அருளிச்செய்கிறார். (௮) "தாஸாசோபிஸர்வாசி" என்று தொடங்கி, (௯) "கீர்த்தாஷம் வித்திதம் ஜந்தும் ப்ரபாவாத்பரமாத்மந:" என்னக்கடவதிறே. 'இத்தனை' என்கிற விதுதான் மேருமந்தரம்போலே மலபமலே சுமந்தாப்போலேயாய்த்து இருக்கிறது அத்தலைக்கு. (௧௦) "ஸுவிஷ்டாந்தே நம உக்திம் விதேய" என்னக்கடவதிறே. இரங்கும். அத்வேஷயுக்தனுக்கு இது புருஷார்த்தமாம்போது ஸ்வாபாவிக ஸம்பந்தத்தாலே இத்தலையிலாபிமுக்யத்திலே அவஸரப்ரதீக்ஷனாயிருக்கையிறே. பெருகிறதுதன்னை. இத்தலையிலுள்ளது விலக்காமை, பேற்றுக்கிதெங்ஙனேபோரும். அன்றின்றதன்னுக்குத் தாயிரங்குமாப்போலே தானேயெல்லாம் செய்தாலும் "ஒன்றும் செய்திலோம்" என்றுமிரக்கமேயாய்த்து உள்ளதென்றுமாம். "உன்னடியார்க்கென்செய்வனென்றேயிருத்தி" என்னக்கடவதிறே.

நம்மரங்கனாய. அகிஞ்சநரான நமக்காகவிறே கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது. பரமபதம் நித்யர்க்கும் முக்தர்க்கும்; திருப்பாற்கடல் முக்தப்ராயரான ஸநகாதிகளுக்கும் ப்ரஹ்மாதிகளுக்கும்; அவதாரங்கள் தத்காலீநரான பாக்யாதிகர்க்கு; கோயிலில்நிலை தேசகாலங்களுக்குப் பிற்பாடரான நிர்ப்பாக்யர்க்கு முகங்கொடுக்கவிறே. "நம்" என்றது க்ஷத்ரபந்துவோடு ஸ்ரோ(மொ)த்ரிகளான நமக்கும் ஸாலபனை இடமென்கை.

பித்தனே. பித்தராகிறார்- பூர்வாவஸ்தையில் ஜ்ஞாநமின்மையிலே யொழிந்தார். தன்னையுமறியாதே பிறரையுமறியாதே யிருக்குமவனென்றுமாம். அதாகிறது — கொள்ளுமவன் சிறுமை பார்த்தல், கொடுக்கிறவன் பெருமைபார்த்தல், கொடையின் சீர்மைபார்த்தல்

(க) "ஸத்யக்தேபந்துலோகேந தஸ்மிந்நுர்வ்ருத்தசேதஸி ‖ சித்தாஞ்சகாரஸமூஹிஃ க்ஷத்ரபந்தௌதயாபரஃ" (உ) "ப்ரகாசந்தே நஜந்யந்தே" (௩) "பதிம்விச்வஸ்ய" (௪) "யஸ்யாஸ்மி" (௫) "தாஸாசோபிஸர்வாசி" (௬) "கீர்த்தாஷம் வித்திதம் ஜந்தும் ப்ரபாவாத்பரமாத்மந:" (௭) "ஸுவிஷ்டாந்தே நம உக்திம் விதேய"

செய்யவறியா திருக்குமவனென்கை. பெற்றும் தான்குறைவாளனே யாகிலும் குறைநிர்க்கும் ரக்ஷக னிருந்தவிடத்தே செல்லவேணுமிறே. அது வேண்டாதபடி பூர்ணனான தான் "என்னைக்கொள்வாருண்டோ" என்று கிடக்கிறவிடம். அந்தோ! பிறவியுள் பிணங்குமாறே. ஸாலபமான விஷயத்தைவிட்டுப் போனாலுமாமிறே - போய்ப்பெறுகிற விஷயம் இந்தோடு துல்யமாயிருக்குமாகில். ஐக்மாதிகளிலே தானகப்பட்டுக் கிடக்கச்செய்தே அந்யோந்யம் விவாதம்பண்ணி முடிந்துபோவதே! என்று வெறுக்கிறார். ஒரு $விடக்கைப்பற்றி இரண்டு பதார்த்தம் விவாதம் பண்ணுமாப்போலே, அத்யந்தஹீநமாய் இருவர்க்கும் பாத்தம்போராத விஷயங்களைப்பற்றி ஸ்பர்த்தைபண்ணித் திரிவதே!. அந்தோ. ஸர்வேச்வரனுக்கு ஸ்ரீகௌஸ்துபத்தோபாதி ஸ்ப்ருஹாவிஷயமான ஆத்மவஸ்து இப்படிபடுவதே! என்று, தர்மஹாநிகண்டால் "படுகுலைபடுகுலை" என்பாரோபாதி வெறுக்கிறார். ப்ராப்தமுமாய் ஸாலபமுமாய் ஸாசீலமுமான இவ்விஷயத்தை விட்டு, அப்ராப்தமுமாய் தூர்லபமுமாய் துச்சீலமுமான விஷயங்களைப்பற்றி க்லேசிக்கக்கண்டால், தார்மிகரானவிவர்க்குப் பொறுக்கப்போமோ.

அ. ஐந்தாம்பாட்டு. பெண்டிரால். "பிறவியுட்பிணங்குமாறு" என்று - விலக்ஷண விஷயத்தை விட்டு தூர்விஷயங்களைப்பற்றி அநர்த்தப்படுவதே! என்று வெறுத்தார்—இழ்; ஏன்றான், ஷோடசவயஸ்கைகளான ஸ்த்ரீகள் ஸஞ்சரிக்கிற ஸம்ஸாரத்துக்குப் பொல்லாங்கு சொல்லுவா னென்னென்று லோகாயதிகன் ப்ரத்யவஸ்தாநம் பண்ணினான்; அவனாகிறான் - தேஹாதிரிக்தமா யிருப்பானொரு ஆத்மா உண்டென்றும், தர்மாதர்மங்களுண்டென்றும், பரலோகமுண்டென்றும் சொல்லுகிறவை அஸத்யம், ப்ரத்யக்ஷிக்கிற உடம்புகொண்டு அநுபவிக்கிற த்ர்ஷ்டாநுபவமொழிய வேறொன்றில்லை யென்னுமவன். அவர்களைக்குறித்து விஷயங்கள் அல்பாஸ்திரத்வாத்யநேக தோஷதூஷிதங்களென்று இவையெல்லாஞ் சொல்ல வேண்டுவது லபித்தாலிறே, துராராதமாகையாலே லபிக்கையரிதென்கிறார்.

மூ.—பெண்டிராற் சுகங்களுய்ப்பான் பெரியதோ ரிடும்பைபூண்டு
உண்டிராக் †கிடக்கும்போது வுடலுக்கே கரைந்துநைந்து
தண்டுழாய் மாலைமார்பன் றமர்களாய்ப் பாடியாடித்
தொண்டுபூண் டமுதமுண்ணுத் தொழும்பர் சோறுகக்குமாறே. ரு.

ப-ரை.— பெண்டிரால்—மனைவியாலே, சுகங்கள்—ஸகலஸாகங்களையும், உய்ப்பான்—அநுபவிப்பதாகக் கோலி, பெரியது ஓர் இடும்பை—மிகப்பெரிதான துக்கங்களை, பூண்டு—மேற்கொண்டு, இரா—ராத்ரிகாலங்களிலே, உண்டு—புஜித்து, கிடக்கும்போது—அணையிலேசாயும்போது, உடலுக்கே கரைந்து—சரீர தாரணத்துக்கே கரைந்து, நைந்து—மநஸ்ஸா சிதிலமாய், தண்—குளிர்ந்த, துழாய்மாலை—திருத்துழாய்மாலையை, மார்பன்—திருமார்பிலேயுடையனான ஸர்வேச்வரனுடைய, தமர்களாய்—தாஸபூதராய், பாடி—ப்ரீதிக்குப் போக்குவீடாகப்பாடி, ஆடி—அதுதான் இருந்தவிடத்திலிருக்க வொட்டாமையாலே ஆடி, தொண்டுபூண்டு—சேஷவ்ர்த்தியை மேற்கொண்டு, அமுதம் உண்ணு—குணாநுபவமாகிற அம்ர்தத்தைபுஜியாத, தொழும்பர்—நீசர், சோறு உகக்கும் ஆறு—சோற்றை விரும்பும் வகையிருந்தபடியென்!. என்று விஸ்மிதராகிறார்.

$ விடக்கு - சவம். † "கிடக்கும்போது முடலுக்கே" என்றும்பாடம்.

வ்யா. பெண்டிரால்சுகங்களுய்ப்பான். இவனுடைய ஸங்கல்பவாக்யம்- அக்நியை அணைந்து விடாய்தீர நினைப்பாரைப்போலேயும், ஆடுகிறபாம்பின்நிழலிலே ஒதுங்கி க்லேசம் தீர நினைப்பாரைப்போலேயும், விஷபக்ஷணத்தைப்பண்ணி தரிக்கநினைப்பாரைப்போலேயும் து:கஸாதநத்தையிறே ஸுகஸாதநமாக ப்ரமிக்கிறது. "கொண்டபெண்டிர்" என்கிறபடியே தன்னுடைய அநந்யத்வம்தோற்ற அதுவேணும் இதுவேணுமென்று துச்சங்களை அபேக்ஷித்து அலைக்கும் விஷயமிறே. இவனுடைய த்ரவ்யத்தளவும் போகத்தளவுமிறே இவன்பக்கலாதரம். "பெண்டிரால்" என்றது - ஜாத்யபிப்ராயமானபோது, த்ரவ்யத்தளவிலே காலத்தையும் பரிச்சேதித்து பரிக்ரஹிப்பார்கள் த்ரவ்யப்ரதாநைகளாகையாலே. இவன் நினைத்த போகரஸம் அங்கில்லை, பிறர்காணில் எளிவரவு, அத்தைத்தப்பினாலில் மேல் நரகம். இதுவாய்த்து விஷயஸ்வபாவ மிருப்பது. (க) "ஆநந்தமயஃ" என்கிற விஷயத்தை லபித்தாப்போலேயிறே இவனுக்கொரு ஸ்த்ரீபதார்த்தம் லபித்தாலிருப்பது. "சுகங்கள்" என்கிற பஹுவசநத்தாலே-ஸர்வரஸங்களுமிவளாலே என்றிருக்கை. இவள்கால்கலத்தாலே தநமுண்டாம், பக்வையானவளாலே காமரஸம், அநந்தரத்திலே புத்ரஸம்பத்து என்றாப்போலேயிறே இவன் அபிமாநித்திருப்பது.

"உய்ப்பான்" என்றது - இவன் இப்படி பாரித்துப்போமதொழிய அவ்விஷயத்திலநுபாவ்யமாயிருப்பதொரு ரஸமில்லை. நிஹீநவிஷயமாகையாலே நெடுநாள் சென்றாலும் இன்னது அநுபவித்தோமென்று ப்ரத்யபிஜ்ஞைபண்ணலாவதொன்றில்லை. இவனுடைய பாதிஸம் வாதமேயுள்ளது. அவர்கள் த்ரவ்யபரைகளாய் அநாதரித்தாலும் அவ்வநாதரமே ஹேதுவாக ச்ரத்தை பிறக்கும் இவனுக்கு. பெரியதோரிடும்பைபூண்டு. அத்தாலேகாலன்கொண்டுபோய ஹிம்ஸை பண்ணியும் துச்சமான மஹா து:கங்களை ஏறிட்டுக்கொள்ளும். "பூண்டு" என்றது-கழுத்திலே புக்க வாயோடுபோலே தன்னால் கழற்றவொண்ணாதிருக்கை. அளவிறந்த ஸுகத்தை அநுபவிக்கவேணுமென்று கோலி அளவிறந்த து:கத்தையாய்த்து ஏறிட்டுக்கொள்வது. ஓர் அஞ்ஜலியுண்டாக்கமாட்டாத விஷயத்தைபன்றே பற்றிற்று. (உ) "ஸக்ருதேவப்ரபந்நாய" என்கிறபடியே ஸாதநவேளையேதொடங்கி ரக்ஷிக்கும்விஷயமன்றே; "தூயவமுதைப் பருகிப் பருகி பென்மாயப்பிறவி மயர்வறுத்தேன்" என்னக்கடவதிறே. இங்கே ஸாத்யஸாதநங்களிரண்டும் து:கரூபமாயிருக்கும். உண்டிரா. இராவுண்டு. ஜீவிக்கவு மவஸரமில்லாதபடி பகலெல்லாம் கட்டித்திரிந்து அஸ்தமயவேளையிலேயாய்த்து ஜீவிப்பது. முதல் ஸ்வசரீர ரக்ஷணத்தைப் பண்ணிக்கொண்டு நின்று பின்னையிறே விஷயாநுபவம் பண்ணப்பார்ப்பது. கிடக்கும்போது. அநந்தரம் ஓரிடத்திலே விழவிடுகை அபேக்ஷிதமாயிருக்கும், அப்போது சிதிலனாகையாலே விஷயங்களை அநுஸந்தித்தல் அநுபவித்தல்செய்ய க்ஷமனல்லன்.

உடலுக்கே கரைந்துநைந்து. நாளை இவற்றை ரக்ஷித்து நாமும் ஜீவித்தோமாய் விடவல்லோம் என்று சிந்தியாநிற்கும். அவதாரணத்தாலே - தேஹாதிரிக்தமாயிருப்பதொரு ஆத்மவஸ்து உண்டென்றிருக்கிலிறே அதுக்கு பொருக்கால் கரையவேண்டுவது, சரீரஸமநந்தரத்தில் வருந்த புருஷார்த்தத்தை லபிக்கும் விரகேதோ, நரகத்தையும் கர்ப்பவாஸத்தையும் தப்பும் விரகேதோவென்று கரையவிறேயடுப்பது, அதுக்கு யோக்யதையில்லாமையாலே தேஹதாரணத்துக்கே கரையாநிற்கும். "கரைந்துநைந்து" என்றது-பகவத்குணவித்

(க) "ஆநந்தமயஃ" (உ) "ஸக்ருதேவப்ரபந்நாய"

தாராயிருப்பார் "நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்" என்று படுமதடங்க தேஹத்திலே படுமாய்த்து இவன். தண்டுழாய்மாலைமார்பன் தமர்களாய்ப் பாடியாடி. ஸர்வேச்வரனை அநுபவித்து, (க) "அஹமந்நமஹமந்நம்" என்று களித்துச் செருக்குக்குப் போக்குவிட்டுத் திரியக்கடவ சேதநர்படுமார்த்தமே! யென்கிறார். தண்டுழாய்மாலைமார்பன், ஸர்வேச்வரத்வஸூசகமான திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனானவன். இவர்கள் பற்றின துராராதவிஷயங்கள்போலன்றியே தன்வெறுமையை முன்னிட்டு என்னைப்பற்றுமவனை ரக்ஷிக்கக்கடவனென்று தனிமாலையிட்டுக்கொண்டிறே அவனிருப்பது. அவன் ரக்ஷகனாகாவன்றும் கிட்டுவார்க்கு அவ்வடிவும் ஒப்பனையுமே ப்ரயோஜநம் போருங்கிடீர். தமர்களாய். இவ்விஷயத்தில் இவனுக்கு ஸாத்யம் ஒன்றில்லை, ஸ்வாபாவிகஸம்பந்தத்துக்கு அநுமதிபண்ணுமித்தனையே வேண்டுவது. இவ்வாத்மாவுக்கு நிலைநின்ற ஸ்வரூபமிதிறே. அவனை, (உ) "பதிம்விச்வஸ்ய" என்றும், இவனை, (ங) "யஸ்யாஸ்மி" என்றும், (ச) "தாஸோஹம்" என்றுமிறே நிர்த்தோஷப்ரமாணங்கள் சொல்லுகிறது. தமர் - அடியார். கீழ்ச்சொன்னவை யடங்க இவன்றானே யேறிட்டுக்கொண்டவையிறே.

பாடியாடி. பகவதநுபவ ஜநிதப்ரீதிக்குப் போக்குவிடாகப்பாடி, அதுதான் இருந்தவிடத்திலிருக்க வொட்டாமையாலே ஆடி. (ரு) "காயந்திகேசித் ப்ராணமந்திகேசித் ந்ருத்யந்திகேசித்" என்று மதுவநத்திற்புக்க முதலிகள்படியாய்த் திரியக்கடவனிறேஇவன். ஒருதேசவிசேஷத்திலே சென்றாலும், (சு) "ஹாவு ஹாவு ஹாவு" என்று ப்ரீதிப்ரகர்ஷத்தாலேபாடி ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணியிறே திரிந்திருப்பது. தொண்டுபூண்டு. அடிமைபூண்டு. தனக்குவகுத்த சேஷவ்ருத்தியையேறிட்டுக் கொண்டு. "உறும்" என்று ஏறிட்டுக்கொள்ளுகை யன்றிக்கே உகந்து ஏறிட்டுக்கொண்டு.

பூண்டு. இவ்வாத்மாவுக்கு தாஸ்யமேயிறே ஆபரணம். (எ) "த்ருமசீலைரலங்க்ருதௌ" என்றது ஆபரணமானாப்போலே. நம்பெருமாளுக்குச் சேரகுந்தரபாண்டியன் தம்பிரான் பதக்கம்போலே இவனுக்கு தாஸ்யமாகிற ஆபரணம். அவனுக்கும் அது நெஞ்சிலே கிடப்பதொன்று; இவனுக்கும் இது நெஞ்சிலே கிடப்பதொன்றிறே. "தொண்டுபூண்டு" என்கிறதுபோலன்றேயிது. (அ) "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" "வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்" என்கிறதிறே இது. "பூண்டு" என்கிறசப்தம் இரண்டிடத்திலும் ஒத்திருக்க நெடுவாசிபட அர்த்தம் சொல்லுவானென்னென்னில்; அர்த்தபலத்தாலே;- அப்ராப்தவிஷயத்தில் ஸேவையை, (கூ) "ஸேவாச்வவ்ருத்தி:" என்றும், ப்ராப்தவிஷயத்தில் பாரதந்த்ர்யத்தை (கூ0) "பாரதந்த்ர்யம்பரோபுமஸி" என்றும், (கக) "ஸாதிர்த்தம்ஸேவ்யதே" என்றும் விஷயம் பேதித்தாப்போலே இங்கும் அர்த்தபலத்தாலே பேதித்துச் சொல்லுகிறது. அமுதமுண்ணு. ஸ்வரூப ப்ராப்தமாய் நித்யாநு

(க) "அஹமங்கமஹமங்கம்" (உ) "பதிம்விச்வஸ்ய" (ங) "யஸ்யாஸ்மி" (ச) தாஸோஹம்" (ரு) "காயந்திகேசித் ப்ராணமந்திகேசித் ந்ருத்யந்திகேசித்" (சு) "ஹாவு ஹாவு ஹாவு" (எ) "த்ருமசீலைரலங்க்ருதௌ" (அ) "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" (கூ) "ஸேவாச்வவ்ருத்தி:" (கூ0) "பாரதந்த்ர்யம்பரோபுமஸி" (கக) "ஸாதிர்த்தம்ஸேவ்யதே".

பாவ்யமாயிருக்குமமர்தமாய்த்து இது. (க) "தவதாஸ்யஸுகைகஸங்கிநாம்" என்றும்; (உ) "தவதாஸ்யமஹாரஸஜ்ஞ:" என்றும் சொல்லக்கடவதிறே. தொழும்பர். இதினுடைய போக்யதையையறியாதே அபோக்யமாய் அப்ராப்தமாயிருந்துள்ள க்ஷுத்ர விஷயங்களை விரும்பும் நீசர். தொழும்பர் - தண்ணியர். ப்ராப்தியில்லாமே இத்தை யிழக்கிறார்கள் அல்லர்; லபிக்கையில் நேர்த்தியுண்டாயிழக்கிறாரல்லர் ; க்ஷுத்ரவிஷயங்களுக்கும் இதுக்கு முள்ள நெடுவாசியறியும் சேதநருமாயிருக்க, துராராதமாய் அபோக்யமாயிருக்கிற விஷயத்திலே மண்டப்பண்ணிற்றிறே பாபபலம், சோறுகக்குமாறே. மண்ணில்காட்டில் சோற்றுக்கு வாசியறிந்தா ஜீவிக்கிறபடி யெங்ஙனே !; நித்யமான ஆத்மவஸ்துவுக்கு பகவச்சேஷத்வமே தாரகமென்றறியாதவன், அநித்யமான தேஹத்துக்குச் சோறு தாரக மென்றறிந்து ஜீவிக்கிறானே. பித்ராதிகள் ஜீவிக்கக் காண்கிற வாஸநைகொண்டு ஜீவிக்கிறானித்தனையிறே; வாசியறியுமவனாகில் ஆத்மாவுக்கு நன்மையென்னானோ; ஒன்றிலே விசேஷஜ்ஞாக முண்டாகில் மற்றையதிலும் அறிவு உண்டாகாதோ. ... ... ... ரு.

அ. ஆரும்பாட்டு. மறஞ்சுவர். விஷயங்களுக்கு அல்பாஸ்திரத்வாதி தோஷங்கள் அநேகமுண்டானாலும் எங்களுடைய த்யாகத்துக்கு ஹேதுவாகமாட்டாது. ஏகவிஷயத்தில் பூர்ணாநுபவம் பெற்றிலோமேயாகிலும் விஷயங்களநேக முண்டானபின்பு ஒன்றிலில்லாத நன்மை மற்றையதிலே கூட்டிக்கொண்டநுபவிக்கிறோமென்ன; அப்படியேயானாலும் அந்த போக்தாதான் ஸ்திரனாக வேணுமே, அவ்விஷயங்களோபாதி போக்தாவும் அஸ்திரனென்று போக்தாவினுடைய நிலைநில்லாமையைச் சொல்லுகிறார்.

மூ.—மறஞ்சுவர் மதிளெடுத்து மறுமைக்கே வெறுமைபூண்டு
புறஞ்சுவ ரோட்டைமாடம் புரளும்போ தறியமாட்டீர்
அறஞ்சுவ ராகிநின்ற வரங்கனார்க் காட்செய்யாதே
புறஞ்சுவர் கோலஞ்செய்து புட்கவ்வக் கிடக்கின்றீரே. சு.

ப-ரை.— மறம்—க்ரௌர்யமாகிற, சுவர்—சுவரை, மதிள் எடுத்து—மதிளாகவெடுத்தும், மறுமைக்கு—ஆமுஷ்மிகத்துக்கு, வெறுமை பூண்டு—தாரித்ர்யத்தை மேற்கொண்டும், புறம்சுவர்—வெளிச்சுவராயும், ஓட்டை—அஸ்திரமுமான, மாடம்—சரீரமானது, புரளும்போது—தரையில்விழும்காலத்தை, அறியமாட்டீர்—அறியமாட்டீர்களென்ன; (பின்னை செய்கிற தென்னென்னில்;) அறம் சுவர் ஆகி நின்ற—தர்மமேப்ராகாரமாகநின்ற, அரங்கனார்க்கு—கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகிற அழகியமணவாளனுக்கு, ஆள்செய்யாதே—அடிமைசெய்யாதே, புறம்சுவர்—வெளிச்சுவரானவுடம்பை, கோலம்செய்து—அலங்கரித்து, புள்—பக்ஷிகள், கவ்வ—கவ்வும்படி, கிடக்கின்றீரே—அநாதரிக்கப்பட்டுக் கிடக்கிறீர்களே யென்று வெறுக்கிறார்.

வ்யா. மறஞ்சுவர்மதிளெடுத்து. மறமாகிற சுவரை அரணாகவெடுத்து. க்ரௌர்ய ஸமுதாயத்தையாய்த்துத் தனக்கு அரணாக நினைத்திருப்பது. அமாநித்வாத்யாத்ம குணங்களெல்லாவற்றுக்குமாக இவன்பக்கலுள்ளது க்ரௌர்யமேயாய்த்து. மறம் - அருளின்மையும், கோபமும், † தறுகண்மையுமாம். அதாவது-'இவன் அதிக்ருத்தனாய் வர்த்தியாநின்றான்,

(க) "தவதாஸ்யஸுகைகஸங்கிநாம்" (உ) "தவதாஸ்யமஹாரஸஜ்ஞ:" † தறுகண்-வீரம்.

தனக்கு அநர்த்தத்தைத் தானே சூழ்த்துக்கொள்ளா நின்றான்'என்று ஸத்துக்கள் ஐயோ! என்று தனக்கு ஹிதஞ்சொல்ல நினைத்தால் தன்பக்கலனுக வொண்ணுதபடி. கிருத்தனாயிருக்கும். ஒருஸாத்விகன் தன்பக்கல்கிட்டாமைக்கு இடுமான் இதுவிறே. ராவணனுக்கு, மாரீசன் மால்யவான் கும்பகர்ணன் ஸ்ரீவிபீஷணுழ்வான் இவர்களெல்லாரும் ஹிதஞ் சொன்னவிடத்தில் சொன்னஹிதம் கேளாமையாலே தன்னோடுசேர்ந்த கும்பகர்ணனும் மாரீசனும் முடிந்துபோனார்கள்; அல்லாதார் திரஸ்க்ருதரானார்கள். இதுவிறே துஷ்ப்ரக்ருதிக்குஹிதம் சொன்னால் படுமெளிவரவு.

"மதிலெடுத்து" என்றது - இந்தச்சௌர்யம் ஸ்வரூபப்ராப்தமாய் வந்ததொன்றன்று, ஒருநாள்வரையிலே பகவத்விஷயீகாரமடியாக அழியவொன்றென்று தோற்றுகைக்காக. வீரஸுந்தர ப்ரஹ்மராயன் சோழக்குடியிலிட்ட மதில்போலேயிறே இவன்முன்பண்ணிக் கொள்ளுமரண் விநாசபர்யந்தமாய் முடியும்படி. இவன் இத்தால்பெற்ற ப்ரயோஜநம் சொல்லுகிறது-மறுமைக்கே வெறுமைபூண்டு. இவனிருந்தகாலத்தில் செய்தசௌர்யம் அத்ருஷ்டத்துக்கு தாரித்ர்யத்தைக் கூடுபூரித்த வித்தனை. சரீரதாரணைத்தோபாதி ஆத்மதாரணமாயிருப்பதொரு நன்மையும் வேணுமென்று இருந்தானாகில், ஈச்வரன் அத்தையே நினைத்து ரக்ஷிக்குமிறே. (க) "பாதம்ஸாத்ருஸ்யம் தேஹயா" என்கிறபடியே ஆத்மோஜ்ஜீவநார்த்தமாக ஒருக்கால் நினைத்தானாகில், (உ) "ஹநம்ஸ்பாமி" என்று அதுதன்னை பொன்னறையுமேகொண்டு முடிய நடத்துமிறே ஈச்வரன். சரீரவிச்லேஷ ஸமநந்தரத்திலே அவ்வருகேயொரு குளிர்ந்தவிழியில்லாதபடி பண்ணிக்கொண்டானாய்த்து. இம்மையிலே வெறுமையாகில் ஆகமாபாயிகளுமாய் சரீரத்தளவுமாயிறேயிருப்பது. மறுமையிலே வெறுமையாகிறது - நித்யமான ஆத்மாவுக்குப் பிறந்ததாகையாலே வந்ததாரித்ர்யம் நித்யமிறே. இதுக்குமுன்பு ஒன்றின்றிக்கே யொழிந்தாலும் மேலே ஒருநன்மை தேடிக்கொள்ளுகைக்குத் தானில்லையே என்கிறார்.

புறஞ்சுவரோட்டைமாடம் புரளும்போதறியமாட்டீர். புறஞ்சுவரென்கிறது - தேஹத்தை. புருஷார்த்தோபயோகியாக ஈச்வரன் தந்த சரீரத்தைக்கொண்டு விஷயாந்தரப்ரவணமாக்குகையாலே "புறஞ்சுவர்" என்கிறது. இத்தைக்கொண்டு ஆத்மாவுக்கு ஒருநன்மை தேடுமாகில் அதுதானே உத்தேச்யமாமிறே.

ஓட்டைமாடம். "அப்போது விழுந்தது, இப்போது விழுந்தது" என்னும்படி அஸ்திரமாயிருக்கையாலே சொல்லுகிறார். ஓட்டைமாடம். ஓடும் பூட்டுக்கொண்டு ஸமாதாநம்பண்ணி நிற்கவேண்டும்படியிருக்கை. "மாடம்" என்கிறது - ஸம்ஸாரிகளபிப்ராயத்தாலே. நீர்ஹிதம்சொல்லுகிறது இப்போதன்றோ, க்ரமத்திலே செய்கிறோமென்ன; புரளும்போதறியமாட்டீர். ஜீவிக்குங்கால மின்னவளவென்று அறியமாட்டிகோள். கெடுவிகாள்! மரணமன்றோ தோள்தீண்டியாகவந்து நிற்கிறது, க்ரமத்திலே செய்கிறோமென்று ஆறியிருக்கலாமோ?, இருக்குநாள் அங்யபராய்க்கொண்டு உங்களுக்கு நன்மைபார்த்திலிகோள், இனி மரணவேளையில்தானே சக்தரல்லிகோள், நீங்கள் என்ன நன்மைதேடவிருக்கிறிகோள், இனி முடிந்துபோமித்தனையாகாதே! யென்கிறார்.

---

(க) "தாதுஸாம்யேஸ்திதே ஸ்மர்த்தா" (உ) "அஹம்ஸ்மராமி"

அறுஞ்சுவராகின்ற. தர்மமே ப்ரக்ருதியாகவிற்கிறவர். (க) "லோகநாதம் வெரேயம்" (உ) "ஸர்வேஷிம் ஹயாதுபரம்" (ங) "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்" என்கிறபடியே ஸித்தகர்மமாயிருக்கிற இருப்பு ப்ரக்ருதியிறே. (ச) "உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம் ந து குணௌ" என்னக்கடவதிறே. ஆகின்ற. உபாயாந்தரங்கள்போலே ஸாத்யமன்றிக்கே ஸித்தமாய்க்கொண்டு சமைந்து நின்றவர். ஸாத்யதர்மங்களுக்கு பல ஹேது வேண்டியில்வந்தால் அவன்கைபார்த்திருக்கவேணும், அவன் றன்னைப்பற்றினார்க்கு வேறொன்றை அபேக்ஷிக்கவேண்டாவே: இனி இவனுக்குவேண்டுவது இவ்வாணிலொளங்கோமென்னுமையாய்த்து.(ரு)"ப்ராகாரஸ்ஸர்வவ்ருஷ்ணீநாம்" என்று-சாதிலே ஒதுங்குவோமென்னும் குறைவாளர்க்கு அரணாகச்சொல்லக்கடவதிறே. நின்ற. (சு) "ஆஶ்ரயாமி வாஸம்" என்கிறபடியே அவன் அவஸரப்ரதீக்ஷனாய் நிற்கிறபடி. அரங்கனார்க்கு. விஷயம் தூரமென்னுங் குறையுமில்லைகிடீர். "நம்மைக்கொள்ளுவாரார்" என்று கிடக்கிறவராய்த்து. ஆள் செய்யாதே. இவன் தலையிலநுஷ்டாநமில்லாதபின்பு பலத்திலே அந்வயிக்கு மித்தனையிறே. இவனுக்கு ஸ்வரூபப்ராப்தமான பலமாகச்சொல்லுகிறது அடிமையிறே; இத்தையிறே இழந்துபோந்தது.

இவனுக்கு ஓரிடத்திலும் பாரதந்த்ர்யம் தவிராது. கர்மபாரதந்த்ர்யமாதல்; ஈச்வர பாரதந்த்ர்யமாதல். அதில் கர்மபாரதந்த்ர்யத்துக்கு இசைந்தான் - வாஸநையாலே; ஈச்வர பாரதந்த்ர்யத்துக்கிசைந்திலன் - பாபத்தாலே. ஆட்செய்யாதே. "உண்ணாதே" என்னும் போலே யிருக்கிறதாய்த்து இவர்க்கு.

புறஞ்சுவர்கோலஞ்செய்து. (எ) "அஸந்நேவ ஸ பவதி" என்கிறபடியே ஆத்மஸ்வரூபம் அஸத்ஸமமாய்க் கிடக்க வந்தேறியான உடம்பை ஒப்பித்துத் திரிகிறீர்களிறே. ஆத்மாவை அலங்கரிக்கையாவது- அடிமை செய்கையிறே. புத்தகங்களை அகவாய்ப் பெருச்சாளியறுத்துக் கிடக்கத் தெருவுபாட்டை நூலும் அரும்பும்வைத்து அலங்கரிக்குமாப் போலேயாய்த்து உடம்பைப்பேணுகை. புள்கவ்வ. மாம்ஸ பக்ஷணம்பண்ணித் திரியக்கடவ பக்ஷிகளும் முகந்துறக்கவ்வி, பின்னை "க்ருதக்ரமாம்ஸம்" என்று பொகட்டுப்போம். கிடக்கின்றீரே. வகுத்த விஷயம் ஸந்நிஹிதமாயிருக்க இங்ஙனே அந்தரப்படுகிறீர்களே! என்று வெறுக்கிறார். பாரார்த்தம் பொறுக்கமாட்டாமையாலே சொல்லுகிறார். * கோவைவாயாளில்படியே அவன் சாத்தும்படியான உடம்புபடும்பாடே! என்று வெறுக்கிறார். இவர்கள் செத்துக்கிடக்கச் செய்தேயோ இவ்வார்த்தை சொல்லிற்றென்னில்; அங்ஙனன்று, இவர்கள் உண்டு உடுத்துத் திரியாநிற்கச் செய்தே "கிடக்கின்றீரே" என்கிறார். (அ) "நேமம் ஸலிபஶுர்ஹ்ருஷ்ட" என்று திருவடி சொல்லிற்று ராவணன் ஸிம்ஹாஸநஸ்தனா யிருக்கச் செய்தேயிறே. துர்யோதநாதிகள் பூசற்களத்திலே பட்டுக்கிடக்க அவர்களை ஸ்ரீ வேதவ்யாஸ பகவான்கண்டு "நான் சொல்லிற்றுச் செய்யாதே பட்டுக் கிடக்கிறீர்களே"! என்று, வெறுத்தாப்போலே வெறுக்கிறாரென்னுமாம். ... ... ... ... ௬.

---

(க) "லோகநாதம்த்வம்புரா தர்மம்" (உ) "ராமோ விக்ரஹவாந் தர்மம்" (ங) "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்" (ச) "உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம் ந து குணௌ" (ரு) "ப்ராகாரஸ்ஸர்வவ்ருஷ்ணீநாம்" (சு) "ஆஶ்ரயாமி வாஸம்" (எ) "அஸந்நேவ ஸ பவதி" (அ) "நேமம் ஸ்ந்தி புரீலங்கா"

அ. ஏழாம்பாட்டு. புலை. "தொண்டுபூண் டமுதமுண்ணுந் தொழும்பர்" என்றும், "புட்கவ்வக்கிடக்கின்றீர்" என்றும், எங்களை நிந்திக்கிறதென், ஸம்ஸாரஸ்வபாவம் இங்ஙனேயிருந்தது, "தண்டுழாய் மாலைமார்பன்" என்று ஆச்ரயணீயனைச் சொன்னவன் ஸௌலப்யத்தாலுகையாலே எங்களுக்குக் கிட்டவரிது, இன்னமும் ஆச்ரயிப்பார்க்கு விலக்கடிகள் பலவுமுண்டாயிருந்தது, அந்தத்தடையையு மறுத்து ஆச்ரயணீயனையுங் காட்டித் தாருமெ ன்ன; இங்கேவந்தவதரித்து விரோதிநிரஸநசீலனான தசரதாத்மஜனை ஆச்ரயியுங்கோ ளென்கிறார்.

மூ.—புலையற மாகிநின்ற புத்தொடு சமணமெல்லாம்
கலையறக் கற்றமாந்தர் காண்பரோ கேட்பரோதான்
தலையறுப் புண்டுஞ் § சாவேன் சத்தியங் காண்மினையா
சிலையினா லிலங்கைசெற்ற தேவனே தேவனாவான். ௭.

ப-ரை.—கலை—ஸ்ம்ருதி இதிஹாஸபுராணங்களை, அற கற்ற—நன்றாக அப்யஸித்த, மாந்தர்—கூரத்தாழ்வான் போல்வார், புலை அறம்—நீசதர்மமாய், ஆகி—வைதிகதர்மத்துக்கு விருத்தமாய், நின்ற—பழையதாய்ப்போருகிற, புத்தொடு—பௌத்தமதத்தையும், சமணத்தொடு—க்ஷபணமதத்தையும், எல்லாம்—மற்றமதங்களையும், காண்பரோ—நெஞ்சாலேதான் ஆராய்வார்களோ; (அல்லது,) கேட்பரோதான் — செவியாலேதான் கேட்பார்களோ; (அது நிற்க ப்ரத்யக்ஷத்திலே,) தலை—என்தலையானது, அறுப்புண்டும்—அறுக்கப்பட்டாலும், சாவேன்—நான் சாகமாட்டேன்; ஐயா—ஸ்வாமிகளே, சத்தியம்—இந்தப்ரத்யக்ஷமான ப்ரத்யயத்தை, காண்மின்—காணுங்கோள்; சிலையினால்—வில்லினாலே, இலங்கை—லங்கையை; செற்ற தேவனே—ஜயிக்கையால்வந்த தேஜஸ்ஸை யுடையவனே, தேவனாவான்—ஆச்ரயணீயனாவான்.

வ்யா. புலையுறமாகிநின்ற புத்தொடுசமணமெல்லாம். சதுர்விதமான பௌத்தம் க்ஷபணம் முதலானவை யெல்லாம். புலையறம் – நீசதர்மம். அதாவது — ஜ்ஞாந விஷயமான பதார்த்தங்களும் ஜ்ஞாநமுமேயுள்ளது, இதில் ப்ரமாணம் - ப்ரத்யக்ஷமும் அநுமாநமுமே என்பாரும், பதார்த்தங்கள் அநுமேயங்கள் ஜ்ஞாநமேயுள்ளதென்பாரும், அநுமேயமாயும் பதார்த்தங்களில்லை, கேவலஜ்ஞாநமேயுள்ள தென்பாரும், அந்தஜ்ஞாநமுமில்லை, ஸர்வம்சூந்ய மென்பாரும், ஸர்வத்தையும் சூந்ய மென்னலாமோ, ஜகத்து கார்யகாரணரூபத்தாலே நித்யமாயும், அநித்யமாயும், பிந்நமாயும், அபிந்நமாயும், ஸத்யமாயும், அஸத்யமாயும், இப்படி அநேகமென்பாரும்; ஆக இப்படி சொல்லுகிற நீசதர்மம். ஆகிநின்ற. சொல்லுக்குக்களாலே வைதிகதர்மத்துக்கு விருத்தமாய்ப் பழையதாய்ப் போருமென்கை. "எல்லாம்" என்றது - ஸாங்க்யம், வைசேஷிகம், பாசுபதம் முதலானவை. இவைநீசதர்மமானபடி எங்ஙனேயென்னில்;- ஈச்வர விபூதியிலே ஒருவனை ஹிம்ஸித்தார்க்குச் சொல்லுகிற பாபத்துக்கு அவதியில்லை, ஈச்வரனையும், ஈச்வரவிபூதியையும், அஜ்ஞாநவசனியாலே அழிக்கப் பார்க்கிறவர்களிறே; அகண்டயகண்டந ப்ரவர்த்தரிறே † அடங்க.

கலையறக்கற்றமாந்தர். ச்ருதிஸ்ம்ருதிஇதிஹாஸங்களில் நிலைநின்றவர்களாய் வேதநாதம் மைப்பட்டவர்கள். அவர்களாகிறார் - கூரத்தாழ்வான் போல்வாரிறே. காண்பரோ கேட்பரோதான். இவற்றை நெஞ்சாலே ஆராய்தல், செவியாலே கேட்குதல் செய்வர்களோ.

§ "சாகேன்" என்றும் பாடம். † "அடங்க" என்றது - முழுதும் என்றபடி.

ஆழ்வான், ¶ இஷ்டஸித்தி வாசிக்கிறவர்களோடேயிருந்து தாழ்த்துவர ஆழ்வானுக்குச்சொன்ன ‡ வார்த்தையை அநுஸந்திப்பது. பாஹ்யகுத்ர்ஷ்டிகள் ஸத்யா அஸஹ்யமாகையும், பகவத்விஷயம் ஸத்யாதாரகமாயிருக்கையுமிறே தர்சநநிஷ்டையாவது. தலையறுப்புண்டேஞ்சாவேன் சத்தியங்காண்மின். நிர்த்தோஷ ச்ருதிப்ரமாணமென்றிருக்குமளவில்லாதார்க்கு மிதுவே ஆச்ரயணீய வஸ்துவென்னுமிடம் ப்ரத்யக்ஷத்தாலே ஸாதிக்கிறேன், அத்தைக்காணுங்கோள். மழுவைக்காய்ச்சிக் கையிலே இட்டால் அக்நி தன்கார்யம் செய்யமாட்டாதொழிகிறது அர்த்தத்தினுடைய ஸத்யதையாலேயிறே; அப்படியே என்னுடைய சிரச்சேதத்தைப்பண்ணினுல் அதின் கார்யமான மரணமின்றிக்கே யிருந்ததாகில் தசரதாத்மஜனே ஆச்ரயணீயனென்றிருங்கோள். (க) "யூர்ம த்வாஸ த்வஸநுஸ" என்கிற ப்ரதிஜ்ஞையாலே, வரபலத்தாலே அறுக்கக்கடவதல்லாத தலையறுக்கக்கண்டோமிறே; அப்படியே அற்றதலையின் கார்யமான மரணம்பிறவாதபடியிறே இவர் ப்ரதிஜ்ஞை. தலையறுக்கச்செய்தேயும் மரணமின்றிக்கேயொழியக்கூடுமோ வென்னில்; சத்தியங்காண்மின். ப்ரத்யக்ஷிக்கப் புகுகிறவற்றிலே ஸம்சயிக்கிறதென், நான் பண்ணுகிற த்ர்ஷ்டப்ரத்யயத்தைக் காணுங்கோள்.

ஐயா. அவர்கள் இருயாதேகாண்கைக்காக இரக்கிறுர். நீர் இனி ப்ரத்யயம்பண்ணவேண்டா, பண்ணின ப்ரதிஜ்ஞையே அமையும், ஆச்ரயணீயன் இன்னுனென்று சொல்லலாகாதோவென்ன; சிலையிலிலங்கைசெற்ற தேவனே தேவனுவான். வரங்கொடுத்த தேவதைகள் தாம் குலையாமே சக்ரவர்த்திதிருமகனுய்வந்தவதரித்து, கையில் வில்லாலே லங்கையை அழியச்செய்தவனே ஆச்ரயணீயன்.

தேவதைகள் தங்களளவறியாதே ராவணனுக்கு வரங்கொடுத்து, பின்னை தங்கள் குடியிருப்பிழக்கும்படி அவனாலே நெருக்குண்டு போக்கற்றவளவிலே திருவடிகளிலேவந்து விழுவர்கள், அதுக்குப் போக்கடிசெய்கை ஈச்வரனுக்கேபரமிறே. ப்ரஹ்மாதிகள் வரபலத்தாலே பூண்கட்டின லங்கையை ஸங்கல்பத்தாலன்றியே கையில் வில்லாலே அழியச்செய்தவனே உங்கள் விரோதியையும்போக்கி ரக்ஷிக்குமென்கை. தேவனே. ராவணவதஸமநந்தரத்தில் கையும் வில்லுமாய்நின்றபோதை வீரஸ்ரீயால்வந்த புகரையுடையவனே ஆச்ரயணீயனுவான். ... ... ... ... ... ... ... எ.

அ. எட்டாம்பாட்டு. வெறுப்போடு. இப்படிவைதிக மர்யாதைகளிலே நின்ற தசரதாத்மஜனே ஆச்ரயணீயனென்று சொன்னவிடத்தில், அங்குத்தை குணதிக்யத்தை புத்திபண்ணி ஆச்ரயியாதே, ஸம்ஸாரிகள் விக்ர்தராயிருந்தபடியைக்கண்டு, இதுக்கடி பாஹ்யதர்சநருசிகளாகையிறே; ஆனபின்பு இவர்கள் வத்யரென்று பெரிய பெருமாளைக்குறித்து அருளிச்செய்கிறுர்.

---

¶ "இஷ்டஸித்தி" என்றது - ஸாங்க்யவாசஸ்பதி என்று பேரான ஸாங்க்ய சாஸ்த்ரம். ‡ ஆழ்வானுக்குச் சொன்னவார்த்தையாவது - இத்தனைபோது விளம்பித்ததென்னென்ன; ஆழ்வான் இவ்வ்ருத்தாந்தத்தை அருளிச்செய்ய; "கலைபறக்கற்றமாந்தர் காண்பரோ கேட்பரோ" என்றருளிச்செய்து புரஸ்ஸ்நாநம் பண்ணுவித்தருளி ஸ்ரீபாததூளியுமிடுவித்தருளினராம். (க) "தர்மாத்மா ஸத்யஸந்தச்ச"

மூ.—வெறுப்பொடு சமணர் முண்டர் விதியில் சாக்கியர்கள் நின்பால்
பொறுப்பரியனகள் பேசில் போவதே நோயதாகிக்
குறிப்பெனக் கடையுமாகில் கூடுமேல்தலையை யாங்கே
அறுப்பதே கருமங்கண்டா யரங்கமா நகருளானே. அ.

ப—ரை.—அரங்கமாநகருளானே—, வெறுப்பொடு—பகவத்விஷயத்தைக்கேட்கப்பெருதே வெறுத்துப்போகிற, சமணர்—க்ஷமணர்களும், முண்டர்—சைவர்களும், விதி இல்—பகவத்ஸமாச்ரயணம்பண்ணி அநுபவிக்கபாக்யமில்லாத, சாக்கியர்கள்—பௌத்தரும், நின்பால்—ஸர்வஸ்மாத்பரனான உன் விஷயத்திலே, பொறுப்பு அரியனகள்—பொறுக்கவரியனவாயிருப்பன சிலவற்றை, பேசில்—சொல்லுவார்களாகில், (ஸாத்விகன்.) அதுவே—அவன் நிந்தையே, நோய் ஆகி—நோயாகி, போவது—முடிந்துபோவான்; (அங்ஙனன்றிக்கே, எதிரிகள் நசிக்கும்படி,) எனக்கு—,குறிப்பு அடையுமாகில்—இலக்குவாய்த்து, கூடுமேல்—என்கையில் நசிக்கும்படி எனக்கு சக்தியுமுண்டானுல், ஆங்கே-பகவந்நிந்தைபண்ணினவிடந்தன்னிலே, தலையை அறுப்பதே—அவன் தலையையறுத்துத்தள்ளுகையே, கருமம் கண்டாய்—கர்த்தவ்யங்கிடாயென்கிறுர்.

வ்யா. வெறுப்பொடு சமணர்முண்டர். அர்த்தகாம நிபந்தநமாகவன்றிக்கே நிர்நிபந்தநமாக பகவதுத்கர்ஷங்கேட்டவாறே சிவீலென்றிருப்பர்கள். வேதப்ரதிபாத்யதயாவரும் பகவதுத்கர்ஷமும், தத்ஸமாராதநாந்தர்க்கதமான ஜ்யோதிஷ்டோமாதி ஹிம்ஸையும், அ(ச)மணர்க்கும் சைவர்க்கும் அஸஹ்யம். திருநாளிலெழுந்தருளாநின்றுல் நான்றுகொள்வாரும், "கொம்பூதிற்று" என்று முட்டிக்கொள்வாருமாயிறே முண்டரிருப்பது. முண்டர் என்கிறது-சைவரை. "முண்டன்நீறன்" என்கிறபடியே அவனுடைய வடிவையிறே இவர்களும் தரித்திருப்பது. சமணராகிற முண்டரென்னவுமாம். விதியில் சாக்கியர்கள். பகவதுத்கர்ஷத்தையறிந்து தத்ஸமாச்ரயணத்தைப்பண்ணி அநுபவிக்கைக்கீடான பாக்யமில்லாத பௌத்தர்.

நின்பால் பொறுப்பரியனகள்பேசில். ஸர்வஸ்மாத்பரனுய் குணதிகனை உன்பக்கலிலே பொறுக்கவரியனவாயிருப்பன சிலவற்றைச் சொல்லுவார்களாகில். ஈச்வரஸத்பாவத்தையும் தத்விபூதி ஸத்பாவத்தையும் இல்லைசெய்வாரும், ஒருக்ஷேத்ரஜ்ஞனை பரதேவதையென்பாருமானுல், வைதிகர்க்குப் பொறுக்கப்போகாதிறே. அவர்கள் சொல்லும் பாசுரம் தம் வாயால்சொல்லமாட்டாமையாலே "பொறுப்பரியனகள்" என்கிறுர். "தான் தீங்கு நினைந்த" என்றும், "அன்றின்னாதனசெய் சிசுபாலன்" என்றுமிறே இவர்கள் வார்த்தையிருப்பது. "பேசில்" என்றது-செவிகேட்கச்சொல்லுவர்களாகிலென்றபடி. மஹாபலி, ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் பக்கலிலேசென்று "எனக்கு ராஜ்யஸ்ரீ குறைந்துவாராநின்றது இதுக்கு அடியென்" என்று கேட்க; "அஸுரர்களுக்காக தேவர்களை நெருக்கினுய், அவர்கள் க்ஷீராப்தியிலேசென்று ஆச்ரயிக்க அவர்கள் விஜயார்த்தமாக அதிதிவயிற்றிலே புகுந்தருளினுன், உன் ஐச்வர்யம் முடிந்ததுகாண்" என்ன; அவன் பகவந்நிந்தையைப்பண்ண, செவிபுதைத்துக்கொண்டு "கெடுவாய்! என்முன்னே பகவந்நிந்தையைப் பண்ணினுய்; என்தலையை யறுத்தாயாகில் எனக்கு உபகரித்தாயாயிற்று, நீயிப்படி சொன்னதுக்காக ராஜ்யப்ரஷ்டனுவாய்" என்று சபித்தான். "விரக்தனுனவன் ராஜ்யத்தை ஒன்றுக நினை

ந்து இப்படி சபிப்பானென் " என்று நஞ்சீயர் பட்டரைக்கேட்க; "நாயைதண்டிக்கையாகிறது அதுதின்கிற அமேத்யத்தை விலக்குகையன்றோ " என்றருளிச்செய்தார். ராஜகுமாரனை தண்டிக்கையாவது - சாந்தையும் வெற்றிலையையும் விலக்குகையிறே. போவதே நோயதாகி, திருநறையூரரையரைப்போலே ஸத்வப்ரசுரனாயிருந்தானாகில் அவன் நிந்தையேநோயாக முடிந்துபோவது. அதவா - கேட்டார் பொறுக்க மாட்டாதபடி அசக்தனாயிருந்தானாகில் அவர்கள் முகத்திலே விழியாதே போவதென்றுமாம். (க) " ம்ரோயம் த்ருஷ்வா ஜநா நிந்தாவிஷயக - மெ - கணை - ததந் - யாதவெனுமங்கை - தாகோநந்தசீ. "

குறிப்பெனக்கடையுமாகில். அங்ஙனன்றிக்கேஎதிரி நசிக்கும்படி இலக்குவாய்க்குமாகில், குறித்தல்-நினைத்ததும்கருத்திலது கிட்டலும், கூடுமேல். தான் அவன்கையிலே அகப்படாதபடி யெதிரியைநிரஸித்துத் தப்பவல்ல சக்தியோகமுண்டாகில். தலையையாங்கே அறுப்பதே கருமம். பகவந்நிந்தைபண்ணின இடந்தன்னிலே தலையையறுக்கையிறேகர்த்தவ்யம், கருமம் என்றது-அவன்கார்ய மென்னவுமாம்; ஸ்வகார்யமென்னவுமாம், பின்னை அவன் நிந்தைபண்ணக்கேளாதொழியலாம், பகவந் நிந்தைபண்ணி அவன் தனக்கநர்த்தத்தை விளைத்துக்கொள்ளாதொழியலாம். * அக்நீஷோமீய ஹிம்ஸையில் யஜமானனுக்கும் பசுவுக்கும் ஸ்வர்க்க ஸித்தியுண்டாகச் சொல்லாநின்றதிறே. கண்டாய். ஸ்ரீதண்டகாரண்யத்தில் ரிஷிகளுக்கு விரோதியான ராவணாதிகளை அழியச்செய்த தேவரீர்க்கிறே இது சொன்னாலேறுவது. அரங்கமாநகருளானே, கோயிலில் வந்து கண்வளர்ந்தருளுகிறது அவதாரத்தில் பிற்பாடரானவருடைய விரோதிகளைப் போக்குகைக்காகவன்றோ வென்கிறார். ஆந்ருசம்ஸ்யப்ரதானராய் பரமசாந்தரான இவ்வாழ்வார் " வதமாம் " என்றுவிதிப்பா னென்னென்னில்; (உ) " நஹிம்ஸ்யாத் ஸர்வாபூதானி " என்கிறதன்றே, அக்நீஷோமீய ஹிம்ஸைபோலே யிருப்பதொன்றிறே இது, பகவந்நிந்தை பண்ணுவார்க்கும், பகவதஸாதாரணரா யிருப்பார்க்கும், பாத்யபாதக ஸம்பந்தமேயுள்ளது. " எண்ணாத மானிடத்தை யெண்ணாத போதெல்லாம் இனியவாறே " என்னக்கடவதிறே. ... ... ... ... ... ... அ.

அ. ஒன்பதாம்பாட்டு. மற்றுமோர். அவர்கள், "சிஷ்டகர்ஹைக்கஞ்சி இதர தர்சநருசியால் ஆச்ரயியாதிருக்கோமல்லோம், தசரதாத்மஜனையிறே ஆச்ரயிக்கச் சொல்லிற்று; அவனிருன் - வாசனும் நடையுமாய் எங்களுக்குக் கிட்டவொண்ணாதா யிருப்பா னொருத்தன், கிட்டினாலும் வஸிஷ்டாதிகள் அருகேயிருந்து அபோக்யரோ யோக்யரோ என்னுநிற்பர்கள், ஆகையாலே பராவஸ்தையோடு ராமாவதாரத்தோடு வாசியில்லை, எங்களயோக்யதை பாராதானொருத்தன் ஆச்ரயணீயனாகவேணும், அவனைக்காட்டித் தாரீர் என்ன; ஆகில்யோக்யதாயோக்யதைபாராதே தானேமேல்விழுந்து விஷயீகரிக்கும் க்ருஷ்ணனை ஆச்ரயியுங்கோளென்கிறார்.

மூ.—மற்றுமோர் தெய்வமுண்டே மதியிலா மானிடங்காள்!
உற்றபோ தன்றிநீங்க ளொருவனென் றுணரமாட்டீர்
அற்றமே லொன்றறியீ ரவனையல்லால் தெய்வமில்லை
கற்றினை மேய்த்தவெந்தை கழலிணை பணிமினீரே. கூ.

(க) " குமோர்யத்ர பரீவாதோ நிந்தாவாபி ப்ரவர்த்ததே । கர்ணௌ தத்ர பிதாதவ்யௌ கந்தவ்யம்வா ததோந்யத: "   (உ) " நஹிம்ஸ்யாத் - பூதாநி "

ப-ரை.— மதி இலா—வேதாந்தஜ்ஞாநமில்லாத, மானிடங்காள்—மநுஷ்யர்களே, மற்றும்—நான்சொல்லுகிறவனையொழிய, ஓர் தெய்வம்—வேறேயொரு பரதேவதை, உண்டே—உண்டோ; உற்றபோது அன்றி—உங்களுக்கு ஆச்ரயணீயரான தேவதைகள் ஈவலுற்றிகள் கையிலகப்பட்டு நெருக்குண்ணும்போதல்லது, ஒருவன் என்று—ஸர்வாதிகன் ஒருவனுளனென்று, உணரமாட்டீர்—நீங்கள் அறியப்போகிறதில்லை; அற்றம்—உள்ளுண்டான பொருளை, ஒன்று—ஏகதேசமும், அறியீர்—அறியமாட்டீர்கள்; அவனை அல்லால்—அவனையொழிய, தெய்வம்—ஆச்ரயணீயதேவதை, இல்லை—வேறே இல்லை; ( ஆதலால், ) நீர்—நீங்கள், கன்று இனம் மேய்த்த—கற்றுத்திரளை மேய்த்தவனாய், எந்தை—நமக்கு ஸ்வாமியான க்ருஷ்ணனுடைய, இணை—ஒன்றுக்கொன்றொப்பான, கழல்—திருவடிகளை, பணிமின்—ஆச்ரயியுங்கோள்.

வ்யா. மற்றுமோர் தெய்வமுண்டே. நான் சொல்லுகிற இவனையொழிய வேறேயொரு ஆச்ரயணீய தத்வமுண்டோ?; "ஈச்வரோஹம்" என்றிருப்பாருண்டாகிலும் ஆச்ரயணீயனுமாய் ப்ராப்தனுமாயிருப்பான் வேறொருவனில்லை. (க) "யெஸ்மாத் தேவதா ஸத்ர" என்று அந்யாசுவிறே இவன் சொல்லும்போதும் சொல்லுவது. ஓர்தெய்வம், கட்டைக்குடியனுப் சிறிதுபோதைக்குப் போலியாய் நின்று பின்னைவிவேகித்தால் கழிக்கலாவதொன்றுமில்லை. உண்டே. இவனோடு ஸமாநராயிருப்பாருண்டோவென்று கேட்கிறாரல்லர், கிம் - க்ஷேபார்த்தமாதல்; "ஏழுலகுமீபாவஞ்செய்து அருளாலளிப்பார் ஆர்" என்றால், "அவன்" என்று எதிரிகளுக்கு உத்தரமாம்படி ஸாப்ரஸித்தமான அர்த்தமென்கிறாரால்; ஸம்ப்ரதிபந்நமான அர்த்தத்தை ஒருவராலு மிசையாதொழிய வொண்ணாதிறே. மதியிலாமானிடங்காள். (உ) "த்ரீணி ஸதாநி ஸஹஸ்ராண்யக்நீந் த்ரிம்ஸச்ச தேவா நவசாஸபர்யந்" என்கிறபடியே ஆராத்யரநேகரென்னுமிடம் ச்ருதிஸித்தமன்றோவென்ன; வேதாந்த ஜ்ஞாநமில்லாதார் பாக்யஹீநரிறே. (ங) "சதுர்ஹோதாரோயத்ர ஸம்பதம் கச்சந்தி தேவை:" (ச) "அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா" (ரு) "யெயஜந்தி பித்ருந்தேவாந்" என்கிறச்ருதி ஸ்ம்ருதிகளில் ஜ்ஞாநமில்லாதாரிறே. அறிவுக்கு யோக்யதையுள்ள ஜந்மத்திலே ஜநித்து அறிவின்றிக்கேயிருக்கிற பாக்யஹீநர்காள்.! "ஆன்விடையேழன்றடர்த்தார்க்காளானாரல்லாதார்மானிடவரல்லரென்றெனமனத்தேவைத்தேனே" என்றும், "செங்கண்மால் நாமம்மறந்தாரை மானிடமாவையேன்" என்றும், (சு) "கலெளநாபஸவதி" என்றும் சொல்லக்கடவதிறே. (எ) "தஜ்ஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யதுக்தம்" என்றும், "தண்டாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்றும்- வகுந்த விஷயத்தில் ஜ்ஞாநமே ஜ்ஞாநமாவது; அல்லாதவை-அஜ்ஞாநஸமாநம். (அ) ["வித்யாந்யா ஸில்பநைபுணம்"] செருப்புக்குத்தக்கற்ற ஜ்ஞாநத்தோ பாதியிறே இதரஜ்ஞாநங்கள். உங்களுக்கு அறிவில்லையாகில் அறிந்த நீர் அருளிச்செய்ய மாட்டீரோவென்ன; உற்றபோத

(க) "யேப்யர்யதேவதாபக்தா:" (உ) "த்ரீணிசதாத்ரிஸஹஸ்ராண்யக்நிம்த்ரிம்சச்ச தேவாநவசாஸபர்யந்" (ங) "சதுர்ஹோதாரோயத்ரஸம்பதம் கச்சந்திதேவை:" (ச) "அஹம்ஹிஸர்வயஜ்ஞாநாம்போக்தா" (ரு) "யேயஜந்திபித்ருந்தேவாந்" (சு) "அஸந்நேவஸபவதி" (எ) "தஜ்ஜ்ஞாநமஜ்ஞாநமதோந்யதுக்தம்" (அ) "வித்யாந்யாஸில்பநைபுணம்".

ன்றி நீங்களோருவனென்றுணரமாட்டீர். நான்சொன்னாலும் ப்ரளயம்வந்து கிட்டினபோது ஆச்ரயணீயரான தேவதைகளும் நீங்களும் ஒருபுகுவாசல் தேடித்திரியுமன்றல்லது ஸர்வரக்ஷகனொருவனுளனென்று உங்கள்நெஞ்சில் படமாட்டாது.

உங்களுக்கு ஆச்ரயணீயரான தேவதைகள், ராவணாதிகள் கையிலே நெருக்குண்டு கூப்பிடுமன்றிறே ரக்ஷகனொருவனுண்டென்று உங்கள் நெஞ்சிலே படுவதென்றுமாம். ஒருவனென்றுணரமாட்டீர். தேவதாந்தரங்களை ஆராதிக்கிற நீங்கள் ஆபத்தசைகளை யொழிந்தபோது அவர்களையாதி இவனும் ஒருவனென்று புத்திபண்ணமாட்டீகோள். அபுநராவ்ருத்தி லக்ஷணமோக்ஷத்தைத் தருமிவன்பக்கல் க்ஷுத்ரபலப்ரதரான தேவதைகள்பக்கல் பண்ணின ஆதரமுமின்றிக்கேயிருக்கிறதிறே ஸம்ஸாரிகள் மதிகேடு.

அற்றமேலொன்றறியீர். அற்றம் – மறைபொருள். அறியாமைக்கடி அபிதானவ்ருத்திக்கு மேல்பட தாத்பர்யவ்ருத்தி யறிகிலிகோள். (க) "வசஸாம் வாச்யமுத்தமம்" (உ) "வேதைச்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:" (௩) "நாராயண பரா வேதா:" என்னக்கடவதிறே. அவனையல்லால் தெய்வமில்லை. அவனையொழிந்த தேவதைகளுடைய ஸத்பாவத்தையில்லையென்கிறாரல்லர், ஈச்வரனுக்கு ப்ரகாரமாய்க்கொண்டு அத்தேவதைகளுமுளர், ஆச்ரயணீய ரில்லையென்கிறார். "அவனை" என்றுகொண்டு மேல்சொல்லுகிற க்ருஷ்ணனை நினைக்கிறார்.

"அவனை" என்று நீரருளிச்செய்கிறவனை இன்னானென்று விசேஷியீர் - நாங்களாச்ரயிக்கவென்ன; கற்றினம் மேய்த்தவெந்தை கழலிணைபணிமினீரே என்கிறார். "க்ருஷ்ணன்" என்னாதே "கற்றினம்மேய்த்த" என்றது - தேவதாந்தரங்களைப்போலே துராராதன்னன்றிக்கே ஸர்வஸுலபனென்கைக்காக. பசுமேய்க்கை, * அயர்வறுமமரர்களதிபதியா யிருந்தத்தோடொக்கும்; கன்று மேய்க்கையிலே யாய்த்துத் திருவுள்ள முகந்திருப்பது, ஸ்வரக்ஷணத்தில் குறைய நின்றார் பக்கலிலேயிறே திருவுள்ளம் மண்டியிருப்பது: "திவத்திலும் பசுநிரை மேய்ப்புவத்தி" என்கிறப்படியே — பசுமேய்க்கையில் உகப்பு; கன்றுகளை மேய்க்குமிடத்தில் இனிதுகந்திருக்கும். (கற்று - கன்று) எந்தை. நானகப்பட்டதுறையிலே நீங்களுமகப்படப் பாருங்கோள். கழலிணை பணிமினீரே. அச்செயலுக்குத் தோற்று (ச) "குணைர் தாஸ்யமுபாகத:" என்கிறபடியே நான் அவன் திருவடிகளிலே விழுந்தேன், நீங்களுமப்படியே ஆச்ரயியுங்கோள்.

தான் சிறியனாய் நின்ற நிலையிலே தன்னை ஆச்ரயித்தாரைப் பொறுப்பிக்குமவனை ஆச்ரயியுங்கோள். "யயாதி இந்த்ரனோடே ஏகாஸநத்தி லிருந்தவளவிலே, கர்மபூமியிலே புண்யகர்த்துக்களாய்ப் போருவாரார்ரோவென்ன; அஸத்யம் சொல்லலாகாதென்னும் நினைவாலே நான்வர்த்திக்கிற நாளிலே என்னைச் சொல்லுவார்களென்ன; ஏகாஸநத்திலிருந்தது பொறுமையாலே ஆத்மப்ரசம்ஸை பண்ணினையென்று, (ரு) 'த்வம்ஸ' என்று தலைகீழ்ப்படத் தள்ளினனென்று உண்டாயிருந்தது; வேதோப ப்ரும்ஹணார்த்தமாக ப்ரவர்த்தமான

(க) "வசஸாம் வாச்யமுத்தமம்" (உ) "வேதைச்சஸர்வை ரஹமேவவேத்ய:"
(௩) "நாராயணபராவேதா:" (ச) "குணைர்த்தாஸ்யமுபாகத:" (ரு) "த்வம்ஸ"

நேன் பெருமாளே" என்று அவர்தம்மைக் கேட்கில் தம்மெளிமை அறிவித்ததாய், அத்தாலே எதிர்த்தலே அழிந்ததாகாதே என்று அவர் மேனாணித்திருக்கக்காணுமதாய்த்து பலம். இவ்விஷயத்தைக் கண்டுவைத்துக் குறியழியாதே யிருக்கிற ஸம்ஸாரிகளைப் பார்த்து §உங்களாருகுவாராத பரிஹாரத்திலே யெனக்கும் ஒருசிறுங்கை யிடவல்லீகோளே யென்கிறார். ... ... ... ... ... ... கசு.

அ. இருபதாம்பாட்டு. பாயுநீர். இவ்விஷயத்தில் ப்ராவண்யத்தைத் தவிர்த்து எங்களைப்போலே தேஹயாத்ரா பரராய் வர்த்திக்கவே தரிக்கலாமென்ன; கண்வளர்ந்தருளுகிற வழகைக் கண்டுவைத்து "இஸ்ஸமர்த்தியடங்க எங்களுக்கு" என்னும்படியான ஸ்வரூபஜ்ஞாநமுடைய எங்களுக்கு, (க) "அஹம்மம" என்கிற உங்களைப்போலே அகலவிரகுண்டோ வென்கிறார்.

மூ.—பாயுநீ ரரங்கந்தன்னுள் பாம்பணைப் பள்ளிகொண்ட
மாயனார் திருநன்மார்வும் மரகதவுருவுந் தோளும்
தூயதாமரைக் கண்களுந் துவரிதழ்ப் பவளவாயும்
ஆயசீர் முடியுந்தேசு மடியரோர்க் ககலலாமே. உ0.

ப-ரை.— பாயும்—பாயாநின்றுள்ள, நீர்—காவேரியாலேசூழப்பட்ட, அரங்கம் தன்னுள்—கோயிலிலே, பாம்பு அணை—திருவனந்தாழ்வான்மேலே, பள்ளிகொண்ட—கண்வளர்ந்தருளுகிற, மாயனார்—ஆச்சர்யசக்தியுக்தனுடைய, திரு—பிராட்டியாலே, நல்—விலக்ஷணமான, மார்வும்—திருமார்வும், மரகதம்—மரகதரத்நத்தை யொத்த, உருவும்—திருவடிவும், தோளும்—திருத்தோள்களும், தூய—பரிசுத்தமான, தாமரை—தாமரைமலரை யொத்த, கண்களும்—திருக்கண்களும், துவர்—சிவந்த, இதழ்—திருவதரமும், பவளம்—பவளம்போன்ற, வாயும்—திருவாயும், ஆய—பண்டேயாய், சீர்—சீர்மையை யுடைத்தான, முடியும்—திருவபிஷேகமும், தேசும்—ஸமுதாயசோபையும், (கண்டால்,) அடியரோர்க்கு, ஸ்வரூபஜ்ஞாநமுடைய எமக்கு, அகலலாமே—அகலப்போமோ.

வ்யா. பாயுநீரரங்கம் அடைத்தேற்ற வேண்டாதபடி நீருக்குப் †பள்ளநாலியான கோயில். இது உபலக்ஷணம்; பாவநமாயும் ப்ரஸந்நமாயு முள்ள பதார்த்தங்களுக்குப் பள்ளமடையாயிறே கோயிலிருப்பது. (உ) ["ரமணீயம் ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோ யதா"] நீருக்கு ஸாத்விகர் நிதர்சநமாயிறே இருப்பது. தன்னுள் பாம்பணை. அந்நீருறுத்தாமைக்குப் படுத்தபடுக்கையாய்த்துத் திருவநந்தாழ்வான். "வெள்ளைவெள்ளத்தின்மேலொருபாம்பை மெத்தையாகவிரித்து" என்னக்கடவதிறே. பள்ளிகொண்டமாயனார். கண்வளர்ந்தருளும் போதையழகு ஆச்சர்யமாயாய்த்திருப்பது. (ங) "ஸயாநோ ஸ்யாதி ஸ்ரீமாந் ஸமஸ்தமபி ..... வஹவ:" என்னக்கடவதிறே. நிற்றல் இருத்தல் செய்தாராகிலும் அகலலாங்கிடீர். "ஏரார்கோலந்திகழக்கிடந்தாய்" என்றும், "ஆனையில்கிடந்த கிடக்கைகண்டிடப் பெற்றிலேன்" என்றும் சொல்லக்கடவதிறே. (ஆனையில்கிடக்கை—ஆனைபோலேகிடக்கை.)

§"உங்களிறுக்குவாத" என்று அச்சிட்டப்ரதிகளில் காண்கிறது. † பள்ளநாலி-பள்ளமடை.

(க) "அஹம்மம" (உ) "ரமணீயம்ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோ யதா" (ங) "ஸயாபோதிதச் ஸ்ரீமாந்ஸகலாப்தப்ரார்த்தபி"

திருநன்மார்வும். பிராட்டியாலே விலக்ஷணமான மார்பும். பிராட்டியுடைய செம்பஞ்சின் சுவடுகளும் கழித்தமாலைகளுமாய்க் கிடக்குமாய்த்து. பிராட்டி "அகலகில்லேனிறையும்" என்று பிரியமாட்டாத வைலக்ஷண்யத்தையுடைய மார்வமென்னவுமாம். மரதகவுருவும். கண்டார்கண்குளிரும்படி நீர்வெள்ளத்தைத் திறந்துவிட்டாப்போலே யாய்த்து வடிவிருப்பது. தோளும். கிழிலவைபோலே ‡ இடுசிவப்பில்லாத தோள்களும். அவ்வெள்ளத்திலே அழுந்துகிறார்க்குத் தெப்பம்போலே யிருக்கிற திருத்தோள்களும்.

தூயதாமரைக்கண்களும். பிராட்டியோடு ஹிரண்யாதிகளோடு வாசியறக் குளிரநோக்குகிற திருக்கண்களும். நோக்குக்குத் தூய்மையாவது - நிர்ஹேதுகமாகக் கடாக்ஷிக்கை. (க) "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" என்கிறபடியே — அநுகூலப்ரதிகூல விபாகரஹிதமாயாய்த்து ஸௌஹார்த்தமிருப்பது. (உ) "தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்" என்கிறபடியே ஸம்பந்தமொத்தாய்த்திருப்பது. இப்படியிருக்க, சில பதார்த்தங்களுக்குக் கடாக்ஷம் அநர்த்த ஹேதுவாகிறது ப்ரக்ருதிதோஷத்தாலே. ஸர்வாநுகூலமான தென்றலானது ஒருபதார்த்தத்திலே வந்தால் சோஷகமாகாநின்றதிறே. மென்மை குளிர்த்தி நாற்றமிவற்றுக்குத்தாமரை ஒருபோலியா யித்தனைபோக்கி அகவாயில் தண்ணளிக்கு த்ருஷ்டாந்த மாகமாட்டாதே. துவரிதழ்பவளவாயும். சிவந்த திருவதரத்தையும் பவளம்போலே யிருந்துள்ள தந்தபங்தியையுமுடையவாயும். (ஈ) "அவாக்யநாதரः" என்கிற காம்பீர்யம் குலைந்து, கிட்டினாரை ஸாந்த்வவாதம்பண்ணுகிற திருப்பவளமும், ஸ்வாபராதத்தை யநுஸந்தித்துக் கிட்டவஞ்சினவர்களுடைய அபராதத்துக்கு சேர்த்தாவுகொடுக்க ஸ்மிதம்பண்ணும் திருப்பவளமுமென்கை.

ஆயசீர்முடியும். பண்டேயாய்ச் சீர்மையையுடைத்தான முடியும். ஸித்தமாய் ஐச்வர்ய ஸூசகமான திருவபிஷேகமும். இத்தனையாலுமாக அவயவசோபை சொல்லிற்று. தேசும். இத்தால் - ஸமுதாயசோபை சொல்லுகிறது. அடியரோர்க்ககலலாமே. இவ்வைலக்ஷண்யத்தைக் கண்டால் ஸ்வரூபஜ்ஞாநமுடையார்க்கு அகலப்போமோ. இதுக்குப்புறம்பாய் "நான், என்னது" என்றிருப்பார்க்கன்றோ அகலலாவது. "ஆமே" என்றது - எதிரிகளுக்கும் அகலப்போகாதென்ன வேண்டும்படியாயிறே அர்த்தத்தின் மெய்ப்பாடிருப்பது.

அ. இருபத்தோராம்பாட்டு. பணிவினால். அகலப்போகாதாகில் பரிச்சேதித்தநுபவிக்கப் பார்த்தாலோ வென்கிற திருவுள்ளத்தைக் குறித்து, இவ்விஷயத்தில் துணிவில்லாமையாலே அநாதிகாலமிழந்த அறிவுகேடுபோலே யிருப்பதொன்றுகாண் இப்போது பரிச்சேதித் தநுபவிக்கலாமென்று கணிசிக்கிறவிது வென்கிறார்.

மூ.—பணிவினால் மனமதொன்றிப் பவளவா யரங்கனார்க்குத்
துணிவினால் வாழமாட்டாத் தொல்லைநெஞ்சே நீசொல்லாய்
அணியினார் செம்பொனாய வருவரை யனையகோயில்
மணியனார் கிடந்தவாற்றை மனத்தினால் நினைக்கலாமே. உக.

‡ இடுசிவப்பு - ஆரோபிதாகாரம் என்றபடி.

(க) "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" (உ) "தேவாநாம் தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்" (ஈ) "அவாக்யநாதரः"

ப-ரை.— பவளம்—பவளம்போன்ற, வாய்— திருவதரத்தையுடையரும், அரங்கனர்க்கு—கோயிலிலே யெழுந்தருளியிருக்கிற அழகியமணவாளன் விஷயத்திலே, மனம்—மனோவ்ருத்தியை, பணிவினல் ஒன்றி—பணிவதாகவொருப்படுத்தி, துணிவினல்—துணிவினலே, வாழமாட்டா—வாழமாட்டாத, தொல்லை நெஞ்சே—அநாதிகாலமாக பகவத்விஷயத்தை யிழந்திருக்கிற நெஞ்சே, நீ சொல்லாய்—நீயேசொல்லிக்காண்; அணியின் ஆர்—அழகு மிக்கிருப்பதாய், செம்பொன் ஆய—செம்பொன்னுலாகிய, அருவரை அனைய—அருமையான மஹாமேருவைபொத்த, கோயில்—திருவரங்கத்திலே, மணியனார்—நீலமணியைபொத்த அழகியமணவாளன், கிடந்த ஆற்றை—கண்வளர்ந்தருளுகிற ப்ரகாரத்தை, மனத்தினல்—மனஸ்ஸினலே, நினைக்கலாமே—பரிச்சேதித்தறியலாமோ வென்கிறர்.

வ்யா. பணிவினல் மனமொன்றி. பணிவதாகவொருப்பட்டு; இதரவிஷயங்களில் நின்றும் இவ்விஷயத்திலே மனஸ்ஸைப் பணிவதாகவொன்றி. ஒன்றுகை — ஒருப்படுகை. இதரவிஷயங்களிலே போகிற நெஞ்சை அவற்றினின்றும்மீட்டு ப்ராப்தவிஷயத்திலேப்ரவணமாக்குமோ வென்னும் உத்யோகமாத்ரமேயாய்த்து இவ்விஷயத்துக்கு வேண்டுவது. இங்கு மனஸ்ஸென்கிறது - மனோவ்ருத்தியை. பகவத்வ்யதிரிக்த விஷயங்களில் பணிவுதானுண்டாகிலும் இரங்குகை பாக்ஷிகம்; இரக்கமுண்டானுலும் பலிப்பதில்லை. பகவத்விஷயத்தில் (க) "न नमेयम्" என்கிற ப்ரதிஜ்ஞைகுலையும்மாத்ரமே யமையும்; சேதனனுடைய ஆபிமுக்யத்துக்காக ஸ்ருஷ்ட்யவதாரங்களைப் பண்ணிப்போந்த ஈச்வரனுக்கு விஷயீகார ஸம்கதிமாத்ரமே யமையும். ப்ராணமர் தன்னைப் பண்ணினுலும் அதுவன்றே பலப்ரதம், ஈச்வரனுடைய இரக்கமிறே. இவன்பண்ணுகிற வ்யாபாரங்கள் அங்கு பலிப்பதொன் றின்றியேயிருக்க, அவனுடைய இரக்கத்துக்கு ஹேதுவானபடி யென்னென்னில்; ஒருத்தனை யொருவன் கைபோங்குவது எதிரிஸ்பர்சிப்பதொன்றின்றியே யிருக்க உள்ளதனையும் என்னைப் பரிபவித்தானென்றிருக்கைக்கு ஹேதுவாகாநின்றதிறே; இவ்வோபாதி அஞ்ஜலியும் எல்லாவற்றையும் கொடுத்து, பின்னையும் (உ) "न जातु हीयते" என்னும்படி ப்ரியவிஷயமாயிறே இருப்பது. (ங) "एकोऽपि कृष्णे सुकृतः प्रणामः" (ச) "अञ्जलिः परमा मुद्रा क्षिप्रं देवप्रसादिनी."

பவளவாயரங்கனர்க்கு. இவ்வளவாநுகூல்ய முடையாரை முன்புத்தையிழவுக்கு ஸாந்த்வநம்பண்ணும் திருவதரத்தை யுடையவர்க்கு. அரங்கனர்க்கு. எப்போதோ நம்மைக்கிட்டுவதென்று நித்யஸந்நிஹிதரா யிருக்கிறவர்க்கு. துணிவினல் வாழமாட்டா. வடிவழகுதான் பணிவையு முண்டாக்கித் துணிவையு முண்டாக்கி, பின்னை அநுபவத்திலே மூட்டிவிடுமோய்த்து. பவளவாயரங்கனர்க்கு — பணிவினல் மனமொன்றி— துணிவினல் வாழமாட்டா. இவ்விஷயத்தை அநுபவிக்கைக்கு வ்யவஸாயமேயாய்த்து வேண்டுவது. (ரு) "व्यवसायादृते ब्रह्मन् नासादयति तत्परम्" என்று-ப்ராப்திக்குக் கண்ணழிவற்ற ஸாதநம் வ்யவஸாயமாமென்று உபதேசித்தானுய்த்து — தன்

(க) "நமேயம்" (உ) "நஜாதுஹீயதே" (ங) "ஏகோபிக்ருஷ்ணேஸுக்ருதப்ரணாமஃ" (ச) "அஞ்ஜலிஃபரமாமுத்ராக்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ." (ரு) "வ்யவஸாயாத்ருதே ப்ரஹ்மந்நாஸாதயதி தத்பரம்"

ஆசார்யனுன வேதவ்யாஸனின் காட்டில் புருஷார்த்தஸாதநத்திலே தெளிவுடைய ஜநகன். நோல்லேநெஞ்சே. ஓரத்யவஸாயமாத்ரத்தாலே இவ்விஷயத்தை அநுபவிக்க டாத இவ்விஷயு, நெஞ்சே! உனக்கு அராதிபிரே. நீ சோல்லாய். இவ்விஷயத்தைப் பரிச்சேதித்தநுபவிக்கலாமென்று நீதான் சொல்லிக்காணாய். அணியிக்பாதி. அழகுமிக்கிருப்பாய், செம்பொன்ஞன அருவரையுருண்டு—மஹாமேரு, அத்தோடொத்திருந்தாள்ளகோ லம்லாரத்துக்கு ஆபரணமாய்தர்சநீயமாய்ஸ்திரமாய் ஸர்வாதாரமாயிருக்கை.மணியனுர்த்தவாற்றை. அம்மேருவைப்புடைபடத்தூளைத்து அநுவிப்பும்படி ஒரு நீலரத்னத்தைத் திறுப்போலே யாய்த்தாங் கோயிலாழ்வார்க்குள்ளே பெரியபெருமாள்கண்வளர்ந்தருளு படி. கிடந்தவாற்றை மனத்திருல்நினைக்கலாமே. கண்வளர்ந்தருளுகிற அழகைக்கண்டு நெஞ்சாலே பரிச்சேதிக்கலாம்படி யிருந்ததோ. ஸ்வரூபத்தைப் பரிச்சேதிக்கிலும், தமயமான கல்யாணகுணங்களைப் பரிச்சேதிக்கிலும், வடிவழகைப்பரிச்சேதிக்கவொண் ணுதென்கை. நினைவுக்கு பரிகரமானத்தையொழிய வேறேயொருகாரணத்தாலே நினை நினைக்கு மித்தனைகாணும். ... ... ... ... ...

அ. இருபத்திரண்டாம்பாட்டு. பேசிற்றே. நினைக்கவொண்ணதாகில் வாய்விட்டுப் பேசினுலோவென்ன; * (க) "ந்நப்யேவ வாசா" அன்றோ, மனஸ்ஸாலே பரிச்சேதிக்கவொண்ணுதவிஷயத்தைப் பாசுரமிட்டுமுடிக்கப்போமோ? பேசலாமென்று அறிவுகெட்டநெஞ்சே! சொல்லாயென்கிறார்.

மூ.—பேசிற்றே பேசலல்லால் பெருமையோன் றுணரலாகாது
ஆசற்றார் தங்கட்கல்லா லறியலாவானு மல்லன்
மாசற்றார் மனத்துளானை வணங்கிநா மிருப்பதல்லால்
பேசத்தா னவதுண்டோ பேதைநெஞ்சே நீசோல்லாய். ௨௨.

—பதா.—பேதை நெஞ்சே—அறிவில்லாதநெஞ்சே; பேசிற்று—வேதங்களும் வைதிக புருஷர்களும் பேசிப்போந்தவற்றை, பேசல் அல்லால்—சொல்லுமித்தனையொழிய, பெருமை—ஸர்வேச்வரனுடைய ஸ்வரூபகுண விக்ரஹவிபூதிகளிலே, ஒன்று—ஏகதேசமும், உணரலாகாது—அறியக்கூடாது; ஆசு அற்றார் தங்கட்கு அல்லால்—உபாயாந்தரமாகிற குற்றமற்றவர்களுக்கல்லது, அறியலாவானும் அல்லன்—அறியக்கூடாதவனுயிராநின்றான்; (ஆகையால்) மாசு அற்றார் மனத்து உளானை—தன்பக்கலிலே ஸர்வபரந்யாஸம் பண்ணியிருக்குமவர்களுடைய நெஞ்சிலே நித்யவாஸம்பண்ணுகிறவனை, நாம்—அவன் பக்கலிலேஸர்வபரந்யாஸம் பண்ணினநாம், வணங்கி—அநுபவித்து, இருப்பது அல்லால்—தரித்திருக்குமதொழிய, (அவனுடைய பெருமையை அநுஸந்தித்தால்,) பேசத்தான் ஆவது உண்டோ—பாசுரமிட்டுப்பேசத்தான் கூடுமோ? நீ சொல்லாய்—சாபலப்பண்ணுகிற நீயேசொல்லிக்காணென்கிறார்.

வ்யா. உக்தி ப்ராக்ர்த விஷயங்களைப் பேசுகிறதில்லையோவென்ன; அவை பரிச்சிந்நமாகையாலே; இது அபரிச்சிந்நமாகையாலே பேசவொண்ணுது. (உ) "வாஜீஹாட்டிம்மௌளதி" என்கிறவிஷயத்தைக் கைவாங்கியிருக்கு மத்தனையேயென்னில்; பேசிற்றே பேசலல்லால். முன்புவேதங்கள் வைதிகபுருஷர்கள் பேசிப்போந்தவை தன்னையே சொ

(க) "* மநஸ்பூர்வோவாகுத்தர:" (௩) "வாஜீஹ்வா யா ஹரிம்ஸ்தௌதி"

னுமானித்தனைபோக்கி இவ்விஷயத்துக்கு ஸத்ருசமாக ஒரு பதார்த்தமிட்டுப் பேசித்தலைக்கட்ட வொண்ணாது. பேசிப்போந்தவைதா னெங்ஙனேயென்னில்; (௧) "நீலதோயத மத்யஸ்தா வித்யுல்லேகேவ" "நீலமுண்டமின்னன்னமேனி" (௨) "அதஸீபுஷ்பஸங்காசம்" (௩) "ஹிரண்மய: புருஷோத்ருச்யதே" (௪) "ருக்மாபம்" "சுட்டுரைத்த நன்பொன்னுன் திருமேனியொளியொவ்வாது" இத்யாதி. இந்தப்ராக்ருதபதார்த்தங்கள் அப்ராக்ருதவஸ்துவுக்கு விஸத்ருசமிறே. இதுதன்னைக்கொண்டிப்படி சொன்னனென்னில்; அதீந்த்ரியவிஷயத்தை விழியும்போது ஒரு நிதர்சநத்தைக் கொண்டிழிய வேண்டுகையாலே சொன்னவித்தனையொழிய உள்ளபடி. சொல்லிற்றாய்த் தலைக்கட்ட வொண்ணாது. வேதங்கள் பேசினபடியே பேசுமத்தனையல்லது நம்மால் பேசிமுடியாது. அவை பேசினபடி யென்னென்னில்;— (௫) "[illegible]" என்று பேசினவித்தனை. அப்படியே பேசவொண்ணாது என்று பேசுமத்தனை என்றுமாம். அதுக்கடி யென்னென்னில்; பெருமையொன்றுணரலாகாது. இன்னதுபோலேயென்று ஸத்ருசத்ருஷ்டாந்தமுண்டாதல், ஏவம்பூதமென்று பரிச்சேதித்தல் செய்யவொண்ணாது. இதரவிஷயங்களில் வந்தால் உபமாநத்தளவும் உபமேயம் வாராட்டாது; இவ்விஷயத்திலே உபமேயத்தளவு முபமாநம்வாராமாட்டாது; ஸ்வரூபமென்ன, குணங்களென்ன, விக்ரஹமென்ன, விபூதியென்ன, இவற்றிலொன்றையும் பரிச்சேதிக்கவொண்ணாதென்கை. ஆனால் இவ்வஸ்து ஒருவர்க்குமறிய வொண்ணாதோ வென்னில்; ஆசற்றார்தங்கட்கல்லாலறிய லாவானுமல்லன். ஆசு – குற்றம்.

இனி இத்தை விஷய விபாகம்பண்ணிக் கொள்ளுமித்தனை. ஆசாவது — உபாயவிஷயமாக வரும் குற்றம். அதாகிறது — பாரதந்த்ர்யத்துக்குச் சேராதவை. அஹங்கார கர்ப்பமான அசேதநக்ரியாகலாபங்களை ஸாதநமாக நினைத்திருக்கை. இதரோபாயங்கள் பலப்ரதமாமிடத்தில் அவனுடைய அநுக்ரஹம் பார்த்திருக்கவேணும்; தான் உபாயமாமிடத்தில் ஸஹாயாந்தராபேக்ஷையில்லை; இதரோபாயங்களை விட்டுத் தன்னையே உபாயமாகப்பற்றினார்க்கல்லது தன்னை உள்ளபடி அறியலாயிருப்பானொருவனல்லன்.

மாசற்றார். இதுவுமொரு மாஸதோஷமாயிற்று; அதாகிறது - ப்ராப்யபாஸங்களிலே ப்ராப்ய புத்தியைப்பண்ணியிருக்கை. அவன்றன்னைப்பற்றி ஐச்வர்யாதிகளை லபித்துப் போகாநிற்பார்கள். அங்ஙனன்றியே அவன்றன்னையே பெறவேணுமென்றிருக்கை—ஆசறுகையாவது. மனத்துள்ளானை. இப்படி எல்லாவற்றையும்விட்டு ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வகமாக ஒருதேசவிசேஷத்திலே நித்யாநுபவம் பண்ணவேணுமென்று தன்பக்கலிலே ஸர்வபரந்யாஸம் பண்ணியிருக்குமவர்களுடைய நெஞ்சிலே நித்யவாஸம்பண்ணுமவன். இவர்கள் நெஞ்சுக்குப்புறம்பு, காட்டுத் தீயோபாதியாக வாய்த்து நினைத்திருப்பது. ஜலசரபதார்த்தங்கள் ஜலத்தையொழிய தரிக்கமாட்டாதாப்போலே இவர்கள் நெஞ்சொழிந்த விடத்தில் தரிக்கமாட்டானாய்த்து. திருப்பதிகளில் நித்யவாஸம் பண்ணுகிறதும் ஒருசுத்தஸ்வபாவனுடைய ஹ்ருதயத்தைக்கணிசித்திறே. "என்னிலாதமுன்னெலாம்" என்னக்கடவதிறே.

(௧) "நீலதோயதமத்யஸ்தாவித்யுல்லேகேவ" (௨) "அதஸீபுஷ்பஸங்காசம்" (௩) "ஹிரண்மய: புருஷோத்ருச்யதே" (௪) "ருக்மாபம்" (௫) "அப்ராப்ய"

வணங்காமிருப்பதல்லால். ஆச்ரிதர் நெஞ்சைவிட்டுப் போகாதவனானபின்பு, அவன்பக்கலிலே ஸர்வப்ரகாரபரிபூர்ணனான நாம், அவனை அநுபவித்து தரிக்குமதொழிய வேறு க்ருத்யமுண்டோ வென்கிறார். வணக்கமென்று - ஸர்வப்ரகாராநுபவத்துக்கு முபலக்ஷணம். பேசத்தானுவதுண்டோ. அவன் பெருமையை அநுஸந்தித்தால் பாசுரமிட்டுப் பேசலாயிருந்ததோ. பேதைநெஞ்சே. க்ஷேத்ரவிஷயங்களைப் பேசிப்போந்த வாஸனையாலே இவ்விஷயத்தையும் உன்மத்திகட்டாமே பேசலாமென்றிருக்கிறாயிறே. நீ சொல்லாய். என்வார்த்தையொழிய இவ்விஷய ஸ்வபாவமிருந்தபடியாலே பரிசேதித்துப் பேசலாயிருந்ததோ, சாபலப்படுகிற நீதான் சொல்லிக் காணென்கிறார். ... ... ௨௨.

அ. இருபத்துமூன்றும்பாட்டு. கங்கையில். நினைக்கவும் பேசவுமொண்ணுதாகில் இவ்விஷயத்தை விஸ்மரித்து தரித்தாலோவென்ன; பெரியபெருமாளுடைய கிடையழகிலே அதிசபலனான நான் விஸ்மரித்து எங்ஙனே தரிப்பேனென்கிறார்.

மூ.—கங்கையிற் புனிதமாய காவிரி நடுவுபாட்டுப்
பொங்குநீர் பரந்துபாயும் பூம்பொழி லரங்கந்தன்னுள்
எங்கண்மா லிறைவனீசன் கிடந்ததோர் கிடக்கைகண்டும்
எங்ஙன மறந்துவாழ்கே னேழையே னேழையேனே. ௨௩.

ப-ரை. கங்கையில்—கங்காநதியிற் காட்டிலும், புனிதமாய—பரிசுத்தமான, காவிரி நடுவுபாட்டு—திருக்காவேரியின்நடுவில், பொங்கு—பெரியகிளர்த்தியோடே வாராநிற்கிற, நீர்—வெள்ளமானது, பரந்து பாயும்—பலமடைகளிலேபரந்து பாயாநிற்பதாய், (அத்தாலே,) பூ—புஷ்பித்திருந்துள்ள, பொழில்—சோலைகளாலே சூழப்பட்ட, அரங்கம் தன்னுள்—கோயிலிலேயெழுந்தருளியிருக்கிற, எங்கள்—ஆச்ரிதரான எங்கள் பக்கல், மால்—வ்யாமுக்தனாய், இறைவன்—ஸர்வஸ்வாமியாய், ஈசன்—நியாமகனான அழகியமணவாளன், கிடந்தது—கண்வளர்ந்தருளுகிற, ஓர் கிடக்கை—அத்விதீயமான சயநத்தை, கண்டும்—கண்டநுபவிக்கப் பெற்றபின்பும், ஏழையேன் ஏழையேன்—அதிசபலனான நான், எங்ஙனம்—எந்தப்ரகாரத்தாலே, மறந்து—மறந்துநின்று, வாழ்கேன்—ஜீவித்திருக்கப் புகுகிறேன்.

வ்யா. கங்கையில்புனிதமாயகாவிரி. கங்கையில்காட்டிலும் பாவநமான காவேரி. தீர்த்தயதையாலும் போக்யதையாலு முண்டான ஏற்றமொழிய, (வேறு) பாவநத்வத்தாலும் ஏற்றத்தையுடைத்தாயசைத்துக் காவேரியிருப்பது. (✽) "[illegible]" கங்கைக்கு ஒருநாளிலே திருவடிகளோட்டை ஸ்பர்சத்தால் வந்தசுத்தியோகமிறேயுள்ளது, (க) "[illegible]" என்கிறபடியே—தன்னுடைய அசுத்தி போக்குகைக்காக ருத்ரன் சிரஸா தரிக்கையாலே சௌசமென்று சொல்லுவதொரு குற்றமுண்டு; அவனோட்டை ஸ்பர்சமுள்ளதொரு பதார்த்தங்கள் நிர்மால்யமென்று த்யாஜ்யமான சைவர்க்கும் அஸ்பர்ச்யமாயிறே யிருப்பது. அப்படி அடியுடையளானாலும் தன்னுடை பாவநத்வத்துக்கு மாறுபாடுண்டாய்த்து. ✽ ஆறுபொதிசடையோனிறே.

(க) "கங்காஸாம்யம்ப்ராப்தா தேவதேவப்ரஸாதநாத் । ஸங்காவதாணுர்த்த்வம் ஆநிந்த்ஞ்சாப்யவாபஸா"

ஆகையாலே சிக்கு நாற்றமும் மயிர்பாடுமுண்டே; அதில்லாதபடியாலும் பெரியபெருமாள் நடுவே பள்ளிகொள்ளுகையாலும் புனிதமிறே. ஆயிருக்கச் செய்தேயும் திருவடிகளோட்டை ஸ்பர்சத்தாலே எங்கேனும் புகினும் பாவநத்வம் மேற்பட்டிருக்குமாய்த்து. "உன்றனடிசேர்ந்தருள் பெற்றாளன்றே" என்னக்கடவதிறே. அப்படிப்பட்ட திருவடிகளையுடையவன் தானேவந்து படுகாடுகிடக்கிற ஏற்றமுண்டிறே காவேரிக்கு. நடுவுபாட்டு. நடுவிடத்து. யசோதைப்பிராட்டி மடியிலே சாய்ந்தாப்போலேயாய்த்துக் காவிரியின் நடுவே கண்வளர்ந்தருளுகிறபடி.

பொங்குநீர்பரந்து பாயும்பூம்பொழிலரங்கந்தன்னுள். ஜலஸம்ருத்தியாலே கோயிலைக்கிட்டுகிறோமென்கிற ப்ரீதிப்ரகர்ஷத்தாலே பெரியகிளர்த்தியோடே வாராநிற்கும். பரந்துபாயும். ஒருமடையாலன்றியே தன்திறம்தேசமெல்லாந்தோற்ற எங்குமொக்கப் பாயாநிற்கும். பூம்பொழில் அரங்கந்தன்னுள். ஜலஸம்ருத்தியாலே பொழில்களும் பூமாறாதே செல்லுமாய்த்து. பெரியபெருமாளுடைய ஸௌகுமார்யத்துக்கு அநுகூலமான ஜலஸம்ருத்தியையும் நித்யவஸந்தமான பொழிலையுமுடைய ச்ரமஹரமான தேசம். இத்தால் - கோயிலினுடைய பாவநத்வமும் போக்யதையும் சொல்லிற்றாய்த்து.

எங்கள்மால். ஆச்ரிதர் பக்கல் வ்யாமோஹம் ஒருவடிவுகொண்டாப்போலேயிருக்கை. "எங்கள்" என்று - தம்மைப்போலே பெரியபெருமாள் பக்கலிலே ந்யஸ்தபரராயிருப்பாரையும் கூட்டிக்கொள்ளுகிறார். கோயிலின் பாவநத்வபோக்யத்வங்களைக் கண்டு சாய்ந்தருளிற்றென்று போராய், நிரூபித்தால் ஆச்ரிதவ்யாமோஹமேஹேதுவாய். ஸம்பந்தமின்றிக்கேயிருக்கையன்றியே இறைவன். இவற்றையுடையனாயிருக்கை. ஈசன். உடையவனானாலும் நியமிக்க சக்தனன்றிக்கேயிருக்கையன்றியே நல்வழி போக்குகைக்கும் க்ஷமனாயிருக்கை. ஸித்தனுப் ப்ராப்தனுப் சக்தனாயிருக்குமவனென்கை. குணத்ரயவச்யதையைத் தவிர்த்து, நித்யாநுபவம்பண்ணும் தேசத்தேறக்கொடுபோக நினைத்து, வாத்ஸல்யப்ரேரிதனாய்வந்து தன்னுடைமையைத் தன்கருத்திலே நடத்துகைக்காகக்கிடக்கிறபடி.

கிடந்ததோர்கிடக்கை. கீழ்ச்சொன்ன ஆத்மகுணங்களை விஸ்மரித்துக் கிடையழகிலே அகப்பட்டபடி. நிற்றல் இருத்தல் செய்தானாகில் மறக்கலாய்த்திறே. நாட்டில் அழகியராயிருப்பார்க்கு நிற்றல் இருத்தல் செய்தபோது அழகுதோற்றி, சாய்ந்தால் தோற்றுவது வைரூப்யமேயாயிருக்கும்; இவ்விஷயத்தில் சாய்ந்தபோதாய்த்து அழகு மிகுந்திருப்பது. (௧) "ஸ்ரீரங்கஸயனஸ்வபோஹவ:" என்னக்கடவதிறே. ஓர்கிடக்கை. ஒருக்கணித்தோ மல்லாந்தோ கண்வளர்ந்தருளுகிறதென்று தெரியாதிருக்கும். இவர்கள்தான், நின்றாகில் "நிலையார நின்றான்" என்பர்கள்; இருக்கக்கண்டால், "பிரானிருந்தமைகாட்டினீர்" என்பர்கள்; சாயக்கண்டால், "கிடந்ததோர் கிடக்கை" என்பர்கள்.

கண்டுமெங்கனம் மறந்துவாழ்கேன். இவ்விஷயத்தைக்கண்டநுபவிப்பதற்கு முன்பாகில் மறக்கவுமாம், கண்டநுபவித்தபின்பு இனித்தானெந்த ப்ரகாரத்தாலே மறப்பது. வாழ்கேன். இவ்விஷயத்தை விட்டுப்போய் மணலை முக்கவோ. அநுபவித்தால் மறக்கவொண்ணாது; மறந்தால் புறம்புதரிக்கவொண்ணாது. ஏழையேனேழையேனே. நானோ அத்யந்த

(௧) "ஸ்ரீமாந் ஸுகஸுப்தபரந்தப:"

சபலனுப், கிட்டினு லநுபவிக்க மாட்டேன்; பிரிந்தால் தரிக்கமாட்டேன். ஏழையேன் ஏழையேனே. முன்பு இதரவிஷயங்களிலே அகப்பட்டு சிதிலராயிருப்பர்; இப்போது பக வத்விஷயத்திலே அகப்பட்டு புறம்பு கால்வாங்கமாட்டாதே யிருப்பர்; அதுகர்மத்தாலே வந்த சைதில்யம்; இது விஷய வைலக்ஷண்யத்தாலே வந்த சைதில்யம். ... ... உ௩.

அ. இருபத்துநான்காம்பாட்டு. வெள்ளநீர். "மனத்தினுல் நினைக்கலாமே" என்றும், "பேசத்தானுவதுண்டோ" என்றும், "எங்ஙனம்மறந்துவாழ்கேன்" என்றும், இவர் மறக்கப்புக்கவாறே இவரை நினைப்பிக்கைக்காக இவர்பக்கல் தமக்குண்டான ப்ரேமத்தைக் காட்டக்கண்டு, இவ்விஷயத்தில் நமக்குண்டான ப்ரேமம் அஸத்ஸமமாயிருந்ததியென்றும், இன்னமும் இவ்விஷயத்தினுடைய வைலக்ஷண்யத்தை அநுஸந்தித்துத் தமக்குப் பிறந்தபக்தி விஷயாநுரூபமாகப் போராமையாலும், அசித்ஸம்ஸ்ருஷ்டனுக்குப்பிறந்தப்ரேமம் பித்தோபஹதனுக்குப் பிறந்த தெளிவுபோலே விச்வஸிக்க வொண்ணாமையாலும் அநுதபித்து, திருவுள்ளத்தைக்குறித்து, உனக்கு இதரவிஷயத்தோபாதி இவ்விஷயத்திலும் க்ருத்ரிம ஸ்நேஹமாய் விட்டதாகாதே! என்று திருவுள்ளத்தை நிந்திக்கிறார்.

மூ.—வெள்ளநீர் பரந்துபாயும் விரிபொழி லரங்கந்தன்னுள்
கள்வனார் கிடந்தவாறுங் கமலநன்முகமுங் கண்டும்
உள்ளமே வலியைபோலு மொருவனென் றுணரமாட்டாய்
கள்ளமே காதல்செய்துன் கள்ளத்தே கழிக்கின்றாயே. உச.

ப-ரை.—வெள்ளம்—பெரியப்ரவாஹத்தையுடைய, நீர்—காவேரியானது, நாற்புறத்திலும்பாவி, பாயும்—பாய்கையாலே, விரி—விஸ்த்ருதமான, பொழில்—சோலைகளாலே சூழப்பட்ட, அரங்கம்தன்னுள்—கோயிலிலே, கள்வனார்—ஆச்ரிதர்ஸ்வாதந்த்ர்யத்தை அபஹரிக்குமவனான அழகியமணவாளன், கிடந்த ஆறும்—பள்ளிகொள்ளும் ப்ரகாரத்தையும், கமலம்—தாமரைமலர்போலே, நல்—விலக்ஷணமான, முகமும்—திருமுகமண்டலத்தையும், கண்டும்—கண்டநுபவிக்கப்பெற்றும், உள்ளமே—மநஸ்ஸே,! வலியைபோலும்—நீகடிநமாயிராநின்றாய்; ஒருவன் என்று—அவன் அத்விதீயனென்று, உணரமாட்டாய்—அறியமாட்டுகிறிலை; (இவ்விஷயத்தில்,) கள்ளமே காதல்செய்து—க்ருத்ரிமமாக பக்தி பண்ணி, உன் கள்ளத்தே—உன்னுடைய க்ருத்ரிமச்செய்கையிலேயே, கழிக்கின்றாய்—காலத்தைக் கழியாநின்றாயென்கிறார்.

வ்யா. வெள்ளநீர் பரந்துபாயும். காவேரி ஸஹ்யமே தொடங்கிக் கோயிலை நோக்கி வருகிறதாகையாலே தன் அபிநிவேசமெல்லாம் தோற்றும்படி பெருவெள்ளமாக நீரை கொடுவந்து சிலர்க்குக் குலைசெய்து தகையவொண்ணாதபடி ஸர்வதோதிக்கமாகப் பாயாநிற்கும். அபிநிவேசம் முடியாமையாலே பாய்ந்து தலைக்கட்டாது. விரிபொழிலரங்கம். நீர் பாய்ந்த பரப்படங்கலும் சோலையும் விரிந்து வாராநிற்கும்.

அரங்கந்தன்னுள்கள்வனார். பரமபதத்தில் அக்ருத்ரிமரான நித்யஸூரிகளோட்டை பரிமாற்றத்துக்குச் செவ்வை பரிகரமானுப்போலே, க்ருத்ரிமரான ஸம்ஸாரிகளை வசீகரிக்கைக்கு சௌர்யம் பரிகரமாக வாய்த்துக் கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது. நீர்வாய்ப்பும் சோலைவாய்ப்பும்கண்டு சாய்ந்தானென்கிறது வ்யாஜமாய், ஸம்ஸாரிகளுடைய வசீகரண

திலே நினைவாயாய்த்திருப்பது. நிலவரும்சென்றுபுக்கால் முற்பட சௌ(வௌ)ர்யகந்தியாயாய்த்தாத் திருமுகமிருப்பது. அதாகிறது-ஒரு உபாதியாலே தம்மைவந்து கிட்டினருடைய ஆத்மவஸ்துவை யபஹரித்து சட்டைப் புரைக்குள்ளே யிட்டுக்கொள்வரென்று தோற்றியிருக்கும். அதாகிறது - தமக்கு அந்தரங்கமாக்கிக் கொள்ளுகை. இன்னமுந்தான் ஆத்மவஸ்துவைத் தன்னதாக அபிமானித்துப்போந்தான், நாம் இவன் அபிமானித்த அத்தை மீட்போம் என்று பார்த்துத் தம்மழகைக்காட்டி, (க) "ஜிதனெ" என்னப் பண்ணுமவராய்த்து. அவனதான வஸ்துவை இவன் நெடுநாள்பட அபஹரித்துப் போந்தபடி. தன்னத்தைத் தானே கொள்ளுகை அபஹாரமாம்படியிறே சேதநனுடைய ஆத்மாபஹாரம் காழ்ப்பேறினபடி. ஆத்மஸமர்ப்பணமும் ஆத்மாபஹாரமிறே யென்னும்படியான இவ்வஸ்துவிறே இப்படி எளிவரவு பட்டது. ஆத்மஸமர்ப்பண மாகிறதுதான் மஹாபலிதானம்போலே யிருப்பதொன்றிறே.

கிடந்தவாறும். வசிகரணபரிகரந்தானும் சீலாதிகளான ஆத்மகுணங்களுமல்ல, அவயவ சோபையான ரூபகுணங்களுமல்ல, "கிடந்ததோர் கிடக்கை" என்னும் கிடையழகாய்த்து. கமலநன்முகமும். விகாஸம் செவ்வி குளிர்த்தி பரிமளம் என்றுப்போலே சொல்லுகிறவற்றைப்பற்றத் திருமுகத்துக்குத் தாமரையையொரு போலியாகச்சொல்லுமித்தனை போக்கி, ஸர்வதா ஸத்ர்சமல்லாமையாலே "நன்முகமும்" என்கிறார். சுத்தஸத்வமாய்ஜ்யோதிர்மயமான முகத்துக்கு ப்ராக்ர்தவஸ்து ஸத்ர்சமாகவற்றோ; ஆச்ரிதவிஷயத்தில் என்றுமொக்கக் குவியாத முகத்துக்கு த்ர்ஷ்டாந்தமுண்டோ; ஸம்ஸாரத்துக்குள் குளிர்ந்தமுகம் இதொன்றுமே யென்கிறார். கண்டுமுள்ளமே வலியையபோலும். கண்வளர்ந்தருளுகிற அழகைக் கண்டுவைத்தும் நெஞ்சே! ஒருவிகாரம் பிறவாதே திண்ணிதாயிருந்தாயீ!. கீழ்ப்பிறந்த விகாரமெல்லாம் விஷய வைலக்ஷண்யத்தைப்பற்ற அஸத்ஸமமா யிருக்கிறதாய்த்து இவர்க்கு.

இப்போது எனக்குவந்த வன்மை யென்னென்ன; ஒருவனென்றுணரமாட்டாய். அத்விதீயனென்று உணரமாட்டுகிறிலை. ஒருவனென்று உணரப்புக்கால் அவனை யுள்ளபடியுணரவேணும், அப்படி யுணர்ந்தால் அத்தலையில் வாத்ஸல்யத்துக்கு ஸத்ர்சமாகவும் விஷய வைலக்ஷண்யத்துக்கு ஸத்ர்சமாகவும் விடாய்பிறக்கவேணும், அது பிறவாமையாலே "வலியை" என்கிறார்.

இப்படியாகில், கீழ், "கண்ணிணைகளிக்குமாறே" என்றும் "பனியரும்புதிருமாலோ" என்றும், "உடலெனக்குருகுமாலோ" என்றும் சொல்லிப் போந்தவையெல்லாம் என்னாய்த்தென்னில்; கள்ளமேகாதல்செய்து. உனக்கு ப்ரக்ர்திவிஷயத்தில் பண்ணிப்போந்தவாஸனை இங்குமநுவர்த்தித்துப்போந்த வித்தனையொழிய இவ்விஷயத்துக்கு ஸத்ர்சமாக ஸ்நேஹித்தாயல்லையே. விஷயாந்தரங்களில் பண்ணிப்போந்ததும் பலபக்தி (ஸஹஜ ஸ்தி) யாகையாலே இங்கும் பலபக்திபண்ணிற்று. உன்கள்ளத்தே கழிக்கின்றுயே. இந்த க்ர்த்ரிமபக்தியானது பண்டே யுன்பாழியிறே, இங்கும் அதுதன்னையே முடிய நடத்தின யித்தனையிறே. விஷயாந்தரங்களோபாதியாக இது தன்னையும் நினைத்தாயித்தனை போக்கி இவ்விஷயத்துக்கநுரூபமன்றிறே உன்னுடைய ப்ரேமம் என்கிறார். ... ... உச.

(க) "ஜிதந்தே"

அ. இருபத்தைந்தாம்பாட்டு. குளித்து. கீழ்-பகவத்விஷயத்தில் தமக்குப்பிறந்த ஆநுரு விஷயாநுரூபமாகப் போராமையாலும், அசித்ஸம்ஸர்க்கயுக்தனுக்குப் பிறந்ததாகையாலே பி தாபஹதனுக்குப் பிறந்ததெளிவுபோலே விச்வஸிக்கவொண்ணாமையாலும், என்செய்தே மென்று திருவுள்ளத்தைக்குறித்து அநுதபித்தாராய்நின்றார் ; இனி அசித்ஸம்ஸர்க்கமற்ற ருதேசவிசேஷத்திலே நித்யாநுபவம் பண்ணுகைக்கு நம் கையில் முதல் காண்கிறிலோம் ம் விஷயத்தை யிழந்தேபோ மித்தனையாகாதே! என்று சோகிக்க; நீர்சோகிக்கிறதென் அசித்ஸம்ஸர்க்கமற்று நம்மைப் பெறுகைக்கு சாஸ்த்ரங்களிலே த்ரைவர்ணிகாதிகாரமாயுப் ர்வாதிகாரமாயு முண்டான ஸாதநங்கள் ப்ரஸித்தமன்றோ, அவற்றிலேயொன்றை யநு த்துநம்மைக்கிட்டமாட்டீரோவென்ன; எனக்கு அவையொன்றிலும் யோக்யதையே ந்தி யில்லையென்று மேல் பத்துப்பாட்டாலே தம்முடைய உபாயஶூந்யதையை யருளி செய்கிறார். ஆனால் பின்னை, கீழ் இவர்க்குப் பிறந்ததாகச்சொன்ன ஜ்ஞாநபக்திகள் எ என்புதாய்த் தென்னில்; பகவத்ப்ரஸாதத்தாலே பிறந்தபோகோபகரணமான ஜ்ஞாநபக் ளாய்த்து-அங்குச்சொல்லிற்று; அவை ஸாதநகோடியில் அந்தர்ப்பவியாது, அவ்வநுபவ ர்தாசித்தமன்றிக்கே நித்யமாகைக்குத் தம்கையில் ஸாதநமில்லையென்கிறார்-இங்கு. இதி முதற்பாட்டில் - ப்ரஸித்தமாய் த்ரைவர்ணிகரானவர்களுக்கு அதிகாரமான ஜ்ஞாநபக்திகள் ஸக்கோரக்யமில்லையென்கிறார்.

மூ.—குளித்துமூன் றனலையோம்புங் குறிகொ ளந்தணமைதன்னை
ஒளித்திட்டே னென்கணில்லை நின்கணும் பத்தனல்லேன்
களிப்பதென் கொண்டுநம்பி கடல்வண்ணா கதறுகின்றேன்
அளித்தெனக் கருள்செய்கண்டா யரங்கமா நகருளானே. உ௫.

ப-ரை.—குளித்து-நித்யஸ்நாநம் முதலான ஸ்நாநங்களைப்பண்ணி, மூன்று அனலை கார்ஹபத்யம் ஆஹவநீயம் தக்ஷிணாக்நியாகிற மூன்றக்நிகளை, ஓம்பும்—ஆதரித்துப்போ ராய், குறிகொள்—மந்த்ரலோபாதிகள் வாராமேகாக்கவேண்டிய, அந்தணமைதன்னை-ட் ரஹ்மண்யத்தை, ஒளித்திட்டேன்—பாழேபோக்கினேன் ; என்கண் இல்லை-என் விஷயப ஸக்கொண்டுமில்லை ; நின்கணும்—உன்விஷயத்திலும், பத்தன் அல்லேன்—ஸ்நேஹமு ஸாதயனாநின்றேன்: (இப்படியிருக்க,) என்கொண்டு களிப்பது- நான்காத்தைக்கொ களிப்பது: நம்பி-பிலாதிகுணபரிபூர்ணராய், கடல்வண்ணா-கடல்போலே குளுத்ததிறத்தை டையனாய், அரங்கம் மாநகர் உள்ளானே - கோயிலிலே நித்யவாஸம் பண்ணுமவனே, கத றேன் - கர்ணகடோரமாகக் கூப்பிடாநின்றேன்; எனக்கு- என்னை, அளித்து- உன் க்ருபை விஷயமாக்கி, அருள்செய் கண்டாய்—க்ருபையும் செய்தருளவேணுங்கிடாயென்கிறார்

வ்யா. குளித்துமூன்றித்யாதி. ஜந்மமாத்ரத்தையே கொண்டு நீ அவற்றை யநு டித்தா வாவென்னிலென்னு மித்தனைபோக்கி,ஜந்மப்ரயுக்தமான ப்ராஹ்மண்யத்துக்கு அநுரூ ப நுஷ்டாநமில்லையென்கிறார். குளித்து.நித்யஸ்நாநம், நைமித்திகஸ்நாநம்,ப் நித்த ஸ்நாநமென்று ஸ்நாநம்பஹுமுகமாயிருக்கும். நித்யஸ்நாநம் நைமித்திக ஸ்நா க்குடலன்று; அந்த நைமித்திகஸ்நாநம் ப்ராயச்சித்த ஸ்நாநத்துக்குடலன்று; இ தனித்தனியே ஸ்வதந்த்ரங்களாயிறேயிருப்பது. கர்மாநுஷ்டாநந் தானேறிய யோக் ஸாதகங்கள் பண்ணிப் போரத்தான் அரிதாயிறே இருப்பது. மூன்றனலை. அக்நியென்று ''அனல்'' என்றது-ஆராதியாநின்றால் அபர்யாப்தியே ஸ்வபாவமாயிருக்கும் விஷயமே

தாற்றுகைக்காக. மூன்றனல். மூன்றே அநாதமாயிருக்க மூன்றையிறே விதித்தது. ஓம்பும். சலப்ரஜைகளுக்குச் சோறும் நீரும் முடிந்துகொண்டு திரியும்மாதாவைப்போலே, யும் இத்தைமூன் கொண்டு திரியவேண்டும் விஷயமென்கை.

குறிகோள். மந்த்ரலோபம், க்ரியாலோபம், த்ரவ்யலோபம், காலபேதம், தேவதாந்யாகம் என்கிற இவற்றிலொன்றுண்டாமாகில் நிஷ்பலமாயிருக்கையாலே, கரணம்தப்பில் மரணமாயிருக்குமென்கை. பண்ணின அக்ர்த்யங்களை க்ஷாந்திக்குவிஷயமாக்கிறாஞ்ஜலியாலே ப்ரஸந்நமாம் விஷயமன்றே. அந்தணமைதன்னை. இப்படியிருக்கிறவீது தென்னில்; ப்ராஹ்மண்யம்; அதுதன்னை. ஒளித்திட்டேன். ப்ராஹ்மண்யமில்லாமை யென்னளவாய்ப் போகையன்றியே இவ்வர்ணந்தான் தண்ணிது என்னும்படி பண்ணினேன். விசிஷ்டராயிருப்பாரைக் கண்டால் இன்னான் அதிகரித்தவர்ணத்திலே சிலரன்றோ வென்னுமிகாண்டு அவர்களுக்கும் அவத்யமாம்படி திரிந்தேன். இதிறே நான் கர்மயோகத்தில் நின்றநிலை.

ஆனால் ஜ்ஞாநயோகமிருந்தபடி யெங்ஙனேயென்னில்; என்கணில்லை. என்விஷயமாக எனக்கொன்றுமில்லை. ஆத்மவிஷயஜ்ஞாந மெனக்கில்லையென்கை. கர்மயோகமில்லையென்றபோதே தத்ஸாத்யமான ஜ்ஞாநயோகமுமில்லையென்னுமிடம் அர்த்தஸித்தமன்றோ வென்னில்; இஜ்ஜந்மத்தில் அநுஷ்டித்ததொரு கர்மமில்லையாகிலும் பூர்வஜந்மத்தில் கர்மயோகம் பக்வமாய், அவ்வளவிலே தேஹவிச்லேஷம்பிறந்து அநந்தரஜந்மத்தில் ஜ்ஞாநம் நைஸர்க்கிகமாயிருக்குமிறே, அதுவுமில்லையென்கை. ஆனால் பக்தியோகமிருந்தபடி யென்னென்னில்; நின்கணும்பத்தனல்லேன். கண்டார்க்கு ஸ்ப்ருஹணீயமல்லது நிற்கவொண்ணாத உன்பக்கல் எனக்கு ஸ்நேஹலேசமுமில்லை. கர்மஜ்ஞாநங்களிரண்டுமில்லையாயிருக்க, உபயஸாத்யமான பக்தியில்லை யென்னுமிடம் சொல்லவேணுமோ வென்னில்; (க) "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாநஸமாதிபி:। நராணாம் க்ஷீணபாபாநாம் க்ருஷ்ணே பக்தி: ப்ரஜாயதே" என்கிறபடியே உண்டாகலாமிறே, அதுவுமில்லையென்கை. அதவா, கர்மஜ்ஞாநபக்திகள் மூன்றையும் தனித்தனியே உபாயமாகச் சொல்லுவாருமுண்டு; அந்தப்ரகாரத்திலே சொல்லிற்றாகவுமாம். (உ) "கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய:" (ங) "ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞாநே பரிஸமாப்யதே" (ச) "பக்த்யா த்வநந்யயா சக்ய:" என்னக்கடவதிறே. இதிறே கர்மஜ்ஞாநபக்திகளில் நான்நின்றநிலை. மற்றும் இவ்விஷயத்திலறிவுடையார், "நோற்றநோன்பிலேன்" என்றும், "கறவைகள் பின்சென்று" என்றும், (ரு) "நதர்மநிஷ்டோஸ்மி" என்றும், தந்தாம்வெறுமைகளைப் பேற்றுக்குடலாக முன்னிட்டுக்கொண்டு போரக்கடவதாயிறே இருப்பது.

பெரியபெருமாளும் தம்முடைய க்ர்பைக்கு இவர் சொன்னவெறுமைகளும் அதிகாரமாகையாலே ஆழ்வீர்! நிரபேக்ஷரோநீர் என்ன; களிப்பதென்கொண்டு. நீர்நின்றநிலையில் எனக்கநுதாபமுண்டாயோ, அதடியாக (சு) "மாசுச:" என்றுண்டாயோ; எது ஆலம்பநமாகக்களிப்பது. இத்தால் - அகிஞ்சநனென்றபடி. உமக்கநுதாபமில்லையாகில் விடு

(க) "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாநஸமாதிபி:। நராணாம்க்ஷீணபாபாநாம் க்ர்ஷ்ணேபக்தி:ப்ரஜாயதே" (உ) "கர்மணைவஹிஸம்ஸித்தி மாஸ்திதாஜநகாதய:" (ங) "ஸர்வம்கர்மாகிலம்பார்த்த ஜ்ஞாநேபரிஸமாப்யதே" (ச) "பக்த்யாத்வநந்யயாசக்ய:" (ரு) "நதர்மநிஷ்டோஸ்மி" (சு) "மாசுச:"

மித்தனையன்றோவென்னில்; என்பக்கல் கைம்முதலில்லையாகில் உன்பக்கலுமில்லையோ வென்கிறார். நம்பி. நான் உபாயாந்தரங்களில் வெறுமையில் பூர்ணனானாப்போலே தேவரீர் சீலாதிகுணபரிபூர்ணரல்லீரோ - தேவரீருடைய பூர்த்தி ஸஹகார நிரபேக்ஷமன்றோ. "அறிவொன்றுமில்லாத" என்றவனந்தரம், "குறையொன்றுமில்லாத கோவிந்தா" என்றருளிற்றே.

கடல்வண்ணா. தேவரீருடைய சீலாதிகுணபரிபூர்த்தியெல்லாம் வேணுமோ,வடிவழகே யமையாதோ என்பேற்றுக்கு. ஒருகடலோடே ஸ்பர்த்தை பண்ணி ஒருகடல் சாய்ந்தாப்போலேயிறே பெரியபெருமாள் கண்வளர்ந்தருளுகிறது. "ஐயப்பாடறுத்துத்தோன்றுமழகன்" என்றும், "ஆதரம் பெருகவைத்தவழகன்" என்றும், இவ்வடிவழகையிறே இவர்பற்றாசாகச் சொல்லிப்போந்தது. இத்தால் - சரண்யனென்றபடி.

உம்முடைய வெறுமையையும், நம்முடைய பௌஷ்கல்யத்தையும் அறிந்தீராகில் இதற்குமேற்பட உமக்கு வேண்டுவதென்னென்ன; கதறுகின்றேன். அந்நிலையிலேதான் நிற்கப்பெற்றேனோ, ஸாதநாநுஷ்டாநம் பண்ணி பலம் தாழ்ந்தால் கூப்பிடுவாரைப்போலே ச்ரவணகடுகமாகக் கூப்பிடாநின்றேன். ஸ்வரூபஜ்ஞானத்தில் கைவாங்கி, தேவரீர் கண்வளர்ந்தருளுகிற அழகுக்கு மங்களாசாஸநம் பண்ணுகையே யாத்ரையாயிருக்கிறேனோ. இத்தால் பலித்ததாய் விட்டது - ஆசாலேசமுடையார்க்கு முகங்கொடுக்கக் கடவவர் ஓராச்ரிதன் கூப்பிடாநிற்க அநாதரித்து நிற்பதே! என்று நாட்டார் சொல்லும்படி தேவரீர்க்கு ஓரவத்யத்தைத் தந்தேனித்தனையிறே.

இப்படி உமக்கொரு நன்மைகளுமில்லையாகில் பின்னை நம்மைச் செய்யச்சொல்லுகிறதென்னென்ன; அளித்தெனக் கருள்செய் கண்டாய். என்னை தேவரீர்க்கு க்ருபாவிஷயமாக்கி க்ருபை பண்ணியருளவேணும். அதாவது - அநுதாபத்தையும் பிறப்பிக்க வேணுமென்கை. என்றான்? நமக்கு இங்ஙனே அடியேதொடங்கிச் செய்துகொண்டுபோரவேண்டுகிற நிர்ப்பந்தந்தானென் னென்னில்; அரங்கமாநகருளானே. தன்தாமுக்கென்ன ஒருமுதலுமில்லாதாரை ரக்ஷிக்கைக்காக வன்றோ இங்குவந்து சாய்ந்தருளிற்று. குறைவற்றாரை ரக்ஷிப்பார்க்கு இங்குவரவேணுமோ, அங்கே யிருக்கவமையாதோ. இங்கேவந்தது கிடையழகுகாட்டியும் அர்ச்சக பராதீநமான சீலத்தைக் காட்டியும் ருசியேதொடங்கி யுண்டாக்கி ரக்ஷிக்கைக்காகவன்றோ.

அ. இருபத்தாறும்பாட்டு. போதேல்லாம். த்ரைவர்ணிகாதிகாரமான வுபாயமில்லையாகில் ஸர்வாதிகாரமான அர்ச்சநஸ்தவநாதிகள் தானுண்டோ வென்னில்; அதுவுமில்லையென்கிறார்.

மூ.—போதெலாம் போதுகொண்டுன் பொன்னடி புனையமாட்டேன்
தீதிலா மொழிகள்கொண்டுன் திருக்குணஞ் செப்பமாட்டேன்
காதலால் நெஞ்சமன்பு கலந்திலே னதுதன்னாலே
ஏதிலே னரங்கற்கெல்லே யென்செய்வான் தோன்றினேனே. உசு.

ப-ரை.— போது எலாம்—ஸர்வகாலங்களிலும், போது கொண்டு—புஷ்பங்களைக்கொண்டு, உன்—உன்னுடைய, பொன்—அழகிதான, அடி—திருவடிகளிலே, புனையமாட்டேன்—ஸமர்ப்பிக்க க்ஷமனாயிற்றிலேன்; தீது இலா—குற்றமற்ற, மொழிகள்கொண்டு—

ர்த்தைகளைக்கொண்டு, உன்—உன்னுடைய, திருக்குணம்—கல்யாணகுணங்களை, செப்ப
ட்டேன்— சொல்லமாட்டுகிறிலேன்; காதலால்—காதலடியாகிற, அன்பு— அன்பை,
இதுக்குமுன்பு,) நெஞ்சம் கலந்திலேன்—நெஞ்சில்ஸ்பர்சித்ததில்லை; அதாதன்றிலே—
ஹிறிலே, அரங்கற்கு—அழகியமணவாளனுக்கு, ஏதிலேன்—ஒருகாரணத்தாலும் ஸ்பர்சிக்
ப் பெற்றிலேன்; என் செய்வான் தோன்றினேன்—ஏதுக்காகப் பிறந்தேன்; எல்லே—
க்கோ! என்கிறார்.

வ்யா. போதெல்லாம் போதுகொண்டுன் பொன்னடி புனையமாட்டேன். அழகிய செவ்
ப் பூக்களைக்கொண்டு ஸர்வகாலமும் உன்னுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகளிலே
ளையவிறேயடுப்பது, அதில் ச்ரத்தையில்லாமையேயன்று, சக்தியேயில்லை யென்கிறார்.
ன்னையொழிந்த விஷயங்களிலே செய்யவென்றால் ச்ரத்தா சக்திகளிரண்டு முண்டாயிருக்
ம். (க) "யௌதத்பூஜாகரௌகரௌ" என்கிறபடியே - தேவரீர் திருவடிகளையே
ராதிக்கக்கண்ட கைகளைக்கொண்டு, அப்ராப்தமாய் அசர்த்தாவஹமாயிருந்தவிஷயங்களை
ராதித்துப்போந்தேன். காலமெல்லாம் மாட்டேன், ஒருக்கால் வல்லேன் என்கிறாரல்லர்;
ர்வகாலமும் மாட்டேனென்கிறார். ஒருகாலத்தில் சக்ருதகில் அதுதானே பேற்றுக்குப்
ாரும்படியாயிறே தேவரீர் ப்ரபாவமிருப்பது. (உ) "ஸக்ருதுச்சாரிதம்யேந" என்
ம், (ங) "ஸக்ருத்ஸ்ம்ருதோபி கோவிந்த:" என்றும், (ச) "ஸக்ருதேவப்ரபந்நாய"
ன்றும் சொல்லக்கடவதிறே.

காயிகமான வ்யாபாரத்தை புறம்பேவிநியோகங் கொண்டேனாகிலும் உம்முடைய
ச்சுக் குற்றமற்றிரா நின்றது, ஆனபின்பு நம்குணங்களைப் பேசமாட்டோமோவென்ன;
இலாமொழிகள்கொண்டேன் திருக்குணம்செப்பமாட்டேன். பேச்சுக் குற்றமற்றாலும் உன்னு
டைய கல்யாண குணங்களைப் பேசவென்றால் க்ஷமனாகிறிலேன். ஹேயகுணயுக்தமான
க்ஷுத்ர விஷயங்களைப் பேசவென்றால் § வாழ்ச்சியிடுகை நறுக்கறப் பேசவல்லேன்;
(ரு) "ஸாஜிஹ்வாயா ஹரிம்ஸ்தௌதி" என்கிற குணங்களில் வந்தால் நாப் புரளாது.

அவையிரண்டுக்கும் விஷயம் புறம்பேயாக்கினீராகில் நெஞ்சாலே நம்மைஸ்நேஹிக்க
வல்லீரேயென்ன; காதலால் நெஞ்சமன்புகலந்திலேன். காதலடியாக வருமன்பு இதுக்கு
முன்பு நெஞ்சில் ஸ்பர்சித்ததில்லை. அதாகிறது - (கூ) "ஸங்காத்ஸஞ்ஜாயதேகாம:" என்
கிற ப்ரேமம். புறம்பே ஒருவிஷயத்தி லுண்டாகிலிறே அத்தை அங்குநின்றும் மீட்டுப்
போந்து தேவரீர்பக்கலிலே யாக்கவேண்டுவது. முன்பு ஸ்த்ரீபதார்த்தங்களில் பண்ணிப்
போந்தப்ரேமம் அவர்கள்பக்கல் அர்த்தாதிகளை அபஹரிக்கைக்காக வாய்த்தல்லது அவர்
களை உத்தேச்ய மென்னும் ப்ரேமம் இல்லை. (எ) "ஸ்மரபராவசோ வஞ்சநபர:"

(க) "யௌதத்பூஜாகரௌகரௌ" (உ) "ஸக்ருதுச்சாரிதம்யேந"
(ங) "ஸக்ருத்ஸ்ம்ருதோபி கோவிந்த:" (ச) "ஸக்ருதேவப்ரபந்நாய"
§ வாழ்ச்சியிடுகை - வாழ்ச்சியிட்டு வெட்டினுப்போலே என்றபடி.
(ரு) "ஸாஜிஹ்வாயா ஹரிம்ஸ்தௌதி" (கூ) "ஸங்காத்ஸஞ்ஜாயதேகாம:"
(எ) "ஸ்மரபராவசோ வஞ்சநபர:"

என்னைக்கடவதிறே. (க) “பரமஸாஹஸிகோநிருணோ தேவ ஸாதநயாவிதா ராக்ஷஸீஸ்தவைரீ ஸம்ஸேவ்யா ஹிலிபோஹ் ஆஜ்ஞா ஸம்ஸ்த மேஷ செயதேகி நாஸ்தி” என்னைக்கடவதிறே.

அதுதன்னாலே ஏதிலேன். மநோவாக்காயங்கள் ஒருபடிப்பட்டிருப்பார் பெறும்பேற்றுக்கு இவற்றிலொன்றாகிலும் வேண்டியிருக்க, அதுவுமெனக்கின்றிக்கே யிருக்கையாலே ஏதிலேன் - ஏதுமில்லேன். அரங்கற்கு - ஏதிலேன். (உ) “ஸாஹூர்மலைஷூஸுதாநாம்” என்கிற மௌஹார்த்தத்தையும், (ங) “ருஜு:” என்கிறபடியே — ஆச்ரிதவிஷயத்தில் மநோவாக்காயங்கள் மூன்றும் செவ்விதாயிருக்கிற ஆர்ஜவ குணத்தையும் கேட்டேபோகாமே அநுஷ்டாந சேஷமாக்குகைக்காகக் கோயிலிலே ஸந்நிஹிதரான தேவரீர்க்கு, ஒன்றுமாகப் பெற்றிலேன் - ஒருகாரணத்தாலும் தேவரீரை ஸ்பர்சிக்கப் பெற்றிலேன். எல்லே. என்னே!. அஸந்நிஹிதராயிருந் தேனல்லேன்; ப்ராப்தியில்லையாயிருந்தேனல்லேன்; செய்த அம்சத்திலே பிழைபிடிக்குமவராயிருந்தேனல்லேன்; என்னிழவுக்கடி பாபமேயிறே. ஸ்ரீ கௌஸ்துபம்போலே உகப்பானவஸ்துவன்றோ! இப்படிவ்யர்த்தமாய்ப் போய்த்தது. * அரங்கத்துறையு மின்துணைவற்கும்ம! நான் தாஸ்தனுய்த்து. கஷாயபாநம் பண்ணுமாப்போலே ஹிதபுத்தியாலே ஸேவிக்கவேண்டும். விஷயமாய்த்தானிருந்ததோ; பாலேமருந்தானாப்போலே தர்சநீயரான தேவரீரே மோக்ஷப்ரதரா யிருக்கவன்றோ இழந்தது.

என்செய்வான்தோன்றினேனே. (ச) “விசித்ராதேஹஸம்பத்தி:” என்கிறபடியே தேவரீர்க்குறுப்பான ஜந்மமாயிருக்க நான் ஏதுக்காகப்பிறந்தேன். “என்செய்வான் பிறந்தேன்” என்னாதே, “தோன்றினேன்” என்கிறது—உத்பாதங்கள்போலே அநர்த்தஹேதுவாகப்பிறந்தேனென்கை. உத்பாதங்களுடையதோற்றந்தான் தமக்கும்ப்ரயோஜநமின்றிக்கே பிறர்க்கும் அநர்த்தமாயிறேயிருப்பது; அதுபோலேயாய்விட்டதிறே யென்ஜந்மமென்கிறார்.

அ. இருபத்தேழாம்பாட்டு. குரங்குகள். மநுஷ்யாதிகாரமானவையொன்றுமின்லையாகில், திருவடி திருவனந்தாழ்வான் முதலானவர்களைக்கொள்ளுமடிமையை, சாஸ்த்ரவச்யதையின்றிக்கேயிருந்துள்ள திர்யக்குக்களைக்கொள்ளுவதாக நாம்வந்தவதரித்தகாலத்தில் திர்யக்ஸாமாந்யத்தாலே அணில்கள் சுத்தபாவனையோடே பண்ணின கிஞ்சித்காரமுண்டு, அதுதானுண்டோவென்னில்; அதுவுமில்லையென்கிறார்.

மூ.—குரங்குகள் மலையைநூக்கக் குளித்துத்தாம் புரண்டிட்டோடித்
தரங்கநீ ரடைக்கலுற்ற சலமிலா வணிலும்போலேன்
மரங்கள்போல் வலியநெஞ்சம் வஞ்சனேன் நெஞ்சுதன்னால்
அரங்கனுர்க் காட்செய்யாதே யளியத்தே னயர்க்கின்றேனே. உஎ.

ப-ரை.—குரங்குகள் - வாநரவீரர்களானவர்கள், (கிஞ்சித்கரித்துஸ்வரூபம்நிறம்பெறுகைக்காக,) மலையை—பர்வதத்தை, நூக்க—தள்ளிக்கொண்டுவர, தாம்—தாங்கள், குளித்து—நீரிலேமுழுகி, புரண்டிட்டு—கரையிலுள்ள உலர்ந்த மணலிலேபுரண்டு, ஓடி—லேதுபந்த

(க) “பரமஸாஹஸீதி பாந்தவேகளத்ரே ஸுத தநயாபித்ர்மாத்ர் ப்ர்த்யவர்க்கே சடமதிருபயாதிபோர்த்த த்ர்ஷ்ணும் தமதம சேஷ்டமேவஹி நாஸ்யபக்தி:”
(உ) “ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்” (ங) “ருஜு:” (ச) “விசித்ராதேஹஸம்பத்தி:”

சடக்கெனத்தலைக்கட்டவேணுமென்கிற த்வராதிசயத்தாலே ருடி, தாங்கல்—இசைவையுடைத்தாய், (விளர்ந்திருந்துள்ள,) நீர்—கடலை, அடைக்கல் உற்ற—தூர்க்கையிலே ஒருப்பட்டனவாய், ‡ சலம் இலா—குற்றமற்றனவான, அணிலும்—அணில்களையும், போலேன்—ஒவ்வேன்; (இதுவன்றியும்,) மரங்கள்போல்—மரங்களைப்போலே, வலிய நெஞ்சம்—கடினசித்தத்தையுடையனாய், வஞ்சனேன்—வஞ்சகபரனாய், அளிபத்தேன்—அருமருந்தமநுஷ்யனானேன், அரங்கனூர்க்கு—கோயிலிலே கண்வளர்ந்தருளுமவர்க்கு, நெஞ்சு தன்னால்—பாவவர்த்திபாலே, ஆள்செய்யாதே—அடிமைசெய்யாமல், அயர்க்கின்றேன்—மறந்து வகர்த்தப்படாநின்றேனென்கிறார். ‡ சலம்—மாயை, கபடமென்றபடி.

வ்யா. குரங்குகள் மலையை நூக்க. மலைகளாலே கடலைத் தூர்க்கிறவிடத்தில் மலைகளுக்குத் தொகையுண்டாய் ஸ்ரீவாநரவீரர்களுக்குத் தொகையில்லாமையாலே ஒருமலையை அநேகர்கூடித் தொட்டுக்கொண்டு வருவர்களாய்த்து. ஒருமலை ஒருவர்க்குப் பாத்தம்போராதபடி பெருமிடுக்கராயிருக்கச் செய்தேயும் ‡ உபாத்யாயர் ஊசிபோலே எல்லாருங்கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் நிறம்பெறவேணுமென்றிருக்குமவர்களாகையாலே இப்படிசெய்கிறார்களாய்த்து. ஸ்வரூபஜ்ஞாநமுடையாரோடு இல்லாதாரோடு வாசியறத் தாரும்பெறுந்தரம்பாயிறே அடிமைகொள்ளுகிறவர் கையும் வில்லுமாய்நின்றநிலைதான். மலையைநூக்க. கடலிலேபோகட என்னாதே "நூக்க" என்றது—ஒரு திரளுக்கு ஒருமலைவிஷயமாகவும் போராமையாலே வேறேயொருதிரள் வந்துபற்ற அவர்கள்பக்கலிலே நூக்க, இப்படி கைமேலேபோய்த்து மலைகடலிலேபுகுவது. (க) "சிவ மாஹம்ராவண ஸ்ஶேஷு" என்றுகொண்டு பெருமாளுக்கு ஆற்றாமைகரைபுரண்டு செல்லாநிற்க அக்காரியத்துக்குவேண்டுவார் ப்ரவர்த்தியாநின்றார்களென்று ஆறியிருக்கவொண்ணாதிறே. கடல்தூர்ப்புண்டு அக்கரைப்பட்டதாய்விடவற்று என்னும் த்வரையாலே எல்லாருமொக்க ப்ரவர்த்தித்தாராய்த்து.

குளித்து இத்யாதி. ஸ்ரீவாநரவீரர்களுடைய த்வரைதான் அணில்களுக்குப்போராமையாலே, பெருமாளுக்கு ஆற்றாமைகரைபுரளாநிற்க முதலிகளுக்கு இத்தனை மெத்தனவெல்லாமென்தான்? இருந்தபடியால் சடக்கெனக்கடலடைக்க இவர்களுக்கும் சக்தியில்லை, ஆனபின்பு, மலையாலே தூர்ப்புண்டப்ரதேசத்துக்கு மணல்சுமக்கப் பரிகரமில்லையிறே என்று, அணில் நீரிலேபுக்குத் தோய்கையும் கரையிலேயேறினால் மணல்தொற்றுகையும், உதறினவாறே விட்டுக்கழிகையும் இவை முன்பே கைகண்டபடியாலே இப்ப்ரகாரத்தாலே கடலைத் தூர்ப்போமென்று பார்த்துக், கடலிலேபுக்குமுழுகுமாய்த்து. இம்முழுக்குதன்னாலே நீர்சுவறும், மணலுங்கொண்டு வரலாமென்றாய்த்து நினைவு. தாம். கடலில் நீர்சுவறுவதும் மணல் தொற்றுவதும் தம்முடம்பிலேயென்றறியாதாய்த்து அடிமையில் த்வரையாலே; தாம்

‡ "உபாத்யாயர் ஊசிபோலே" என்றவிடத்தில் அநுஸந்தித்துப் போருவதொருகதையுண்டு:— ஒருநாள் உபாத்யாயருக்கு ஓர் ஊசிவேண்டியிருந்ததாய், அதற்காக சிஷ்யர்களை நியமித்துப்போகவிட, அவர்களில் ஒருவர் ஓர் ஊசியை ஆர்ஜித்து உபாத்யாயர்பாடே கொணர்ப்புக்கவளவிலே, மற்றசிஷ்யர்களெல்லாரும் திரண்டு உபாத்யாய நியமித கைங்கர்யத்தில் எல்லாருமாகவிறே கிஞ்சித்கரிக்கவேணுமென்று பெரியதொருபனைமரத்தை வெட்டி அதிலே அந்த ஊசியைக்குத்தி எல்லாருமாக அந்தமரத்தைத் தூக்கிக்கொண்டு வந்தார்கள் என்று. (க) "அவதாஹ்யார்ணவம் ஸ்வப்ஸ்யே"

வுபட்ட காரியமடங்கத் தங்களாலே தலைக்கட்டுகிறதாக அபிமானித்துத் திரிகிறபடியாலே "தாம்" என்னவுமாம். புரண்டிட்டோடி. புக்கமலைகளுக்கு நொய்மணல்புக்குச்சொரிந்து கொண்டுவருகிறபடி போராதென்றுபார்த்து மணலிலேபுரண்டோடித் திரியாநிற்குமாய்த்து. உள்ளமணலும் வழியிலேயுதிரும்படியாகவோட இடையிலே நின்றவர்கள் இவற்றின் த்வரையைக்கண்டு என்றான் இத்தனை வேகமென்றால்? பெருமாளுக்குப்பகலுமிதி லங்கையில் வடக்குவாசலில் விடுவித்ததாயிருக்கும், உங்களுக்கு த்வரையற்றிருந்ததி! என்னுமாய்த்து. ருசியானது தந்தாமளவைப்பார்க்க வொட்டாதிறே.

தரங்கநீர் அடைக்கலுற்ற. திரையையுடைத்தாய்க்கிளர்ந்திருந்துள்ள கடலை யடைக்கையிலே சமைந்த. உற்ற. கடலடைக்கிறார்கள் தாங்களாய், முதலிகளும் தங்களுக்கு எடுத்துக் கைநீட்டுகிறவர்களாயாய்த்து இவற்றினுடைய அபிமானம். சலமிலாவணிலும்போலேன் இவற்றினுடைய வ்யாபாரம் அங்குத்தைக்கு கிஞ்சித்காரமாய்ப் பலிப்பதொன்றில்லையாகில் இது அடிமையாகிறபடி யெங்ஙனேயென்னில்; அடிமைகொள்ளுகிறவனுக்கு இவற்றின் பாவசுத்தியே யமையுமென்கை. சலமிலாமையாவது - "கடல்தூர்ப்புண்டு பெருமாள் அக்கரைப்பட்டாராகவல்லரே" என்கிறபா(ஹா)வத்தில் புரையற்றிருக்கை. சலம்-வ்யாஜம். இலா-இல்லாமை- நின்ற நிலைபோராதே நிற்கை. சாஸ்த்ரவச்யதையுமின்றிக்கே வர்ணாச்ரமநியமுமின்றிக்கே, ஹஸ்தபாதாதிகரணமுமின்றியிலேயிருக்கிற திர்யக்ஸாமாந்ய மாத்ரமான இவை குளிப்பதும் ஓடுவதும் புரளுவதாகிற இவற்றினுடைய பாவமும் எனக்கில்லையென்று, "குளித்து மூன்றனலை - ஓளித்திட்டேன்" என்கிறார். அவாப்த ஸமஸ்தகாமனுக்கு எதிர்த்தலையில் பாவசுத்தியொழிய அவனுக்கு வேண்டுவதொன்றில்லை, இவனுஞ் செய்யலாவதுமொன்றில்லை, நமக்குள்ள ஜ்ஞாநசக்திகளைக்கொண்டு பூர்ணனுக்கு நாமொன்று செய்கையாவது என்னென்று கைவாங்குமவர்கள் பாக்யஹீநர், அந்த பூர்த்திதான் நாமிட்டதுகொண்டு த்ர்ப்தனாகைக்குறுப்பென்று சுத்தபாவராய் மேல்விழுகைக் குறுப்பாம் பாக்யவான்களுக்கு; இப்பாவசுத்திதான் ஒருவர்க்கும் கிடையாமையாலே எல்லார்க்குஞ் செய்யலாவதொன்றென்னவொண்ணாது. ஆக அணில்களுக்குள்ள ஆநுகூல்யமும் எனக்கில்லையென்கிறார்.

மரங்கள்போல் வலியநெஞ்சம் வஞ்சனேன். இவ்விஷயத்தில் தம்நெஞ்சில் நெகிழ்ச்சியில்லாதபடிக்கு த்ருஷ்டாந்தம் சொல்லுகிறார். "இரும்புபோல் வலியநெஞ்சம்" என்றவதுக்கு மவ்வருகே ஒருவன்மை சொல்லுகைக்காக "மரங்கள்போல் வலியநெஞ்சம்" என்கிறார். அக்நியிலேயிட்டு உருக்கி நினைத்தகார்யம் கொள்ளலாம் இரும்பு, இத்தை நெருப்பிலேயிட்டால் கரிந்துபோய் முன்புநின்ற நிலையும் கெடுமித்தனை. வஞ்சனேன். இப்படி நெஞ்சு திண்ணிதாயிருக்கச்செய்தே இது த்ரவத்ரவ்யமோவென்று தேவரீரும் ப்ரமிக்கும்படி பாவித்துக்காட்டாநிற்பன்; அகவாயில் நினைவொன்றாயிருக்க 'இவனைத்தனை பகவத்ப்ரேமமுடையாரில்லை' என்று ப்ரமிக்கும்படி மறைத்துவர்த்திப்பன். "இறை யிறையுருகும் வண்ணம்" என்று கீழ்ச்சொன்னத்தை அநுபாஷிக்கிறார். நெஞ்சுதன்னாலரங்கனார்க்காட்செய்யாதே. அணில்கள் பக்கலிலும் பாவசுத்தியேயிறே யுள்ளது, அந்நெஞ்சைக்கொண்டு ஸந்நிஹிதனான உன்பக்கலிலே அல்பாநுகூல்யம் பண்ணாதே. இவன் பாவசுத்தி மாத்ரத்தையே பரிபூர்ணசேஷவ்ருத்தியாகக் கொள்ளும் பகவதபிப்ராயத்தாலே "ஆட்செய்யாதே" என்கிறார். அளியத்தேன். (௧) "அஹமஸர்வம்கரிஷ்யாமி" என்று

(௧) "அஹம்ஸர்வம் கரிஷ்யாமி"

ஞீளயபெருமாளைப்போலே ஸர்வவித கைங்கர்யங்களுக்கும் அர்ஹமான அருமந்தவஸ்து மேர்! இது. அயர்க்கின்றேனே. விஸ்மரித்து அநர்த்தப்பட்டுப்போவதே! இவ்விஷயம் ஸந்நிஹிதமல்லாமையாலேயாதல், இத்தலையில் போக்யதையில்லாமையாலே யாதலன்றிறே; "மறந்தேனுன்னை முன்னம்" என்கிறபடியே விஸ்ம்ருதியாலேயிறே அநர்த்தப்பட்டது. சலமிலா மரங்கள் போலென்னவுமாம்; மரங்கள்போலே சலமிலாவென்னவுமாம். மரத்தை ஆயுதத்தாலே சலிப்பிக்கவுமாம், நெஞ்சையொன்றாலும் சலிப்பிக்கவொண்ணாதென்றபடி.

அ. . இருபத்தெட்டாம்பாட்டு. உம்பரால். அணில்கள் திர்யக்காய்வைத்து நமக்கு ஞ்சித்கரிக்க உத்யோகித்தபாவசுத்தி உமக்கில்லையாகில், ஸ்ரீகஜேந்த்ராழ்வான் பொய்கை மேலே புக்கு இடர்பட்டு நாம்சென்று தனக்குதவக்கடவதாக நினைத்ததொரு நினைவுண்டு, அதுதானும் உமக்குண்டோவென்ன; அதுவுமில்லையென்கிறார்.

மூ.—உம்பரா லறியலாகா வொளியுளா ரானைக்காகிச்
செம்புலா லுண்டுவாழும் முதலைமேற் சீறிவந்தார்
நம்பரமாயதுண்டே நாய்களோஞ் சிறுமையோரா
எம்பிராற் காட்செய்யாதே யென்செய்வான் தோன்றினேனே. உஅ.

ப-ரை.— உம்பரால் — ப்ரஹ்மாதி தேவர்களால், அறியலாகா — இப்படிப்பட்டதென்று பரிச்சேதித்தறியவொண்ணாத, ஒளியுளார்—தேஜோமயமான பரமபதத்திலுள்ள ஸர்வேச்வரன், ஆனைக்காகி—திர்யக்காயிருந்துள்ளகஜேந்த்ராழ்வானுக்காக, செம்-சிவந்த, புலால்—மாம்ஸத்தை, உண்டு—புஜித்து, வாழும்—வர்த்திக்கிற, முதலைமேல்—முதலைமேலே, சீறி—பெருங்கோவமுடையராய்க்கொண்டு, வந்தார்—அவன் இடர்பட்ட மடுவின் கரையிலே அரைகுலையத்தலைகுலையவந்தார்; (இப்படி ஆச்ரிதபக்ஷபாதியாய் ரக்ஷிக்குமவனிருக்க,) நம் பரமாயது உண்டே—நம்முடையரக்ஷணத்தில் நமக்கொரு பர(ஹஸ)முண்டோ; நாய்களோம்—நாய்கள்போலே தண்ணியரான நம்முடைய, சிறுமை ஓரா—குற்றத்தில் கண்வையாதவராய், எம்-நமக்கு வகுத்தசேஷியுமாய், பிராற்கு-உபகாரகனுமாயிருக்குமவனுக்கு, ஆள்செய்யாதே-அடிமைசெய்யாமல், என்செய்வான் தோன்றினேன்-எதுக்காகப் பிறந்தேனென்கிறார்.

வ்யா. உம்பர் இத்யாதி. ப்ரஹ்மாதிகளாலறியவொண்ணாத ஒளியுண்டு-ஸ்ரீவைகுண்டம்; அத்தை வாஸஸ்தானமாகவுடையவர். (க) "அத யதத꞉பரோ திவோ ஜ்யோதிர்தீப்யதே" (உ) "அத்யர்க்காநலதீப்தம் தத்ஸ்தானம்விஷ்ணோர்மஹாத்மந꞉" என்னக்கடவதிறே. ஞானாதிகர்களாலும் (ங) "ஈச்வரோஹம்" என்றிருப்பார்க்கு நிலமன்றே பரமபதம்; ப்ராபிக்க முடியாமையேயன்று, அறியவும் முடியாதென்கை. (ச) "யந்நதேவா நமுநயோ நசாஹம்நசசங்கர꞉। ஜாநந்திபரமேசஸ்ய தத்விஷ்ணோ꞉ பரமம்பதம்" ॥ * கலங்காப் பெருநகரத்திலே நித்யஸூரிகளை அநுபவிப்பித்திருக்கிறவர்கிடீர்! ஸம்ஸாரத்திலே ஆர்த்த

(க) "அதயதத꞉பரோதிவோ ஜ்யோதிர்த்தீப்யதே" (உ) "அத்யர்க்காநலதீப்தம் தத்ஸ்தானம்விஷ்ணோர்மஹாத்மந꞉" (ங) "ஈச்வரோஹம்" (ச) "யந்நதேவாநமுநயோ நசாஹம்நசசங்கர꞉। ஜாநந்திபரமேசஸ்யதத்விஷ்ணோ꞉ பரமம்பதம்"

ிருப்பர். (க) "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" என்று ஓதப்படுகிறவனுக்கு அவிஜ்ஞாதர்த்வ
ாவது - இத்தலையில் தோஷங்கண்டு பொறுத்து அபகரித்தாராயிராதொழிகை.

எம்பிரான்காட்செய்யாதே. தோஷம்பாராதே ஆபத்தே ஹேதுவாக ரக்ஷிக்கிறது வரு
்தவிதையமாகையாலே வருத்தசேஷியுமாய் உபகாரகனுமாயிருக்குமவனுக்கு அடிமை செய்
கையிறேப்ராப்தம், அதுசெய்யாதே. எங்கள்கார்யம் தமக்கே பரமாக ஏறிட்டுக்கொண்டால்
ம்முடையகரணங்களுக்கு ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியிலே அந்வயிக்கையிறே ப்ராப்தம்.

என்செய்வான் தோன்றினேனே. வ்யர்த்தஜந்மாவானேன். (உ) "ஸ்ரேஷ்டஸ்த்வம்வநவா
ஸாய" என்கிறபடியே ஜந்மப்ரயோஜநம் அடிமையாகில் அதுக்குசலான என்ஜந்மம்
யர்த்தமேயிறே. பிறந்தேன் என்றாதே, "தோன்றினேன்" என்றது, (ங) "அஹம்
ஸர்வம் கரிஷ்யாமி" என்ற இளையபெருமாள் பிறவிபோலேயாகிலிறே பிறந்ததென்ன
லாவது, அதில்லாமையாலே "தோன்றினேன்" என்கிறார் ... ... உ௮.

அ. இருபத்தொன்பதாம்பாட்டு. ஊரிலேன். ஆனை இடர்பட்டபோது, அது
னக்குதவுகைக்காக நினைத்த நினைவு உமக்கில்லையாகில் ஸ்ரீஸாளக்ராமம் திருவயோத்யை
கோயில்முதலாக நாம் உகந்த நிலங்களில் ஒருவனுக்கு ஜந்மாதிகளுண்டானால் அவனை நம
்கு ரக்ஷித்தே தீரவேணும், அங்ஙனே இருப்பன சிலவுண்டோவென்ன; அவையு மெனக்
கில்லை யென்கிறார்.

மூ—ஊரிலேன் காணியில்லை யுறவுமற் றொருவரில்லை
பாரில்நின் பாதமூலம் பற்றிலேன் பரமமூர்த்தி
காரொளிவண்ணனே கண்ணனே கதறுகின்றேன்
ஆருளர் களைகணம்மா வரங்கமா நகருளானே. உகூ.

ப—ரை.— ஊர் இலேன்—தேவரீர் நித்யஸந்நிதி பண்ணுகிற ஸ்ரீஸாளக்ராமம் முத
லான திருப்பதிகளில் பிறவாதவனாய், காணி இல்லை—திருப்பல்லாண்டு பாடுகைமுதலான
ற்காசவிட்ட காணியாட்சியில்லாதவனாய், உறவு இல்லை—பந்துக்களில்லாதவனாய், மற்று
ஒருவர் இல்லை—ஸ்நேஹிகளில்லாதவனாய், பாரில்—தண்ணிதான பூமியிலே வசித்து, நின்
பாதமூலம்—உன் திருவடித்தாமரைகளை, பற்றிலேன்—தஞ்சமாகப்பற்றுகைவழி யிராநின்
றேன்; பரமமூர்த்தி—பரமசேஷியாய், ஒளி—புகர்மிக்கிருக்குள்ள, கார் வண்ணனே—வர்
ஷாகவலாஹகத்தையொத்த திருநிறத்தையுடையனாய், கண்ணனே—ஆச்ரிதஸுலபனான
வனே, கதறுகின்றேன்—பலம் தாழ்த்தாரைப்போலே கூப்பிடாநின்றேன்; அம்மா—ஸ்வ
ஸ்வாமியாய், அரங்கம் மாநகர் உளானே—ஆச்ரிதர் கூப்பீடு கேட்கைக்காகக் கோயிலிலே
வந்து கண்வளர்ந்தருளுமவனே, (அடியேனுக்கு,) களைகண் ஆர் உளர்—தேவரீரையொ
ழிய ரக்ஷகர் வேறே ஆரிருக்கிறார்; [உன்னையொழிய வேறே ரக்ஷகரில்லை யென்று
கருத்து.]

வ்யா. ஊரிலேன். இங்கு "ஊர்" என்று இவர் நினைக்கிறது - ஸதா பகவத்ஸந்
நிதியுண்டான ஸ்ரீஸாளக்ராமமென்ன, அவதாரஸ்தலமான திருவயோத்யாதிகளென்ன,
கோயில்முதலா யிருந்துள்ள திருப்பதிகளென்ன, இவற்றையாய்த்து. "ஊர்" என்கிற

(க) "யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்" (உ) "ஸ்ரேஷ்டஸ்த்வம்வநவாஸாய"
(ங) "அஹம்ஸர்வம் கரிஷ்யாமி"

ஸாமாந்ய வாசிசப்தம் இவ்விசேஷங்களைக் காட்டுமோவென்னில்; சேதநரிலே ஒருகுருச்
யில் பிறவாதாரில்லையிறே; அவைதான் அதர்ஷ்ட ஹேதுவென்கைக்கு ஒருப்ரமாண
யில்லை; இங்கு உபாய சூந்யதையைச் சொல்லிப்போருகிற ப்ரகரணத்தோடு சேரவேண்டு
யாலே இச்சப்தம் இவ்விசேஷங்களையே சொல்லிற்றாகக்கடவது. நாம் அபியாநித்திருந்த எ
லைக்குள்ளே பிறந்தானென்று தேவரீர்க்குப் பற்றச பிடிக்கலாவதொரு தேசத்திலே பி
க்கப் பெற்றிலேன். தேசவாஸமாத்ரமே ஆத்மோத்தாரகமென்கைக்கு ப்ரமாணமென்
என்னில்; (க) ஔதௌரபவல்லகா ... " (உ) " ஸவஜ்ஷயவாஸி நஃ " (ங) "
ரா(ஜ)மஹா நி... ஸலிலெ... நா... தாஃ " என்றும் சொல்லக்கடவதிறே. கான
யில்லை. அப்படி அத்தேசங்களில் ஜந்மமில்லையாகில் ஏதேனுமொருபாதியாலே அவ்வே
விடங்களிலே க்ஷேத்ரஸ்பர்சமுண்டாகக் கூடும், அதுவுண்டோவென்னில்; அதுவுமில்லை
ன்கிறார். அதாவது - தேஹயாத்ராசேஷமாகத் திருப்பல்லாண்டு பாடுகை முதலான நிமி
த்தங்களிலே அந்வயித்தல், " திருநந்தவநம் " என்றுப்போலே சிலவுண்டாதல், தாநத்த
லும் விலையாலுமுண்டாய் அவ்வூரிலே சென்று காணியாளவேண்டும்படியானஸ்பர்சமுண்ட
யிருக்கை.

அவையொன்றுமில்லையாகில் அவ்வூரிலுள்ளாரோடே ஒரு கொள்கொடையா
வரும் ஸம்பந்தமாதல், மந்த்ரஸம்பந்தமாதலுண்டோவென்னில்; உறவில்லை மற்றொருவ
ல்லை. இவையின்றிக்கே யொழிந்தால் கண்பழகியிருப்பாரொரு பந்துக்களுண்டோ வெ
ளில்; அதுவுமில்லையென்கிறார். ஆனால் உமக்கு வாஸமெங்கேயென்ன: பாரில். ஒருப
ற்ச பெறுவிடில் தரிக்கவொண்ணாதபடி அநந்தக்லேசபாஜநமான பூமியிலே வாஸம்.

* கலங்காப் பெருநகரிலிருக்கிறேனோ நிர்ப்பானுயிருக்கைக்கு, ஒருவர்கூறை யெ
வருக்கிற பயஸ்தாநத்திலே யன்றோ எனக்கு வாஸம். ஆகையால் நின்பாதமூலம் பற்
லேன். ஸர்வப்ரகாரத்தாலும் புகலற்றார்க்குப் புகலான உன் திருவடிகளில் எனக்கோரந்வ
யில்லை. (ச) " தமேவசரணம் கதஃ " என்று ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு இலக்கான காகத்
க்குங்கூடப் புகலிடமாயிறே தேவரீர்திருவடிகளிருப்பது. ஆனால் பின்னை ஒருவழி
லும் உமக்கொரு நன்மையில்லையாகில் பின்னை இழக்குமித்தனையன்றோவென்ன; பரமமூர்த்
ஸ்வகதமாக ஒரு உஜ்ஜீவநோபாயமில்லையென்றேனத்தனைபோக்கி உன்பக்கலிலும் இல்
யோ. ஸர்வாதிகனாய் பரமசேஷியாயிருக்குமவனல்லையோ. சேஷத்வ ப்ரதிஸம்பந்தியாயி
சேஷித்வமிருப்பது. இவன், (ரு) " ஸ்வதஸ்ஸர்வஜ்ஞ " என்று ப்ரமித்தவன்தும் இவ
ப்ரதிபத்தியொழிய ஸ்வரூபத்தை மாறாடவொண்ணாதே.

ஸ்வரூபத்தையழிக்கவொண்ணாதாகில் ஸ்வரூபாநுரூபமான வித்திக்கு வழியே
ன்ன; காரொளிவண்ணனே. முதலடியிலே ருசிஜநகமாய் ருசிபிறந்தார்க்கு உபாயமுமா
ன்றோ உன்வடிவழகிருப்பது. கண்ணனே. வடிவழகுண்டானாலும் உத்துங்கதத்வமன்
வென்ன வொண்ணாதபடி ஸௌலப்யாதி கல்யாணகுணயுக்தனல்லையோ.

---

(க) " தேசோயம் ஸர்வகாமதுக் " (உ) " பவத்விஷயவாஸிநஃ " (ங) " திர்ய
யோகிகதாச்சாபி ஸர்வோராமமநுவ்ரதாஃ " (ச) " தமேவம்சரணம்கதஃ " (ரு) " ஸ்வத
த்சோஹம் "

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# முதலாயிரம் — திருமாலை.

## பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யாநாவதாரிகை.

நித்யஸூரிகளோடொத்த ப்ராப்தி தமக்குண்டாயிருக்க அத்தை அறியாதே, அநாதிகாலம் "தேஹமே ஆத்மா" என்றும் சப்தாதிவிஷயங்களை போக்யமென்றும் விரும்பி, ஸம்ஸாரத்தில் கைகழிந்த ஆழ்வாரை, பெரியபெருமாள் தம்முடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளுக்கு வாசகமான திருநாமப்ரபாவத்தை நிர்ஹேதுகமாகக்காட்டியருளக்கண்டு, தாமுமநுபவித்து அநுபூஷுக்களையும் அநுபவிப்பிக்கவும் வல்லராய்ப் பெரியபெருமாளையும் உகப்பித்துத் தலைக்கட்டுகிறார்.

ஸம்ஸாரிகளாகிறார்—ஐஹிகத்தில் புண்யபாபரூபமான கர்மங்களை ஆர்ஜித்தும், ஆமுஷ்மிகத்தில் ஸ்வர்க்கநரகங்களிலே அதினுடைய பலாநுபவத்தைப் பண்ணியும் இப்படி கதாகதம்பண்ணித்திரிவார் சிலராய்த்து. அதுதன்னிலும் புண்ய பாபரூபமான கர்மங்களை ஸ்வர்க்கநரகங்களிலே அநுபவித்தா கர்மசேஷத்தோடே பூமியிலே கர்ப்பவாஸம்பண்ணுகைக்கு வரும்வழியிலே இவ்வாத்மா படும் எளிவரவை வேதாந்தத்திலே பஞ்சாக்நிவித்யையென்றொருப்ரதேசத்திலே ஓதிவைத்தது. அதாவது - யாதநாசரீரத்தாலே நரகாநுபவம் பண்ணி அச்சரீரத்தை அங்கேபோகட்டு, அநந்தரம் புண்யசரீரத்தைப் பரிக்ரஹித்து ஸ்வர்க்காநுபவம்பண்ணி, அங்கே அச்சரீரத்தைப்போகட்டு, ஸூக்ஷ்ம சரீரத்தோடே நிராலம்பநமான ஆகாசத்திலே பதிக்கக்கடவன்;

ஆதித்யன் தன்கிரணங்களாலே ஹிமவானில் ஹிமத்தை உபாதாநம்பண்ணி, அத்தாலே ஆகாசத்திலே மங்கிக்கிடக்கிற ஆத்மாவை க்ரஹித்து மேகத்திலே புகவிடக்கடவன்; அங்கே அந்தஹிமம் வர்ஷரூபேண வர்த்தி(வயி-ல்)க்குமளவுங்கிடந்து வர்ஷதாரைகளோடே பூமியிலே பதிக்கக்கடவன்; அந்தஜலம் ஸஸ்யத்துக்கு தாரகமாய்ப் புகுமளவிலே தத்த்வாரா ஸஸ்யத்திலே புகக்கடவன்; அந்தஸஸ்யம் பக்வமாய் அந்நரூபேண பரிணமிக்குமளவுங்கிடந்து, அந்நமானது புருஷசரீரத்திலே புகுந்து சுக்லமாய் பரிணமிக்குமளவுஞ்செல்ல அங்கே கிடந்து, ஸ்த்ரீபுருஷஸம்யோகத்தாலே சுக்லத்வாரா ஸ்த்ரீசரீரத்திலேபுகுந்து, (க) "ஙஞ்சம்யாமாஹுதாவாப: புருஷவசஸோபவந்தி" என்கிறபடியே கர்ப்பமாய் பரிணமிக்கக்கடவன்; கர்ப்பவாஸம்பண்ணும்போது; (உ) "அத்யாம்லகடுதீக்ஷ்ணோஷ்ண லவணைர்மாத்ருபோஜநை: । அதிதாபிபிரத்யர்த்தம் வர்த்தமாநாதிவேதந:" என்கிறபடியே மாத்ருபோஜநத்தில் அந்தர்ப்பூதங்களான க்ரூரத்ரவ்யங்களாலே \$ தொடரிவிட்ட ஈயம்போலே துடியாநிற்கும்; இந்த க்லேசத்தோடே † கர்ப்பதும்பமாகிற பையிலே கட்டுண்டு, அவயவங்களை

(க) "பஞ்சம்யாமாஹுதாவாப: புருஷவசஸோபவந்தி" (உ) "அத்யாம்லகடுதீக்ஷ்ணோஷ்ண லவணைர்மாத்ருபோஜநை: । அதிதாபிபிரத்யர்த்தம் வர்த்தமாநாதிவேதந:"

\$ தொடராவது – ஈயமுருக்குகைக்குறுப்பாக மண்ணாற்செய்யப்பட்டதொரு பாத்ரவிசேஷம். † கர்ப்பதும்பம் – கர்ப்பகோளம்.

நீட்டமுடக்கமாட்டாதே, (க) "[illegible]" என்கிறபடியே க்லேசாநுபவித்து, பால்யதசையில் அசுசிப்ரஸ்ரவங்களிலே கிடந்து, (உ) "[illegible]" என்கிறபடியே – தின்றவிடத்தைச் சொரிதல், கடித்தவற்றைத் துவட்டுதல் செய்யமாட்டாதே, தாரகாதிகளும் பராதீநமாய், இப்படி க்லேச அதிசைசவகாலத்தைப் போக்கி, தானே ஒரு ப்ரவ்ருத்தி பண்ண க்ஷமனானவளவிலே, (ங) "[illegible]" என்கிறபடியே பகவத்ப்ரவணனாக ப்ராப்தமாயிருக்க, (ச) "[illegible]" என்னுமிவையோடே காலத்தைப்போக்கி யௌவநாவஸ்தையிலே நரகஹேதுவான விஷயாந்தரங்களோடே போதுபோக்கி, ஜரையிலேவந்து அகப்பட்டு அசக்தியோடே காலக்ஷேபத்தைப் பண்ணி, நினைவின்றியேயிருக்கச் செய்தே மரணம் ப்ராப்தமாக, (ரு) "[illegible]" என்கிறபடியே உத்க்ரமணதசையிலே க்லேசத்தை யநுபவித்து அநந்தரம் ம்ருத்யுபரவசனும்.

இப்படி ஸம்ஸாரிகளுடைய அநர்த்த பரம்பரைகளைக்கண்டு, (சா) "[illegible]" என்கிறபடியே பரமஸுஹ்ருத்தான ஸர்வேச்வரன் இவனுடைய உஜ்ஜீவநார்த்தமாக, (எ) "[illegible]" என்கிறபடியே சாஸ்த்ரத்தைக் காட்டிக்கொடுத்தான். எங்ஙனே யென்னில்;–வேதாந்தத்திலே, (அ) "[illegible]" இத்யாதி வாக்யங்களாலே சிதசிதீச்வர தத்வத்ரயங்களையும் பிரியக் காட்டிக்கொடுத்து, அந்தர்யாமி ப்ராஹ்மணத்தாலே, (கூ) "[illegible]" என்று அந்த(க்ஷு)னுக்குக் கண்ணைக் கொடுத்தாற்போலேயும், இருட்டறையிலே விளக்கேற்றிக்காட்டினாற்போலேயும், சேதநா சேதநங்கள் சரீரம், ஈச்வரன் சரீரியென்றும், ஈச்வரனோடு சேதநாசேதநங்களுக்குள்ள ஸம்பந்தத்தைக் காட்டிக்கொடுத்து, (க0) "[illegible]" இத்யாதி வாக்யங்களாலே சேதநனுக்கு அசித்ஸம்பந்தம் கர்மோபாதிகமென்று காட்டிக்கொடுத்து, (கக) "[illegible]" இத்யாதி வாக்யங்களாலே ஔபாதிகமான அசித்ஸம்ஸர்க்கமற்று, ஒருதேசவிசேஷத்திலே ஸூரிபோக்யமான போகத்தை அநுபவிக்குமது ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தமென்று காட்டிக்கொடுத்து, இப்படி ஈச்வரன் உபகரித்தவிடத்திலும் பாபப்ராசுர்யத்தாலே இத்தைக்கைவிட்டு வேதபாஹ்யராயும் இதுக்குள்ளே புகுந்து, (கஉ) "[illegible]" என்கிறபடியே விளக்கிலே, "விட்டில்" என்று சிலபதார்த்தங்கள் நசித்துப்போமாப்போலே, வேததாத்பர்யமறியாமையாலே குத்ருஷ்டிகளாய் நசித்துப்போக, தாம்பண்ணின வேதப்ரதாநம் அகிஞ்சித்

(க) "க்லேசாந்நிஷ்க்ராந்திமாப்நோதி ஜந்துர்மாதுரபாதுர:" (உ) "கண்டூயநேபிசாசக்த: பரிவர்த்தேப்யநீச்வர: । ஸ்நாநபாநாதிகாஹாரமவாப்நோதிபரேச்சயா" (ங) "தஸ்மாத்பால்யேவிவேகாத்மாயதேதச்ரேயஸேஸதா" (ச) "பால்யேக்ரீடநகாஸக்தா:" (ரு) "க்லேசாதுத்க்ராந்திமாப்நோதி யாம்யகிங்கரபீடித:" (சா) "ஸுஹ்ருதம்ஸர்வபூதாநாம்" (எ) "மாநம்ப்ரதீபமிவகாருணிகோததாதி" (அ) "க்ஷரம்ப்ரதாநம்" (கூ) "ஏஷஸர்வபூதாந்தராத்மா" (க0) "த்வாஸுபர்ணா" (கக) "ததாவித்வாந்புண்யபாபேவிதூய" (கஉ) "தத்ரைவகேபிசபலாச்சலபீபவந்தி"

காமாயதுகையாலேஹலைப்புறத்தில் செல்லாததேசத்திலே எடுத்துவிடும் ராஜாக்களைப்போலே ஸம்ஸாரிஸஜாதீயனாய் வந்தவதரித்த விடத்திலும், "வைதுநின்னைவல்லவாபழித்து" என்கிறபடியே உள்ளசக்தியடங்க பகவந்நிந்தைக்குடலாயும், ஹிரண்யாவணாதிரூபத்தாலே எதிரம்புகோத்து நசித்தும் இப்படி அவதாரமும் கார்யகாமாகாத விடத்திலும் உடையவன் உடைமையை விடமாட்டாத சாபலத்தாலே இவர்களுடைய ஆபிமுக்யத்திலே அவஸரப்ரதீக்ஷனாய் வர்த்திக்க, சேதநர்பக்கலிலே யாத்ருச்சிக ஸுக்ருதமென்று ஒன்றுபிறக்க, அதுவ்யாஜமாக விசேஷகடாக்ஷம் பண்ணி அத்தாலே அத்வேஷம்பிறந்து அதடியாகப் பண்ணின விசேஷகடாக்ஷத்தாலே ஆபிமுக்யம்பிறந்து, அநந்தரம் சாஸ்த்ரவாஸனையாலும் ஆசார்யோபதேசத்தாலும் ஈச்வரன் நிருபாதிகசேஷி யென்றும் இவ்வாத்மா அவனுக்கு அநந்யார்ஹசேஷமென்றும் யதாஜ்ஞாநம்பிறந்து, அநந்தரம் ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தத்திலே ருசிபிறக்குமளவுட் தன்னுடைய விசேஷகடாக்ஷத்தாலே புருஷார்த்த லாபத்துக்கு உபாயமேதோவென்று புபுத்ஸைபிறந்தவளவிலே, சாஸ்த்ரஸித்தமான கர்மாத்யுபாயங்களைக் காட்டிக்கொடுத்து, இது துஷ்கரம் என்றும் விளம்ப்யபலப்ரதமென்றும் ப்ரமாதஸம்பாவனை யுள்ளதென்றும் இவற்றில் இழிய இருய்த்தவர்களுக்கு வேதாந்த ஸித்தமான தன்னுடைய உபாயபாவத்தைக் காட்டிக்கொடுக்க, பக்தியினுடைய துஷ்கரதையோபாதி ப்ரபத்திநிஷ்டாஹேதுவான மஹாவிச்வாஸமும் சிலர்க்குக் கிட்டவரிதாகையாலே இதில் இழியக் கூசினவர்களுக்கு ஸர்வாதிகாரமான யாத்ருச்சிகபகவந்நாம ஸங்கீர்த்தநமே சேதநருடைய பாபத்தைப்போக்கி ஸுக்ருதாநுகூலமாக கர்மயோகாதிகளிலே மூட்டுதல், ப்ரபத்தியிலே மூட்டுதல், விரோதியைப்போக்கிப்ராப்யத்தைக் கொடுக்கைக்குத்தானே நிர்வாஹகமாதலாம்படியான வைடவத்தை யுடைத்தாயாத்துத்திருநாமத்தினுடைய வைபவமிருப்பது. அதற்கு ப்ரமாணமேதென்னில்; (க) "கிஜுவநுச்ஃவ்யுஶிதஜஹ்ஃ ஜஜ நஸஂஸா ஙவயுநாக" என்றும் (உ) "யாதிஸஹ்ரநாம நழ" என்றும்—உபோத்காத பலச்ருதிகளிலே சொல்லி, நடுவே திருநாமத்தைச் சொல்லுகையாலே, இவ்வாழ்வார் இப்படிப்பட்ட திருநாமத்திலே யிழிந்தவராகையாலே அத்திருநாம வைபவத்தைப் பேசுகிறார் - இப்ரபந்தத்தாலே.

திருநாமத்தில் இவர் இழிகைக்கடி ஸ்ரீவிஷ்ணுதர்மம். அதுதனக்கு வக்தாவார்? ச்ரோதாவார்? அது விளைந்தபடியெங்ஙனே யென்றால்;- பாண்டவர்களுக்கு இவ்வருகே நாலைந்து தலைமுறை சென்றவளவிலே, "ஸ்ரீசதாநீகன்" என்பானொரு ராஜாவுளனாய், அவன் பகவத்விஷயீகாரமுள்ளஸந்தாநத்திலே பிறந்தானொருவனாகையாலே பரமஸாத்விகனாய், அபிஷிக்தனானவன்றே தொடங்கிச் சிறியத்தைப் பெரியது நலியாதபடி நாட்டைரக்ஷித்து, அத்ருஷ்ட சேஷமாக இவர்களுக்கு நம்மால் செய்யலாவ தென்னென்று ஸ்ரீசௌநகபகவான் பக்கலிலேசென்று, "தேஹபோஷணபாராய் மூலையடியே திரிகிற ஸம்ஸாரிகளுக்குஉஜ்ஜீவநோபாய மாயிருப்பதொன் றருளிச்செய்யவேணும்" என்று கேட்க; "காலம் கலிகாலமாயிருந்தது, பாபப்ராசுர்யத்தாலே வேறொன்றுக் கதிகாரிகளில்லை, ஸர்வாதிகாரமான பகவந்நாம ஸங்கீர்த்தநமே ஆத்மாக்களுக் குஜ்ஜீவநோபாய மாயிருப்பது" என்றருளிச் செய்தான். அங்கு ஸ்ரீசௌநகபகவாந் வக்தா, சதாநீகன் ச்ரோதா; இங்கு—ஆழ்வார் வக்தா, பெரியபெருமாள் ச்ரோதா; அங்கு- அஜ்ஞாத ப்ரச்நம்; இங்கு- ஜ்ஞாதப்ரச்நம். ஜ்ஞாதம் ப்ரச்நவிஷய

(க) "கிஞ்ஜபந்முச்யதேஜந்துர்ஜந்மஸம்ஸாரபந்தநாத்" (உ) "யாதிப்ரஹ்ம ஸநாதநம்"

மாவா னென்னென்னில், (க) "கிம் ம்ருஷ்டம் ஸுதவசநம்" என்கிறபடியே — ஆழ்வார் வாயாலே திருநாமவைபவத்தை யருளிச்செய்யக் கேட்கையிலுண்டான ப்ரீதியாலே. இன்னமு மிவ்வாழ்வார்க்கு பகவத்விஷயத்தை ப்ரகாசிப்பிக்கிற ச்ருதிகளிலும் வேதோபப்ர்ம்ஹணம் பண்ணின ரிஷிகளிலும், அல்லாத ஆழ்வார்களிலும், இவர்க்கு நெடுவாசியுண்டு; எங்ஙனேயென்னில்;— (உ) "யதோவா இமாநி பூதாநி" இத்யாதிவாக்யங்களாலே ஜகஜ்ஜந்மஸ்திதிலயஹேதுவான ஜகத்காரணவஸ்துவைச்சொல்லி, (ங) "காரணந்து த்யேய:" என்கிறபடியே அதுவே உபாஸ்ய மென்று இவ்வளவாலே த்யேயவஸ்துவைச்சொல்லி, (ச) "ஸப்ரஹ்மா" இத்யாதி ஸாமாந்யவாசி சப்தங்களுக்கு விசேஷாகாங்க்ஷை யுண்டாகையாலே ஸ்ர்ஷ்டிவாக்யகதி ஸாமாந்யந்யாயத்தாலே, (ரு) "ஏகோ ஹவை நாராயண ஆஸீத்" என்று விசேஷித்து இவ்வளவாய்த்து ச்ருதிசொல்லிற்று; வேதோபப்ர்ம்ஹணம் பண்ணின ரிஷிகள், (சா) "அஜாயமாநோ பஹுதா விஜாயதே" என்கிற ச்ருத்யுபப்ர்ம்ஹணமான இதிஹாஸபுராண முகத்தாலே திருவவதாரங்களை ப்ரகாசிப்பித்தார்கள்; அதில் ஸ்ரீவால்மீகிபகவான் ராமாவதாரத்திலே மண்டினான்; ஸ்ரீபராசரபகவான் க்ர்ஷ்ணாவதாரத்திலே மண்டினான்; ஸ்ரீசௌநகபகவான் அர்ச்சாவதாரவைபவத்தை, (எ) "தாமர்ச்சயேத் தாம்ப்ரணமேத் தாம்யஜேத் தாம் விசிந்தயேத்" இத்யாதிகளாலே ப்ரகாசிப்பித்தான்; ஆழ்வார்களிலே முதலாழ்வார்கள், மேன்மைக் கெல்லையான பரத்வத்திலும் நீர்மைக்கெல்லையான திருமலையிலும் மண்டினார்கள்; நம்மாழ்வாரும் பெரியாழ்வாரும் க்ர்ஷ்ணாவதாரத்திலே ஊன்றியிருப்பர்கள்; திருமங்கையாழ்வார் உகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் மண்டினார்; அர்ச்சாவதார ஸாமாந்யமு மன்றிக்கே பெரியபெருமாளையல்லது வேறறியாதிருப்பா ரொருவராய்த்து - இவர்.

அர்ச்சாவதார ஸாமாந்யத்திற்காட்டில் கோயிலுக்கேற்ற மென்னென்னில்,— காவேரியானது ப்ரவாஹமும் ஏகரூபமாய் ஸ்தலமும் அதுவாயிருக்கச்செய்தே தீர்த்த விசேஷங்களிலே ரஸவிசேஷங்களுண்டா கிறப்போலே, போக்யதாதிசயத்தால் வந்த ஏற்றம் வேறொரு இடத்துக்கில்லை; அல்லாதாரில் இவர்க்குண்டான ஏற்றம்போலே ப்ரபந்தாந்தரங்களிற் காட்டில் இப்ப்ரபந்தத்துக்கு நெடுவாசியுண்டு. எங்ஙனேயென்னில்; — "நீராய் நிலனாய்" என்று தொடங்கி "சிவனாயயனானாய்" என்று - சேதநாசேதநவாசி சப்தங்களாலே ஈச்வரனைச் சொல்லுகிற விந்த ஸாமாநாதிகரண்யத்துக்கு, (அ) "அநுப்ரவேசக்ருதம் ஸாமாநாதிகரண்யம்" என்று நிர்வஹிக்கவேண்டும் அருமையாதல், "முனியேநான்முகனே முக்கண்ணப்பா" என்று தோற்றுகிற த்ரிமூர்த்தி ஸாம்யத்தை நிர்வஹிக்கவேண்டு மருமையாதல், இன்னமும் சப்தத்திலருமையாலே ஸ்வார்த்தத்தையறிகைக்கு அருமைப்படவேண்டுதல் செய்யுமிக் குறைகளொன்று மின்றிக்கே யிருக்கையும்; கடல்போராழமாயிருக்கச் செய்தேயும் நீர்த்தெளிவாலே தறைதோற்றுமாப்போலே சப்தத்தின் சேர்வையாலே ப்ரமேயம் கரத்திருக்கச் செய்தேயும் உள்ளதடங்கத் தோற்றும்படி யிருக்கையும். இன்னமும் ப்ரணவம்போலே சப்தம் அத்யல்பமாய் அர்த்த க்ரஹணமரிதாயிருத்தல் இவ்விரண்டு குறையுமின்

(க) "கிம்ம்ர்ஷ்டம் ஸுதவசநம்" (உ) "யதோவா இமாநிபூதாநி" (ங) "காரணந்துத்யேய:" (ச) "ஸப்ரஹ்மா" (ரு) "ஏகோ ஹவைநாராயண ஆஸீத்" (சா) "அஜாயமாநோபஹுதாவிஜாயதே" (எ) "தாமர்ச்சயேத் தாம்ப்ரணமேத் தாம்யஜேத்தாம் விசிந்தயேத்" (அ) "அநுப்ரவேசக்ர்தம் ஸாமாநாதிகரண்யம்"

றிக்கே, ஒருசேதநனுக்கு ஜ்ஞாதவ்யமாய், பரந்த கடங்குகளைச் சுருங்க ப்ரயோகவர்த்தி செய்துகொடுத்தாப்போலே ஸகலார்த்தங்களும் இப்ரபந்தத்துக்குள்ளே உண்டாகையாலும் ப்ரபந்தாந்தரங்களில் காட்டில் இப்ரபந்தத்துக்கு வைலக்ஷண்யமுண்டு.

அ. முதல்பாட்டு. திருநாமம், யமவச்யதையைத் தவிர்த்துத்தருமென்று இதினுடைய பாவநத்வத்தையும், திருநாமங்கற்றாருடைய ராஜகுலத்தையும் சொல்லுகிறது.

மூ.—காவலிற் புலனைவைத்துக் கலிதன்னைக் கடக்கப்பாய்ந்து
நாவலிட் டுழிதருகின்றோம் நமன்றமர் தலைகண்மீதே
மூவுல குண்டுமிழ்ந்த முதல்வ நின்னாமங்கற்ற
ஆவலிப் புடைமை கண்டா யரங்கமா நகருளானே. க.

ப-ரை.— மூ உலகு—ஸகலலோகங்களையும், உண்டு—ப்ரளயாபத்திலே திருவயிற்றிலே வைத்துரக்ஷித்து, உமிழ்ந்த—பின்பு வெளிநாடுகாணப் புறப்படவிட்ட, முதல்வ—ஜகத்காரணபூதனானவனே, நின்—தேவரீருடைய, நாமம்—திருநாமத்தை, கற்ற—ஆசார்ய முகேந அப்யஸித்த, ஆவலிப்புடைமை—செருக்கினாலே, புலன்—பஞ்சேந்த்ரியங்களையும், காவலில் வைத்து—அப்ராப்தவிஷயங்களில் செல்லாதபடியடக்கி, கலிதன்னை—இந்த்ரியங்களை வசப்படுத்துகைக்கு ப்ரதிபந்தகமான பாபராசியை, கடக்கப்பாய்ந்து—ஸவாஸநமாகப் போக்கி, நமன் தமர் தலைகள்மீது—யமன்தலையிலும் அவன் படர்கள்தலையிலும், நாவலிட்டு—நாவல்கூறிக்கொண்டு, உழிதருகின்றோம் கண்டாய்—ஸஞ்சரியாநின்றோம் கிடாயென்கிறார்.

வ்யா. காவலில் புலனைவைத்து. காவலில்லாதபடி இந்த்ரியங்களைவைத்து. அதாகிறது - மேல்சொல்லுகிற லாபங்களுக்கு அநுகூலமாகச் செய்ததொன்றில்லை யென்கையும், அவ்வளவேயன்றியே, (க) "நூவஶாஃ" என்னும்படியே விஷயப்ராவண்யங்களில் நியதியின்றிக்கே போந்தபடியும். விஹிதங்களை யநுஷ்டித்தல் நிஷித்தங்களை விடுதல் செய்யாதவனென்கை. இதுக்கடியாகக் கொண்டிருந்த ஸ்ரீவிஷ்ணு தர்மத்திலும், (உ) "ஸாமாஜிஹிலதிஜிமெஃ" என்று — அஜிதேந்த்ரியரானவர்களுக்கும் பகவத்ப்ராப்த்யுபாயமேது என்றிறே கேட்டது. ஆக இப்படி சேதநன்றான் மூலையடியே திரிந்தாலும் அவன் தோஷங்களைப்போக்கி மேல்சொல்லுகிறநன்மைகளைக்கொடுக்கும்படியாயாய்த்துத் திருநாமத்தினுடைய ப்ரபாவமிருப்பது. ஒருவன் விஷதஷ்டனானால் விஷவித்யையில் குசலனாயிருப்பானொருவன், "ஸோகமே என்னெய்வார்க்கவுமாம், குளிக்கவுமாம், உறங்கவுமாம், ஸ்வைரஸஞ்சாரம் பண்ணவுமமையும், நான் அழுகிதாகப் போக்கித்தருகிறேன்" என்னுமிறே; அப்படியேயாய்த்து ஸம்ஸாரவிஷதஷ்டனைக் குறித்துத் திருநாமப்ரபாவமிருப்பது. "வைத்து" என்கிறவிது-புத்திபூர்வகமாக அக்நியிலே மூட்டிப்போந்தேனென்கை. காவலில்லாதபடியென்றால் சப்தம் வசிக்குமோ வென்னில்; மீமாம்ஸகர் சப்தத்தை நியமித்தாகிலும் அர்த்தத்தை முக்யமாகக் கொள்ளுமாப்போலே, இங்கும் அர்த்தகௌரவத்தாலே சப்தத்தை நியமித்துச் சொல்லுகிறோம். அங்ஙனன்றியே காவலிலே புலனைவைத்தென்னவுமாம். அந்தபக்ஷத்தில் இது ஸாதநகோடியில்புகாதே பலஸாத்யகோடியிலே புகக்கடவது. அதாவது-இதரவிஷயங்களிலே மண்டித்திரிந்த இந்த்ரியங்களைத் திருநாமத்தை யண்டைகொண்ட பலத்தாலே சிறையிலே வைத்தபடி. அராஜகமாய்க் கிடந்தகாலம் குறும்புசெய்தாரை, ராஜ்யமானவாறே ராஜாவை யண்டை கொண்டு சிறையிலே வைக்குமாப்போலே. அதவா,

(க) "ஹீபஶஃ" (உ) "ராகாதிபிராஜிஜிதைஃ"

அபராபத விஷயங்களில் மண்டித்திரிந்த இந்த்ரியங்களை ப்ராபத விஷயத்திலே மூட்டினேனென்னவுமாம். (க) "ஹம்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" என்னும்படியான விஷயமாகையாலே அப்ராப்த விஷயங்களில் போகாதபடி தன்பக்கலிலே யாக்கிக் கொள்ள வல்லவயிரவருக்கான விஷயமிறே.

கலிதன்னைக்கடக்கப்பாய்ந்து. அஜிதேந்த்ரியத்வத்துக்கு அடியான பாபராசியை வாஸனைபோடே போக்கி. "தன்னை" என்றது - த்ர்ஷ்டத்தில் விஷய ப்ராவண்ய ஹேது, அத்ர்ஷ்டத்தில் நாகஹேது, பகலத்வைமுக்யஹேது, தேஹாத்மாபிமாநஹேது, இன்னமும் அநர்த்தங்களுக் கடியான கனத்தை நினைத்து என்னை நியமித்துப் போந்ததுதன்னையே, நானிப்போது நியமித்தேனென்கை. "கடக்க" என்றது - அஸ்ப்ர்ஷ்ட ஸம்ஸாரகந்தரிலே யொருவன் என்னலாம் படியிருக்கை. அதாகிறது - வந்து கழிந்ததென்று தோற்றுதபடியிருக்கை. "கலி" என்று - காலபரமானபோது க்ர்தயுகபுருஷர்களிலே யொருவனென்று சொல்லலாம்படி யிருக்கை. திருவடி ஸமுத்ரதரணம் பண்ணினாப்போலே இவர் பாப ஸமுத்ரத்தைக் கடக்க வல்லரானார்.

"நின்னுமங்கற்ற" என்று - திருநாம வைபவத்தாலேவந்த வித்தைத் தந்தலையாலே வந்ததாகச் சொல்லுவானென்னென்னில்; திருநாமத்துக்குள்ளதொரு ஸ்வபாவமாய்த்திது. இராமட மூட்டுவாரைப்போலே முகந்தோற்றுமே நின்று உபகரிக்கையாலே யிவன்றானே செய்துகொண்டானாக அபிமாநிக்கலாயிருக்கும். இனிப(ஸ)லம் தன்னதாகையாலே "பாய்ந்து" என்னத்தட்டில்லை. தாம் தேஹஸம்ஸ்ர்ஷ்டராயிருக்கச்செய்தேயும் இத்தை, "கடந்து" என்னலாம்படியிறே பெரியபெருமாள் இவரை விஷயீகரித்தது. நாவலிட்டுழிதருகின்றோம் நமன்றமர்தலைகள்மீதே. பாபபலத்தை யநுபவிப்பிக்கும் யமனுடைய தலையிலும் அவன் மனுட்டித்தலையிலுமடியிட்டு ஸஞ்சரியாநின்றோம். நலிந்துபோந்த யமபடரை ஓருபேனாயிட்டுத் துகைக்கிறார் காணும். "நாவலோ நாவல்!" என்றும், "அறையோவறை" என்றும், தோற்றவர்கள்முன்னே ஜயித்தவர்கள் சொல்லுஞ்சொல்லு. முன்பு யமாதிகள்பேர்கேட்க அஞ்சிக்கிடந்தவிவர், திருநாமத்தையண்டைகொண்டபலத்தாலே அவர்கள்யமன்வாசலிலேசென்று தலையிலேயடிவைத்து அறைகூவுகிறாரிறே. வாலிபேர்கேட்க அஞ்சிச்சுரமடைந்து கிடந்த மஹாராஜர், பெருமாளை யண்டைகொண்டபலத்தாலே கிஷ்கிந்தாத்வாரத்திலே சென்றறைகூவினாப்போலே. அங்கு - நாமி பலம்; இங்கு - நாம பலம். "உழிதருகின்றோம்" என்றது - தம்மிடிக்குத்தோற்ற நின்று நிர்ப்பயஸஞ்சாரம் பண்ணுகிறபடி. "பாபத்துக்கு நீயெழுதிவைத்த பட்டோலையைக்கொண்டுவாவல்லையாகில் புறப்படாய்" என்றாப்போலேயிருக்கிறதாய்த்து. "உழிதருகின்றோம்" என்கிற பஹுவசநத்தாலே — திருநாமம்ஸிக்க வாயிலேபட்டவாறே இவர் சதசாகமாகப் பணைத்தபடி. அதவா, இதின் இயலை அப்யஸித்து இதில் அத்வேஷமுடையாரையுங் கூட்டிக்கொள்ளுகிறாராய்த்து. ஸமுத்ரலங்கநம் முதலாகலங்கையிலுண்டான பராக்ரமமெல்லாம் திருவடி தானொருவனுமே செய்தானாயிருக்க, பிராட்டியைக்கண்ட ப்ரீதிக்குப்போக்குவீடாகமதுவநமழிக்கிற ப(ஃ)லத்திலே யெல்லாமுதலிகளுக்கும் அந்வயமுண்டானாப்போலே, ஒருத்தனுக்கு ராஜகுலஸம்பந்தமுண்டானால் அவன் பந்துக்களு மவனையென்னென்றுருமடங்க வாழக்கடவதிறே; அவ்வளவுமில்லையாகிறதன்றே பகவத்ஸம்பந்தத்துக்கு.

---

(க) "பும்ஸாம்த்ர்ஷ்டிசித்தாபஹாரிணம்"

கெல்லாம் ஸஞ்சாரஸ்தலம் வேணுமென்று அவன் பரிகரத்தையுங் கூட்டிக்கொள்ளுகிறார். லோகத்திலே பாபம்பண்ணினார் தப்பலாநுபவத்துக்கஞ்சி யமன்பேரிடுவார், அவன்மேலேகன் பேரிடுவாராய், "யமம்தர்ப்பயாமி, சித்ரகுப்தம்தர்ப்பயாமி" என்று ஆராதியாநிற்க, திருநாமத்தையண்டைகொண்டபலத்தாலே அவர்கள்தலையிலே அடியிடுகிறோ மென்கிறாரிறே யிவர். தம்மைக் கீழ்நலிந்த யமாதிகளை இப்போதொருபேசையிட்டுத் துகைக்கிறார்காணும். இவர் தமக்கு விஜயமாகச்சொல்லுகிறாரித்தனைபோக்கி, அவன்தான் தன்தலைகண்டது திருநாமங்கற்றார் திருவடிகளிலே வணங்கவென்றாய்த்திருப்பது. (க) "ப்ரணாமம்யெலிக...ஹி தேஷாமேவ நமோ நம:" என்னக்கடவதிறே. (உ) "ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய பாசஹஸ்தம் - ப்ரபுரஹமந்யந்ருணாம் நவைஷ்ணவாநாம்" என்றது - கேவலம் தேஹபோஷணபரராயிருப்பார்க்குக்காண் நான் நிர்வாஹகனாயிருப்பது, மற்றைப்படியே வைஷ்ணவர்கள் எனக்கு நிர்வாஹகராய்க்காணிருப்பதென்றபடி. [திறம்பேல், மின்கண்டீர் - இறைஞ்சியுஞ்சாதுவராய்ப் போதுமின்களென்றான்] இவர்களைக்கண்டால் அநுகூலவர்த்திகளைப் பண்ணி தாந்த(ரா ஜ)ராய்ப்போருங்கோளென்கிறான். இப்படி தானும் பயப்பட்டுத் தன்பட(ஹ)ரையும்நியமித்துக்கொண்டிறே யமனிருப்பது.

லோகமடங்க யமபீதராயிருக்க, "நமன்றமர்தலைகள்மீதே நாவலிட்டுழிதருகின்றோம்" என்கைக்கு வந்த நன்னேற்றமென்னென்று பெரியபெருமாள் திருவுள்ளமாக; மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ என்கிறார். ப்ராதேசிகனைப்பற்றினேனாகிலன்றோ அவனுக்கஞ்சவேண்டுவது, ப்ரளயாபத்திலே ஸகலலோகங்களையும் திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்து, அங்கிருந்து நெருக்குண்ணாதபடி வெளிநாடுகாணப் புறப்படவிட்ட ஜகத்காரணபூதனானவனே. ப்ரளயாபத்திலும் ஸ்ருஷ்டிவேளையிலும் அந்த யமாதிகளோடு என்னோடு வாசியற ஸர்வநிர்வாஹகனானவனல்லையோ. நம்மைப்பற்றி இந்த நன்மையெல்லா முண்டாய்த்தென்நீரே என்ன; உன்னருகுவந்திலேன், * நின்னாமங்கற்ற ஆவலிப்பு - உன் திருநாமத்தைக் கற்றபலமென்னுதல்; கர்வமென்னுதல்.

"நின்னாமம்" என்றது - * ஓராயிரமாயுலகேழளிக்கும் பேரன்றோ, தேவரீரைப் போலேயோ திருநாமம், கட்டிப்பொன்னுக்கும் பணிப்பொன்னுக்குமுள்ள வாசியோராதோ தேவரீர்க்கும் திருநாமத்துக்கும். மறுவலிடும் ப்ரளயாபத்திலன்றோ தேவரீரெடுத்தது, ஸம்ஸாரப்ரளயத்தில் நின்று மெடுக்கும்போது தேவர் திருநாமம் வேண்டாவோ. "நீளரவைச் சுற்றிக்கடைந்தான் பெயரன்றே தொன்னரகைப் பற்றிக்கடத்தும்படை." இ "மந்தாம்" என்னுதொழிந்தது - காலநியமமென்ன, அதிகாரநியமமென்ன, அதிகாரிநியமமென்ன, இவை தொடக்கமானவை வாராமைக்காக. இடமினவன் "அம்மே" என்னும்போது ஒருசடங்கு வேண்டாவிறே. நஞ்சீயர், "அப்ரயதனாய்க்கொண்டு திருநாமம் சொல்லலாமோ" என்று பட்டரைக்கேட்க; "கங்காஸ்நாநம் பண்ணப்போமவனுக்கு உவர்க்குழியிலே தோய்ந்து போகவேணுமோ, மேலுண்டான நன்மைகளைப் பண்ணிக்கொடுக்கவற்றானது கீழுள்ள அசுத்தியைப் போக்கமாட்டாதோ" என்றருளிச்செய்தார். வாயாலே திருநாமம் சொல்லுகைக்கு ஆகாரநியமில்லை, மாத்ருகாதுகனுக்கும் கைசலித்தால் அம்மேயென்ன ப்ராப்தி

(க) "ப்ரணாமம்யேபிகுர்வந்தி தேஷாமபிநமோநம:" (உ) "ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய பாசஹஸ்தம் - ப்ரபுரஹமந்யந்ருணாம்நவைஷ்ணவாநாம்" இ 8ஜு மென்றபடி.

உண்டாயிறே யிருப்பது. " கற்ற " என்றது - ஆசார்யோச்சாரணாநூச்சாரண க்ரமத்தாலே வந்ததாயிருக்கை. பெரியபெருமாள் சொல்லுவித்த வசந்தரம் சொன்னவராய்த்து இவர். கற்றவென்றது - ஸார்த்தமாகவன்றிக்கே சப்தமாத்ரத்தை அப்யஸிக்கை. ஆவலிப்புடைமை. வைச்ரவணனென்னுமாப் போலேயாய்த்துத் திருநாமஸம்பந்தத்தால் வந்தஐச்வர்யம். கண்டாய். இவ்வர்த்த முபதேசிக்கவேண்டியிருந்ததோ, என்வடிவிலே தெரியாதோ. ரஸாயந ஸேவைபண்ணினரையும் மண்தின்றாரையும் வடிவிலேதெரியாதோ. நான்பண்டையவனென்று தோற்றுகின்றதோ, மண்தின்றவன் முகம்போலேயிருந்ததோ என்முகமும். அரங்கமாநகருளானே. இங்குவந்து சாய்ந்தருளிற்றுத் திருநாமம் சொல்லவல்லானொருவனைக் கிடைக்கவற்றோவென்னும் நசையாலேயன்றோ. ஸத்யஸங்கல்பராகையாலே தேவரீருடைய நினைவு ஸபலமாகப்பெற்றதிறே. மாநகர். ராஜா இன்னமண்டபத்தேயிருந்து நினைப்பிட்டானென்றால் பின்னை அவன்தன்னாலும் தவிர்க்கவொண்ணாதா யிருக்குமாப்போலே, இங்கே யிருந்து விஷயீகரித்ததென்றால் இனி தேவராலுந் தவிர்க்கப்போமோ.

மாநகர். ஸாம்ஸாரிகமான ஸர்வ்யவஹாரமறுமிடம். முன்பு அநீதியிலே கைவளர்ந்து அஸதஸ்யனாய் நால்வரிருந்தவிடத்தில் சென்றேறமாட்டாதே யிருந்தவன், தனக்கே பொரு ராஜகுல ஸம்பந்தமுண்டானால் ஸதஸ்ஸைமதியாதே சென்றேறுகையும், அவர்கள் சிரஸாவஹிக்கையுமாயிறேயிருப்பது; அப்படியே, முன்பு யமாதிகளுக்கஞ்சிக்கிடந்து இடமறியாதே போந்தவர், இப்போது திருநாமஸம்பந்தத்தாலே யமாதிகள் தலையிலேயடியிட்டுத் திரியும்படியான ராஜகுலத்தைச் சொல்லிற்றாய்த்து. ... ... ... ... க.

அ.— இரண்டாம்பாட்டு. திருநாமத்தினுடைய பாவநத்வமும் அதுகற்கையாலே தமக்குப்பிறந்த ராஜகுலமும் சொல்லிற்று - கீழ்; இதில் - திருநாமத்தினுடைய போக்யதையைச் சொல்லுகிறது. ஆனால் பின்னைபோக்யதையைச்சொல்லி பாவநத்வத்தைச் சொன்னாலோ வென்னில்; பயம் போனாலிறே ரஸ்யதையிலேயிழிவது, ஜ்வரமநுவர்த்தியா நிற்க பால்ரஸிக்குமோ; முன்புபாபத்தைக் கூடபூரித்து யமபீதனாயிருக்கிறவனுக்கு அந்த பயம் நிவர்த்தமானாலல்லது போக்யதையிலே நெஞ்சுசெல்லாதிறே. (க) " யந்நாமஸங்கீர்த்தநதோ மஹாபயாத் விமோக்ஷமாப்நோதி நஸம்ஶயம் நர: " என்று - ரிஷிகள், திருநாமம் பயநிவர்த்திக்கு ஹேதுவாகச் சொல்லுவர்கள்; ஆழ்வார்கள், " பிழைப்பில் பெரும்பெயரே பேசி " என்று - போக்யதா ப்ரகர்ஷத்தைச் சொல்லுவர்கள். இத்திருநாமந்தான் ப்ரயோஜநாந்தர பார்க்கு ப்ரயோஜநத்தைக் கொடுக்கும்; உபாயாந்தரநிஷ்டர்க்கு உபகரணமா யிருக்கும்; ப்ரபந்நர்க்கு தேஹயாத்ராசேஷமா யிருக்கும். முத்துப்படுந்துறையில் மூக்குவார், முத்தைக்கொடுத்துப் பழங்கொள்ளுவர்கள்; * செழுமுத்து வெண்ணெற்கெனச் சென்று மாறுவர்களிறே. விலையறியுஞ் செட்டிபக்கல் புகுந்தவாறே பெருவிலையனாம்; செருக்கரானார் இத்தைப்பூண்டநுபவிப்பர்கள்; அப்படியே ப்ரயோஜநாந்தர பார்க்கு மூறுப்பாய், ஸாதநாந்தரநிஷ்டர்க்கு மூறுப்பாய், ப்ரபந்நர்க்கு ஸ்வயம் ப்ரயோஜநமுமாயாய்த்து இத்திருநாம மிருப்பது.

கீழே " நின்னுமங்கற்ற " என்ன நின்றீர், நம்பேர் சொன்னார்க்கு நாங்கொடுக்கக்கடவ தொருநாடுண்டு, அத்தை அவர்களால் கொள்ளோமென்ன வொண்ணாது, அத்தைக்

(க) " யந்நாமஸங்கீர்த்தநதோ மஹாபயாத் விமோக்ஷமாப்நோதி நஸம்ஶயம்நர: "

கொள்ளீரென்று பெரியபெருமாளருளிச்செய்ய; திருநாமஞ் சொல்லும்போதை ரஸமொழிய அவ்வருகுபோ யநுபவிக்கும் ரஸமெனக்கு வேண்டா வென்கிறார்.

மூ.—பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச்செங்கண்
அச்சுதா வமரரேறே யாயர்தங் கொழுந்தேயென்னும்
இச்சுவைதவிர யான்போ யிந்திரலோக மாளும்
அச்சுவை பெறினும் வேண்டே னரங்கமா நகருளானே. உ.

ப-ரை.— அரங்கம் மாநகர் உளானே—ஆச்ரிதார்த்தமாகக் கோயிலிலேவந்து நித்ய வாஸம் பண்ணுமவனே, மா—ச்லாக்யமான, பச்சை மலைபோல்—மரதககிரியையொத்த, மேனி—திருமேனியையும், பவளம்-பவளத்தையொத்த, வாய்-திருவதரத்தையும், கமலம்-தாமரைமலரையொத்த, செம் கண்—சிவந்த திருக்கண்ணையு முடையனாய், அச்சுதா—ஆச்ரிதரையொருக்காலும் நழுவவிடாதவனே, அமரர் ஏறே—* அயர்வறுமமரர்க ளதிபதியானவனே, ஆயர் தம் கொழுந்தே—இடையருக்கும் பசுக்களுக்கும் நியாமகனானவனே, என்னும்—என்கிற, இ சுவை தவிர—இப்படியநுபவிக்கும் ரஸத்தைவிட்டு, யான்—திருநாமம் சொல்லுகைக்குப் பாங்கானநாவையுடையனானநான், போய்—நெடுந்தூரம்போய், இந்திர லோகம் ஆளும்—பரமபதத்தை ஆளுகிற, அ சுவை பெறினும்-அந்தபோகத்தைக் கிட்டப் பெற்றாலும், வேண்டேன்—விரும்பேனென்கிறார்.

வ்யா. பச்சைமாமலைபோல் மேனிபவளவாய்க் கமலச்செங்கண் அச்சுதாவமரரேறே ஆயர்தங் கொழுந்தே யென்னுமிச்சுவை. இந்தரஸமிருந்தபடி கண்டீர், உமக்குத் தான் புறம்பே போவென்ன வேண்டியிருந்ததோ வென்கிறார். பச்சைமாமலைபோல்மேனி. பச்சை நிறத்தை யுடைத்தாய் ச்லாக்யமா யிருப்பதொரு மலைபோலே யாய்த்துத் திருமேனியிருப்பது. காணப் புக்கால் கண்ணும் குளிர்ந்து நெஞ்சுங்குளிரும்படி ச்லாக்யமா யாய்த்திருப்பது. தாபத்ரயாதுரருடைய ஸகலதாபங்களும் கண்டபோதே ஆறும்படியாய்த்துத் திருமேனி யிருப்பது. நெய்தினுங்கினைப்போலே அகவாயில் தண்ணளியினுடைய செறிவெல்லாம் வடிவிலே காணலாம்படி யிருக்கை.

"மாமலை" என்றது - பூஜ்யமான மலையென்றபடி. ப்ரதமத்தில் சுபாச்ரயமாய் பின்பு நித்யா நுபாவ்யமா யிருக்கும் ச்லாக்யதையைச் சொல்லுகிறது. மலையானது ஸ்தைர்யத்துக்குக் கொப்பாய், வளர்த்திக்கு மொப்பா மித்தனை யொழியத் திருமேனியி லுண்டான போக்யதாதிசயமெல்லா மில்லையே அதுக்கு.

மேனி. (க) "ஆநந்தமயஃ" என்கிற ஸ்வரூபமும் ஆநந்தாதி குணங்களுமல்ல இவரையுகப்பிப்பது, இவையிரண்டும் அகவாயிலே யாம்படியான இவ்வடிவாய்த் திவரையுகப்பிப்பது. (உ) "இச்சாக்ருஹீதாபிமதோருதேஹஃ," "குன்றுடுகொழுமுகில் போல் குவளைகள்போல் குரைகடல்போல் நின்றுடுகணை மயில்போல் நிறமுடைய நெடுமால்" என்னக்கடவதிறே. கழுத்தேகட்டளையாக நீரைமுகந்து போக மாட்டாதே மலையினுச்சியிலே சாய்ந்தமேகம்போலவும், கண்ணாலேமுகந்து அநுபவிக்கக் குவளைகள் போலவும், அநுபவித்து முடிக்கவொண்ணாமைக்குக் கடல்போலவும், வைத்தகண்வாங்க

(க) "ஆநந்தமயஃ" (உ) "இச்சாக்ருஹீதாபிமதோருதேஹஃ"

வொண்ணமைக்கு மயில்திரள் போலவுமாய்த்து இத்திருமேனியிருப்பது. (க) "விஷ்ணு ஜநவிஸ்மயதாந்து ஸஞ்சாரிணீ ஸ்திமித நீரதவாஸராணாம்। ஸ்ரீரங்கபர்த்ரு ரநவஸ்ய தநுஸ் ஸமாநா ஸாராவலீவ ஸ்ரீ தமுகாருரேவை:"

பவளவாய் கமலச்செங்கண். திருமேனி ஒருபெருங்கடல் போலேயாய், அதிலே கொண்டுமுழுகுஞ் சுழிகள்போலேயாய்த்து இவ்வாவயவங்களிருப்பது. திருமேனிக்கு பரபாகமான பவளம் படர்ந்தாப்போலே யாய்த்துத் திருவதரத்திலழகிருப்பது. மலையிலே பவளம் படர்ந்தாப்போலேயிருக்கை. சந்த்ரோதயத்தில் கடல் கொந்தளித்தாப்போலே ஆச்ரிதமுக சந்த்ரதர்சநத்தாலே வந்தவழகு ஒதமேறினபடி. (உ) "உதுலாஸாஸ்யுதி ஸ்தா" என்கிறபடியே ஆச்ரிதரை வினவுகிற திருவதரமிருக்கிறபடி.

கமலச்செங்கண். ஜீவநாத்ருஷ்டத்தாலே இத்திருப்பவளத்துக்குத் தப்பினாரையு மகப்படுத்திக் கொள்ளும் கண்கள். வாயால்சொல்லமாட்டாத குறைபுங்கண்ணாலேயிறே தலைக்கட்டுவது. (௩) "ஜோவநாஸஹாஸிவேதிவ" என்கிறபடியே அகவாயில் வாத்ஸல்யாதி குணங்களுக்கு ப்ரகாசமாயிருக்கிறபடி. மென்மை குளிர்த்தி நாற்றம் தொடக்கமானவற்றுக்கொரு போலியாமத்தனையல்லது அகவாயில் தண்ணளிபெல்லாமில்லையே யதுக்கு. "'விக்ரஹமில்லை, குணமில்லை, விபூதியில்லை' என்கிற குத்ருஷ்டிகள் ஸஞ்சரிக்கிற ஸம்ஸாரத்திலே இப்படி விக்ரஹத்தை ஆதரித்த விவர்கள் உத்தேச்யராகப் பெற்றோமே" என்று ஜீயரருளிச் செய்வர்.

அச்சுதா. த்ருஷ்டாந்தமாகச்சொன்ன மலை பவளம் தாமரைபோலே நாள்செல்லநாள் செல்லச் செவ்விமாறுதல், தானழிதல் செய்யாதே ஏகரூபமாயிருக்கை. (௪) "ஸமேதக ரூபரூபாய" என்னக்கடவதிறே. அதவா, இச்செவ்வி மாறாதே செல்லவேணுமென்று மங்களாசாஸநம் பண்ணுகிறாரென்றுமாம். "சேவடிசெவ்வி திருக்காப்பு" என்னக்கடவதிறே. இவ்வழகிலே அகப்பட்டாரை ஒருநாளும் நழுவவிடா னென்றுமாம். அமரரேறே. இவ்வழகை ஸதாதர்சநம் பண்ணும் போக்தாக்களைச் சொல்லுகிறது. காலமெல்லாமிடைவிடாதே அநுபவியாநின்றாலும் எல்லைகாணவொண்ணாதபடி அவ்வருகாயிருக்கை. "அயர்வறுமமரர்களதிபதி" என்னக்கடவதிறே. அவ்வநுபவம் மாறினால் முடியுமவர்களென்று தோற்றுகைக்காக, அநுபவத்தினுடைய அவிச்சேதத்தாலே "அமரர்" என்கிறது. (௫) "ஸதாபஸ்யந்தி ஸூரய:" என்னக்கடவதிறே. ஆனால் பிராட்டி திருவடி திருவனந்தாழ்வான் போல்வார்கள் அநுபவிக்குமதாய் அதிக்ராதிகாசமாயிருக்கிறதோ வென்னில்; ஆயர்தங்கொழுந்தே. மேன்மைக்கெல்லையானவர்களுக்கு நியாமகனாயிருக்குமாப்போலே தாழ்வுக்கு எல்லையான இடையர்க்கும் பசுக்களுக்கும் ஸுலபனானபடி. வடிவழகும் மேன்மையும் நீர்மையு மொருபகுங்கூட்டாயிறே பரத்வ மிருப்பது.

என்னும். இஸ்வபாவங்களை அநுபவித்தோ உமக்கு இவ்வினிமை பிறந்ததென்னில்; அங்ஙனன்று, திருநாமத்தினுடைய உக்திமாத்ரத்தாலே வந்தவினிமை. இச்சுவைதவிர-

(க) "விஞ்சேதிமஞ்சஜந மிந்திரயா தடித்வாந் பூஷாமணித்யுதிபி ரிந்த்ரதநுர்த்ததாந:। ஸ்ரீரங்கதாமநி தயாரஸ நிர்ப்பரத்வாதத் சௌசயாளுரிவ சீதள காளமேக:"
(உ) "வசஸாஸாந்த்வயித்வா" (௩) "லோசநாப்யாம் பிபந்நிவ" (௪) "ஸதைகரூபரூபாய" (௫) "ஸதாபஸ்யந்தி ஸூரய:"

இந்தரஸத்தைவிட்டு. சுவை-ரஸம். கைப்பட்டத்தை விட்டு இவ்வறுசுவைக்கு வேறேயொரு சுவை யிருந்தவிடந்தேடிப் போகச்சொல்லுகிறீரோ. இவருடைய அறுசுவை யிருக்கிறபடி. திருநாமத்தை உம்முடைய நாக்கிலேயிட்டுப் பாராமையிறே நான் உபதேசிக்க வேண்டுகிறது. யான். திருநாமம் சொல்லுகைக்குப் பாங்கானநாவையுடையநான். யான், ஒருதேசவிசேஷத்தே போயநுபவிக்குமளவும் விளம்பத்தை ஸஹியாதத்வரையையுடைய நான். போய். கோயிலுக்கணித்தா யிருக்கையுமன்றியே நெடுங்கை நீட்டான அத்தூரமெல்லாம் போய். இந்திரலோகம். நிரவதிகைச்வர்ய யுக்தனுடைய லோகம். "ப்ரஹ்மேந்த்ராதி சப்தங்கள் பரமாத்மவாசகம்" என்கிற வேதாந்த வாஸனை தோற்றவருளிச்செய்கிறார். ஆளும். "ஆள்மின்கள் வானகம்" என்னும்படியே இஷ்டவிநியோகார்ஹமாம்படியிருக்கை. அச்சுவை-இச்சுவை. அதுச்ருதிஸித்தம், இது ப்ரத்யக்ஷஸித்தம்; அதுகேட்டார்வாய் கேட்டுப்போமது; இது கைப்பட்டது. பெறினும் வேண்டேன். கிட்டுமளவும் வேண்டாவென்கிறீர், கிட்டினவாறே நீரே அதிலே தோள்மாறுகிறீரென்ன; பெற்றாலுமெனக்குவேண்டா. அத்தைத்தந்து பார்க்கலாகாதோ நான் ஆதரிக்கும்படிகாணவென்கிறார். "உறுது" என்றொழிந்தது தம்மிலுமளவுடையார் நித்யாநுபவம் பண்ணுகிற விஷயத்துக்குக் குற்றஞ்சொன்னோமாகவொண்ணாதென்று; இன்னமுமதுக்கு உத்கர்ஷம் சொல்லுகிற ப்ரமாணங்களையும் அநாதரித்தாராவர். பால் கைக்கும் புளிக்குமென்னிலன்றோ பிணங்கவேண்டுவது, அதுதான் வேண்டேனென்பாரைச் செய்யலாவதில்லையே. (க) "ஹாவொநாகு அஹுதி" என்றவனைச்செய்யலாவதுண்டோ.

பரமபதம் வேண்டாவென்ன இங்குத்தை நன்மையேதென்ன; அரங்கமாநகருளானே. பரமபதத்திலநுபவத்தைவிட்டு, இவ்வழகையும் சீலத்தையு மிங்குள்ளாரை அநுபவிப்பிக்கைக்கு வந்து கிடக்கிறது போராதோ. தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கிற நீர்மையை அநுபவிக்கைக்கு அங்குள்ளாரு மிங்கேவாராநிற்க என்னை அங்கே போகவிடத் தேடுகிறதென். இத்தால் சொல்லிற்றாய்த்து - இங்கேயிருந்து திருநாமத்தை அநுபவிக்குமினிமைக்கு பரமபதாநுபவமும் ஸத்ர்சமன்றென்னும்படி தமக்குத் திருநாமம் ரஸித்தபடியைச் சொல்லிற்றாய்த்து. ... ... ... ... ... ... ... உ.

அ. மூன்றாம்பாட்டு. வேதநூல். உமக்குப் பரமபதம் வேண்டாவாகில் கோயிலோடே தோள்தீண்டியான ஸம்ஸாரத்திலேயிருந்து திருநாமத்தை அநுபவியுமென்றுபெரியபெருமாளருளிச்செய்ய; அத்தையும் நிரூபித்தவாறே திருநாமம் சொல்லுகைக்கு அவகாசமில்லாதபடி துரிதபரம்பரையே யாயிருந்தது, ஆகையாலே எனக்கு அதுவேண்டாவென்ன; திருநாமம் சொல்லுகைக்கவகாச மில்லாதபடி ஸம்ஸாரத்துக்கு நீர்சொல்லுகிற குறையென்னென்று கேட்டருள; ஸம்ஸாரத்தினுடைய தோஷங்களை உபபாதித்துக் காட்டுகிறார். இத்தால் பழகிப் போருகிற ஸம்ஸார யாத்ரையிலும் ஜுகுப்ஸை பிறக்கும்படி திருநாம மினிதென்றம்முகத்தாலே திருநாமத்தினுடைய போக்யதா ப்ரகர்ஷத்தைச் சொல்லுகிறது.

மூ.—வேதநூற் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவரேலும்
பாதியு முறங்கிப்போகும் § நின்ற விப்பதினையாண்டு
பேதைபாலகனதாகும் பிணிபசி மூப்புத்துன்பம்
ஆதலாற் பிறவிவேண்டே னரங்கமா நகருளானே. ௩.

(க) "பாவோநாந்யத்ரகச்சதி". § "நின்றதிற்பதினையாண்டு" என்றும் பாடம்.

ப-ரை.— அரங்கமாககருளானே—, மனிசர்காம்—மநுஷ்யர்கள், வேதம் நால்—வேத சாஸ்த்ரத்தின்படி, நூறு பிராயம்— நூறுஸம்வத்ஸரம், புகுவரேலும்—ஜீவித்திருப்பார்களே யாகிலும், பாதியும்—அதில்பாதியான ஐம்பதுஸம்வத்ஸரமும், உறங்கி போகும்—நித்ரை யாலே கழியும்; நின்ற—மிகுந்திருக்கிற, இ பதினை ஆண்டு—இந்த ஐம்பது ஸம்வத்ஸரங்களை யென்றால்; பேதை—தாயின் அறிவின்படி நடக்கும் குழவிப்பருவமும், பாலகன்—செய்யும் தீம்பைக்கண்டார் கடியவொண்ணுத பால்யப்பருவமும், அது ஆகும்—விஷயப்ரவணராய்த் திரியும் யௌவநப் பருவமும், பிணி—முலையடியே திரிவதாலுண்டான வ்யாதியும், பசி—பஞ்சேந்த்ரியங்களுக்கும் ஐம்புலனிலுண்டான ஆசையும், மூப்பு—கிழத்தனமும், துன்பம்—துன்பமுமாய்த் தலைக்கட்டும்; ஆதலால்—இப்படியிருக்கையாலே, பிறவி—ஹேயமாயிருக்கிறவுள்ள ஜந்மத்தை, வேண்டேன்—நான் ஒருக்காலும் விரும்பேன் என்கிறார்.

வ்யா. வேதநூல்பிராயம்நூறு. (க) "வேதசாஸ்த்ராவிரோதிநா" என்கிறபடியே வேதமாகிற நால்—வேதாக்யசாஸ்த்ரமென்னக்கடவதிறே. நூல்—சாஸ்த்ரம். அதவா, வேதங்களும் நூல்களுமென்னவுமாம். வேதங்களும், வேதார்த்தஜ்ஞாநமுடைய புருஷர்களுடைய வசநங்களும். பிராயம் நூறு. (உ) "சதாயுர்வை புருஷ:" என்றிறே சொல்லுவது; இதிறே பரமாவதி. இதுதான் ஓலைப்புறத்திலே கேட்டுப்போமித்தனை, புகுகைக்கு ஸம்பாவனையில்லை. அந்த நூல்தான் அளவுகோல் வாசியால்வந்த ஏற்றத்தாலே சிலர்பக்கலிலே நெடுவாசிபட்டிருக்கும், அத்தை வ்யாவர்த்திக்கிறது மனிசர் என்று. (ந) "நஜாயதே ம்ரியதே வா கதாசிந்நாயம் பூத்வா பவிதா வா ந பூய:" என்கிறபடியே—கல்பாதியிலே தோற்றி, கல்பாந்தத்திலே முடிவாயிருக்குமிறே; சிலர்க்கு அங்ஙனன்றியேயிருக்கை. நாம். கர்ப்பந்தொடங்கி மரணத்துக்கு யோக்யமாயிருக்க, தமக்கொரு ஜீவநமும் பரிக்ரஹமுங்காணென்று க்ஷேபிக்கிறார். புகுவரேலும். முதலிலே புகுவாரில்லை, கர்ப்பத்திலே முடிதல், ஜநியாநிற்கமுடிதல், பிறந்துமுடிதல், நாலுநாளிருந்து முடிதல், பால்யத்திலே முடிதல், செருக்கித்திரியும் யௌவநத்திலே முடிதல், ஜரையிலே முடிதலாய், மரணத்தை நிர்ணயிக்க அரிதாம்படியிறேயிருப்பது. (ச) "கர்ப்பே விலீயதே பூயோ ஜாயமாநோஸ்தமேதி ச | ஜாதமாத்ரேச ம்ரியதே பாலபாவே ச யௌவநே || மத்யமம் வா வய: ப்ராப்ய வார்த்தகே வா த்ருவாம்ருதி:" என்னக்கடவதிறே. ப்ராணிகள் தங்களாயுஸ்ஸுபோகிறபடி ஒன்றையுமறியாதே உதயாஸ்தமயங்களைக்குறித்து உகவாநிற்பர்கள். (ரு) "நந்தந்த்யுதித ஆதித்யே நந்தந்த்யஸ்தமிதே ரவௌ | ஆத்மநோ நாவபுத்யந்தே மநுஷ்யா ஜீவிதக்ஷயம்." (சு) "ஜாயஸ்வ; ம்ரியஸ்வ", "மின்னின்னிலையில" "வாள்களாகி நாள்கள்செல்ல." புகுவரேலும். வருந்தி நூறுவயஸ்ஸுப்புக்காராகில்.

---

(க) "வேதசாஸ்த்ராவிரோதிநா" (உ) "சதாயுர்வை புருஷ:" (ந) "நஜாயதே ம்ரியதேவா கதாசிந்நாயம் பூத்வாபவிதாவாநபூய:" (ச) "கர்ப்பேவிலீயதேபூயோ ஜாயமாநோஸ்தமேதிச | ஜாதமாத்ரேச ம்ரியதேபாலபாவேதயௌவநே | மத்யமம்வாவய: ப்ராப்தவார்த்தகேவா த்ருவாம்ருதி:" (ரு) "நந்தந்த்யுதித ஆதித்யே நந்தந்த்யஸ்தமிதேரவௌ | ஆத்மநோநாவபுத்த்யந்தே மநுஷ்யாஜீவிதக்ஷயம்." (சு) "ஜாயஸ்வ, ம்ரியஸ்வ."

பாதியுமுறங்கிப்போகும். அதிலே செம்பாதி § கடிக்கூறுகப் பாழாய் நித்ரையாலே கழிம். பாதியுமுறங்கிப்போகிற கணக்கிலே, திருநாமஞ்சொல்லக்கடவ காலம் வ்யர்த்தமேபோதே! என்று வெறுக்கிறாராய்த்து. (க) "ஜமௌளமித்ராணுதந்த்ரீனு" என்ற — இளைய பருமாளைப்போலே யிருக்கவிறேயடுப்பது. (உ) "ஸதகங்கீர்த்தயந்த:" என்று ஸர்வகாலமும் திருநாமஞ்சொல்லவிறே கண்டது. நின்றதில் பதினையாண்டு. சேஷித்ததிலே தினைந்து ஸம்வத்ஸரம் பாலனும் யுவாவாயும் விஷயப்ரவணனும் இங்ஙனேகழியும். நின்ற இப்பதினையாண்டு" என்றபோது — சேஷித்தநாள், பதிற்றஞ்சு - ஐம்பது ஸம்வத்ஸரமென்றுகிறது. இவன் போசப்பொலியப் பாரிக்கிறகாலமெல்லாம் தமக்கொன்றுயிராமையாலே, "இது" என்று - க்ஷுத்ரமாகப்பேசுகிறார். பேதை. திருநாமஞ்சொல்லுகைக்கும் யாக்யதை யின்றிக்கே, தன்னுடைய ஹிதாஹிதங்கள் ஜநநியினுடைய புத்த்யதீநமாயிருக்கும் அத்யந்த சைசவம். பாலகன் அதாகும். பாலனுகிற அந்தவவஸ்தையாமென்றபடி. நிம்கள் செய்தாலும் பொடியவொண்ணுதபருவம். இவனை "திருநாமம் சொல்லிற்றிலன்" என்று வெறுக்கவொண்ணுதே. அதாகும். ததநந்தரமான அந்த அவஸ்தையா மென்றபடி. ததநந்தரம் யௌவநம்வந்து ப்ரவேசித்து விஷயப்ரவணனுய்த் திரியும். ஜநநியுடைய புத்த்யதீநமான பேதைத்தனமே நன்றெனும் படியாய்த்து இதின் அறிவுகேடிருப்பது. உள்ள அறிவு அக்ர்த்யகரணத்துக்கு உடலாகையாலே அந்தயௌவநம் கழிவதற்குமுன்னே வ்யாதிவந்து கைக்கொள்ளும். அத்தை வேரும் விறகுந்தேடி யொருபடி பரிஹரித்துக் கொள்ளக்கண்டு பசிதலைபெடுக்கும். பசிபாவது - ஸர்வேந்த்ரியங்களும் ஸ்வஸ்வ விஷயங்களிலே ப்ரவணமாகை. ஆரோக்யம் பிறந்தவாறே இந்த்ரியங்கள் தலையெடுத்து, "விஷயங்களைக் காட்டுக்காட்டு" என்று நலியத்தொடங்கும். "ஐவர் திசை திசைவலித் தெற்றுகின்றனர்" என்றும், "ஐவரைத்துத் தின்னிடவஞ்சி நின்னடைந்தேன்" என்றும் சொல்லக்கடவதிறே.

காலன்கொண்டு பாஹிம்ஸை பண்ணி த்ரவ்யார்ஜநம் பண்ணுகிறது இந்த்ரியங்களால்வரும் நலிவு தீர்க்கைக்கிறே. இங்ஙனே செல்லாநிற்க ஜரைவந்து கைக்கொள்ளும். ஜரையாகிறது — சாலப்பொல்லாததொன்றிறே. போகயோக்யதை யன்றிக்கே யிருக்கச்செய்தே சாபலம்நுவர்த்திக்குமிறே. "பண்டு காமரானவாறும்" என்று வ்ர்த்தகீர்த்தநம் பண்ணியாகிலும் தரிப்போமென்று பார்க்குமிவ்வளவிலே இடிவிழுந்தாற்போலே மரணம் வந்து உபஸ்திதமாம். துன்பம். இதுவே துக்கமாய் நிரன்வயவிநாசத்தோடே தலைக்கட்டும். (ங) "பாலெய்வ் க்ரீடநகாஸக்தா:யௌவநேவிஷயோந்முகா: | † அஜ்ஞாநயந்த்யசக்தாச்ச வார்த்தகம் ஸமுபஸ்திதம்." ஆதலால்பிறவிவேண்டேன். காடுபிடித்தார்க்கு ஒருகைக்காட்டியிட்டமும் திடரும்மணலும் மடையுமாக வெழுதி வெறும்பாழாக்கிக் காட்டுவாரைப்போலே, திருநாமஞ் சொல்லுகைக்கு அவகாசமில்லாதபடி உள்ளவாயுஸ்ஸைப் புறம்பே செல்லுகிறபடியைப் பேசி, பெரியபெருமாளுக்கு விண்ணப்பம் செய்கிறார். நீர், "அச்சுவைபெறினும் வேண்டேன்" "ஆதலால் பிறவிவேண்டேன்" என்று விபூதித்வயத்துக்கும் கண்ணழிவு

§ "கடிக்கூறுகப்பாழாய்" என்றது - ஒருசெய்யிலே செம்பாதி உழுமாய்ப்பாழாய்ப்போலே யென்றபடி. (க) "ஜமௌளமித்ராஞ்சதந்த்ரீஞ்ச" (உ) "ஸததம்கீர்த்தயந்த:" (ங) "பால்யேக்ரீடநகாஸக்தா யௌவநேவிஷயோந்முகா:|| அஜ்ஞாநயந்த்யசக்தாச்சவார்த்தகம் ஸமுபஸ்திதம்" † இது அநந்விதம்போல் தோற்றுகிறது.

சொல்லாநின்றீர், " நிற்பாயாகில் திருவாணை, கிடப்பாயாகில் திருவாணை " என்பாரைப் போலே நீர்படுத்துகிறதென்? நமக்கு விபூதித்வய மேயன்றோ வுள்ளதென்ன; அரங்கமாநகருளானே. விபூதித்வயத்துக்கும்புறம்பாய் த்ர(ஸ்ரீ)தீயாவிபூதியான கோயிலிலே எனக்குஜீவிருப்பரிதோ வென்கிறார். கோயிலில்வந்தால் அதிபால்யத்திலே அந்யப்ராசநத்துக்கு என்றுகிலும் திருவடிகளிலே கொண்டு புகுருவர்கள், க்ரீடாவஸ்தையிலும் (க) " பாலா அபிக்ரீடமாநாஃ " என்கிறபடியே செல்வரெழுந்தருளும்படியை அநுகரியா நிற்பர்கள். பக்வனானால் தான்விரும்பின விஷயங்களைப்பற்ற உள்ளே புகக்கடவனாயிருக்கும். பெருமாளுடைய வடிவழகும் அங்குத்தைபாவநத்வமும் விஷயாந்தரங்களில் ஆவக்கையுமறுக்கும். வ்ருத்தனாய் உள்ளேப்புகமாட்டாதவற்றைக்கு இவன்வாசலிலே வந்து நிற்பர். ஆக இப்படி வாஸிதமாகையாலே ஸ்வப்நத்திலுங்காண்பது இவர்வடிவேயாயிருக்கும். இனி (உ) " தேசோயம்ஸர்வகாமதுக் " என்கிறபடியே தேசந்தானே யெல்லா நன்மையும் பண்ணிக் கொடுக்கவற்று; ஆகையாலே கோயில்வாஸம் அடிக்கழஞ்சு பெற்றுச் செல்லா நிற்குமிறே. ௩.

அ. நான்காம்பாட்டு. மொய்த்த. கீழ் மூன்றுபாட்டாலும் - ஸ்வலாபத்தைப் பேசினாராய், மேல் பதினொருபாட்டாலே — பரோபதேசம் பண்ணுகிறார். ஸ்வாநுபவத்தைவிட்டு இவர் பரோபதேசம் பண்ணுகைக்கு ஹேதுவென்னென்னில்; ப்ராப்தமுமாய் ஸுலபமுமான இவ்விஷயத்தை ஸம்ஸாரிகளிழக்கிற இழவு பொறுக்கமாட்டாமையாலும், இவ்விஷயந்தான் ஸம்ஸாரிகளைப் பெற்றல்லது தனியநுபவிக்க அரிதாகையாலும், (௩) " ஏகஸ்ஸ்வாது நபுஞ்ஜீத " என்கிறபடியே அநுபூதாம்சம் பிறரை அநுபவிப்பித்தல்லது நிற்கமாட்டாத ப்ரக்ருதியாகையாலும், பரோபதேசத்திலே ப்ரவர்த்தராகிறார். இதில் முதல்பாட்டு, ஸம்ஸாரிகள், பாபிகளான எங்களுக்குத் திருநாமஞ்சொல்லுகைக்கு யோக்யதையுண்டோவென்ன; ப்ராயச்சித்த ஸாத்யமல்லாதபடி பாபப்ரசுரனான க்ஷத்ரபந்துவும் திருநாமப்ரபாவத்தாலே பரமபதப்ராப்தியைப் பண்ணினபடியைக் கேட்டார்க்கு 'அயோக்யன்' என்று அகல விரகுண்டோ வென்ற விடத்திலும் விமுகராகக்கண்டவாறே அத்தைக்கேட்டுவைத்து பாபபலமான ஜந்மாதிக்லேசத்தை அநுபவிப்பதே! என்று விஸ்மிதராகிறார்.

மூ.—மொய்த்தவல் வினையுள்நின்று மூன்றெழுத்துடைய பேரால்
கத்திரபந்துமன்றே பராங்கதி கண்டுகொண்டான்
இத்தனை யடியரானார்க் கிரங்குநம் மரங்கனாய
பித்தனைப் பெற்றுமந்தோ பிறவியுள் பிணங்குமாறே. ௪.

ப-ரை.—மொய்த்த—மொய்த்துக்கொண்டு கிடப்பதாய், வல்—காலதத்வமுள்ளதனையும் அநுபவித்தாலும் நசியாததான, வினையுள் நின்று—பாபமாகிற ஸமுத்ரத்தின் உள்ளே நின்று, மூன்று எழுத்து உடைய பேரால்—மூன்றெழுத்தையுடைய கோவிந்தாவென்னும் திருநாமத்தாலே, கத்திரபந்தும் அன்றே—க்ஷத்ரபந்துவுமன்றோ, பராங்கதி—உத்க்ருஷ்டகதியான பரமபதத்தை, கண்டுகொண்டான்—கண்டநுபவிக்கப்பெற்றான்; இத்தனை அடியர்

(க) " பாலா அபிக்ரீடமாநாஃ " (உ) " தேசோயம்ஸர்வகாமதுக் " (௩) " ஏகஸ்ஸ்வாது நபுஞ்ஜீத "

ஆனார்க்கு—மநஸ்ஸஹகாரமின்றிக்கே "கோவிந்தா" என்னும்திருநாமத்தை வாயால் உச்சரிக்கும் தாஸபூதருக்கு, இரங்கும்—இரங்கி க்ருபைசெய்தருளுமவராய், நம் அரங்கனாய—நமக்கு ஸ்வாமியான அழகியமணவாளனாகிற, பித்தனை—ஸௌசீல்யகுண யுக்தனானவனை, பெற்றும்—கிட்டி அநுபவிக்கப் பெற்றிருந்தும், பிறவியுள்—ஜந்மங்களிலகப்பட்டு, பினங்கும் ஆறு—வருந்துகிறபடியே!; அந்தோ—ஐயோவென்று வெறுக்கிறார்.

வ்யா. மொய்த்தவல்வினை. பாபங்கள்மிகைத்து அஹமஹமிகயா, "நான் முற்பட நான் முற்பட" என்று மேல்விழுந்து மொய்த்துக்கொண்டு கிடக்கிறபடி. தேன்கூட்டை ஈ மொய்த்துக் கொள்ளுமாப்போலே மொய்க்கை. "நெய்க்குடத்தைப் பற்றியேறு மெறும்புகள்" என்னக்கடவதிறே. முதலிகள் லங்கையை 'எனக்கு' என்னுமாப்போலே. (க) "மேரு மந்தர மாத்ரோபி" (உ) "இஷீகதூலமக்நௌப்ரோதம்." ஜகத்ஸ்ர்ஷ்டியில் ஈச்வரனுக்குண்டான சக்திபோரும் சேதநனுக்கு பாபஸ்ர்ஷ்டியிலுண்டான சக்தியும். வல்வினை. ஒரு பாபந்தானே காலதத்வமுள்ளதனையும் அநுபவிக்கவேண்டும் படியாயிறே அதின்கநமிருப்பது. (௩) ["யத்ப்ரஹ்மகல்பநியுதாநுபவேபி"] ஒருஸர்வசக்தி போக்குதல் தவிருதல் செய்யவேண்டும்படியிறே பாபத்தின் கநமிருப்பது. உள்நின்று. ஸமிதையிடா மாணி போலே தானே சூழ்த்துக்கொண்டு கிடக்கிறபடி. நடுக்கடலிலே ஒரு க்ஷுத்ரஜந்து நின்று அலையுமாப்போலே, அணுபரிமாணவஸ்து, பாபஸமுத்ரத்திலே நின்றலைகிறபடி. "சிறியனேலும் செய்வினையோ பெரிதால்" என்னக்கடவதிறே. நின்று. பாபங்களுக்கு இடையா தொழிகை. (ச) "ஸர்வம் ஸஹேமே" என்னக்கடவதிறே. நெருப்பிலே கால்பாவினாப்போலே, பாபங்களிலேவேர்விழுவதே!. மூன்றெழுத்துடையபேரால். மூன்றெழுத்தையுடைய திருநாமத்தாலே. "கெடுமிடராயவெல்லாம்" இத்யாதி.

பாபங்களைப்பண்ணின காலப்பரப்பும் பாபத்தின் கநமும் போலேயிருக்கிறதோ பாபவிமோசநமென்னில்; "மூன்றெழுத்து" என்கிறது - ஒரோ திருவக்ஷரமே போருமென்கைக்காக. ப்ரக்ருதிப்ரத்யய யோகத்தாலே பதமாயிருக்கையன்றியே மூன்றக்ஷரமாயிருக்கை. 'ஓர் அயுதாக்ஷரீ, ஸஹஸ்ராக்ஷரீ' என்னுமவைபோலே முடிந்ததாய்விடவற்றே என்றிருக்குமதன்றே இது. பேரால். மந்த்ரமென்னுதொழிந்தது, 'ரிஷிச்சந்தோதேவதை சக்திபீஜம் வர்ணம் விநியோகத்யாநம்" என்னுமாப்போலே, சிலசடங்குகளுண்டாய் அதிக்ர்தாதிகாரமாயிருக்கையன்றியே ஸர்வாதிகாரமாய், ஸ்த்ரீயால் ஸாத்யமாயிருக்கை. இடறினவன் "அம்மே" என்னுமாப்போலே இடர்வந்தபோது ஸர்வருக்கும் சொல்ல ப்ராப்தியுண்டாயிருக்கை. இன்ன திருநாமமென்னாதே "மூன்றெழுத்துடையபேரால்" என்றது—ருசிபிறந்தவன்று உபதேசிக்கைக்காக ஆச்சாதிக்கிறார்; "மூன்றெழுத்ததனை" என்று பெரியாழ்வார் மறைத்தாப்போலே.

கத்திரபந்தும். (ரு) "க்ஷத்ரபாணாஸ்யஹம்" இதி-க்ஷத்ரபந்துஃ. "ப்ரஹ்மபந்துஃ" என்னுமாப்போலே. சகாரத்தாலே-தன்மைக்கெல்லை நிலமான இவனும். அன்றே. நம்முதலிகள் கோஷ்டியில் "நாலூரான்" என்றாப்போலே, ரிஷிகள் கோஷ்டியில் "க்ஷத்ரபந்து"

(க) "மேருமந்தரமாத்ரோபி" (உ) "இஷீகதூலமக்நௌப்ரோதம்" (௩) "யத்ப்ரஹ்மகல்பநியுதாநுபவேபி" (ச) "ஸர்வம்ஸஹேமே" (ரு) "க்ஷத்ரியாணாமயம்"

என்றால் செவி புதைக்கும்படியாயாய்த்திருப்பது. (க) "ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே, அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம ॥" பராங்கதி கண்டுகொண்டான். பாபவிமோசநமே பலம்போந்திருக்க அவ்வளவன்றிக்கே, ஸ்வர்க்காதி பலங்களினளவுமன்றிக்கே, ஐச்வர்யகைவல்யங்களளவுமன்றிக்கே உத்தமபுருஷார்த்தத்தைக்கிடீர்! லபித்தது. ஸம்ஸாரிகளில் கடையானவன் அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தருடைய அநுபவத்தையிறே பெற்றது. கண்டுகொண்டான். என்றது- இழந்தது பெற்றாப்போலே யிருக்கை. திருநாமம்சொன்னதுக்குப் பலம்பெற்றானாயிருக்கையன்றிக்கே தன்னதுதான் பெற்றானாகவாய்த்து இவன் நினைத்திருப்பது. அஜ்ஞாநத்தாலே மறைந்துகிடந்ததாய் பகவத்விஷயிகாரத்தாலே அதில் நிவர்த்திபிறந்தால், ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான வ்ருத்திவிசேஷமும் ப்ரகாசிக்குமித்தனையிறே. (உ) "ப்ரகாச்யந்தே ந ஜந்யந்தே" என்னக்கடவதிறே.

இத்தனையடியரானார்க்கு. க்ஷத்ரபந்துவினளவு ஆநுகூல்யமுடையார்க்கென்னுதல். ஈச்வரன்சேஷி, நீ சேஷபூதன் என்றால் அதில் அத்வேஷமுடையார்க்கென்னுதல்; (ங) "பதிம்விச்வஸ்ய" (ச) "யஸ்யாஸ்மி" என்று சிலர் சொன்னால் மாத்ஸர்யம் அதிர்ந்திராதிருக்கை. இவ்வளவைக்கொண்டு "அடியரானார்க்கு" என்னலாமோவென்னில்; பகவதபிப்ராயத்தாலே அருளிச்செய்கிறார். (ரு) "ஆராசாமோபிஸர்வாசி" என்று தொடங்கி, (சு) "நிர்த்தோஷம் வித்திதம் ஜந்தும் ப்ராப்தாமர்ப்பமாத்மநா" என்னக்கடவதிறே. "இத்தனை" என்கிற விதுதான் மேருமந்தரம்போலே மலையலே சுமந்தாப்போலேயாய்த்து இருக்கிறது அத்தலைக்கு. (எ) "ப்ரமிஷ்டாந்தே நம உக்திம் விதேய" என்னக்கடவதிறே. இரங்கும். அத்வேஷயுக்தனுக்கு இது புருஷார்த்தமாம்போது ஸ்வாபாவிக ஸம்பந்தத்தாலே இத்தலையிலாபிமுக்யத்திலே அவஸர ப்ரதீக்ஷனாயிருக்கையிறே. பெருகியதுதன்னை. இத்தலையிலுள்ளது விலக்காமை, பேற்றுக்கிதெங்ஙனேபோரும். அன்றின்றதன்னுக்குத் தாயிரங்குமாப்போலே தானேயெல்லாம் செய்தாலும் "ஒன்றும் செய்திலோம்" என்றுமிரக்கமேயாய்த்து உள்ளதென்றுமாம். "உன்னடியார்க்கென்செய்வனென்றேயிருத்தி நீ" என்னக்கடவதிறே.

நம்மரங்கனுய. அகிஞ்சநரான நமக்காகவிறே கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுகிறது. பரமபதம் நித்யர்க்கும் முக்தர்க்கும்; திருப்பாற்கடல் முக்தப்ராயரான ஸநகாதிகளுக்கும் ப்ரஹ்மாதிகளுக்கும்; அவதாரங்கள் தத்காலீநரான பாக்யாதிகர்க்கு; கோயிலில்நிலை தேசகாலங்களுக்குப் பிற்பாடரான நிர்ப்பாக்யர்க்கு முகங்கொடுக்கவிறே. "நம்" என்றது க்ஷத்ரபந்துவோடு ஸகோ(ஜா)த்ரிகளான நமக்கும் ஸாலபனான இடமென்கை.

பித்தனே. பித்தராகிறார்- பூர்வாவஸ்தையில் ஜ்ஞாநமின்மையிலேயொழிந்தார். தன்னையுமறியாதே பிறரையுமறியாதே யிருக்குமவசென்றுமாம். அதாகிறது — கொள்ளுமவன் சிறுமை பார்த்தல், கொடுக்கிறவன் பெருமைபார்த்தல், கொடையின் சீர்மைபார்த்தல்

(க) "ஸக்த்யக்தேபந்துலோகேந தஸ்மிந்துர்வ்ருத்தசேதஸி । சித்ராஞ்சகாரஸமூகீ க்ஷத்ரபந்தௌ தயாபர:" (உ.) "ப்ரகாச்யந்தே ந ஜந்யந்தே" (ங) "பதிம்விச்வஸ்ய" (ச) "யஸ்யாஸ்மி" (ரு) "ஆராசாமோபிஸர்வாசி" (சு) "நிர்த்தோஷம் வித்திதம் ஜந்தும் ப்ராப்தாமர்ப்பமாத்மநா" (எ) "ப்ரமிஷ்டாந்தே நம உக்திம் விதேய"

செய்யவறியா திருக்குமவனென்கை. பெற்றும் தான்குறைவாளனே யாகிலும் குறைநீர்க்கும் ரக்ஷக னிருந்தவிடத்தே செல்லவேணுமிறே. அது வேண்டாதபடி பூர்ணனானான் "என்னைக்கொள்வாருண்டோ" என்று கிடக்கிறவிடம். அந்தோ! பிறவியுள் பிணங்குமாறே. ஸுலபமான விஷயத்தைவிட்டுப் போனாலுமாமிறே - போய்ப்பெறுகிற விஷயம் இந்தோடு துல்யமாயிருக்குமாகில். ஐச்மாதிகளிலே தானகப்பட்டுக் கிடக்கச்செய்தே அந்யோந்யம் விவாதம்பண்ணி முடிந்துபோவதே! என்று வெறுக்கிறார். ஒரு $ விடக்கைப்பற்றி இரண்டு பதார்த்தம் விவாதம் பண்ணுமாப்போலே, அத்யந்தஹீநமாய் இருவர்க்கும் பாத்தம்போராத விஷயங்களைப்பற்றி ஸ்பர்த்தைபண்ணித் திரிவதே!. அந்தோ. ஸர்வேச்வரனுக்கு ஸ்ரீகௌஸ்துபத்தோபாதி ஸ்ப்ருஹாவிஷயமான ஆத்மவஸ்து இப்படிபடுவதே! என்று, தர்மஹாநிகண்டால் "படுகுலைபடுகுலை" என்பாரோபாதி வெறுக்கிறார். ப்ராப்தமுமாய் ஸுலபமுமாய் ஸுசீலமுமான இவ்விஷயத்தை விட்டு, அப்ராப்தமுமாய் துர்லபமுமாய் துச்சீலமுமான விஷயங்களைப்பற்றி க்லேசிக்கக்கண்டால், தார்மிகரானவிவர்க்குப் பொறுக்கப்போமோ.

அ. ஐந்தாம்பாட்டு. பெண்டிரால். "பிறவியுட்பிணங்குமாறு" என்று - விலக்ஷண விஷயத்தை விட்டு துர்விஷயங்களைப்பற்றி அநர்த்தப்படுவதே! என்று வெறுத்தார்-கீழ்; ஏன்றான், ஷோடசவயஸ்கைகளான ஸ்த்ரீகள் ஸஞ்சரிக்கிற ஸம்ஸாரத்துக்குப் பொல்லாங்கு சொல்லுவா னென்னென்று லோகாயதிகன் ப்ரத்யவஸ்தாநம் பண்ணினான்; அவனாகிறான் - தேஹாதிரிக்தமா யிருப்பானொரு ஆத்மா உண்டென்றும், தர்மாதர்மங்களுண்டென்றும், பரலோகமுண்டென்றும் சொல்லுகிறவை அஸத்யம், ப்ரத்யக்ஷிக்கிற உடம்புகொண்டு அநுபவிக்கிற த்ருஷ்டாநுபவமொழிய வேறொன்றில்லை யென்னுமவன். அவர்களைக்குறித்து விஷயங்கள் அல்பாஸ்திரத்வாத்யநேக தோஷதூஷிதங்களென்று இவையெல்லாஞ் சொல்லவேண்டுவது லபித்தாலிறே, துராராதமாகையாலே லபிக்கையரிதென்கிறார்.

மூ.—பெண்டிராற் சுகங்களுய்ப்பான் பெரியதோ ரிடும்பைபூண்டு
உண்டிராக் †கிடக்கும்போது வுடலுக்கே கரைந்துநைந்து
தண்டுழாய் மாலைமார்பன் றமர்களாய்ப் பாடியாடித்
தொண்டுபூண் டமுதமுண்ணுத் தொழும்பர் சோறுகக்குமாறே. ரு.

ப-ரை.— பெண்டிரால்—மனைவியாலே, சுகங்கள்—ஸகலஸுகங்களையும், உய்ப்பான்—அநுபவிப்பதாகக் கோலி, பெரியது ஓர் இடும்பை—மிகப்பெரிதான துக்கங்களை, பூண்டு—மேற்கொண்டு, இரா—ராத்ரிகாலங்களிலே, உண்டு—புஜித்து, கிடக்கும்போது-அணையிலேசாயும்போது, உடலுக்கே கரைந்து—சரீர தாரணத்துக்கே கரைந்து, நைந்து-மநஸ்ஸு சிதிலமாய், தண்—குளிர்ந்த, துழாய்மாலை—திருத்துழாய்மாலையை, மார்பன்—திருமார்பிலேயுடையனான ஸர்வேச்வரனுடைய, தமர்களாய்—தாஸபூதராய், பாடி—ப்ரீதிக்குப் போக்குவீடாகப்பாடி, ஆடி—அதுதான் இருந்தவிடத்திலிருக்க வொட்டாமையாலே ஆடி, தொண்டுபூண்டு—சேஷவ்ருத்தியை மேற்கொண்டு, அமுதம் உண்ணு—குணாநுபவமாகிற அம்ருதத்தைபுஜியாத, தொழும்பர்—நீசர், சோறு உகக்கும் ஆறு—சோற்றை விரும்பும் வகையிருந்தபடியென்!. என்று விஸ்மிதராகிறார்.

---

$ விடக்கு - சவம். † "கிடக்கும்போது முடலுக்கே" என்றும்பாடம்.

வ்யா. பெண்டிரால்சுகங்களுய்ப்பான். இவனுடைய ஸங்கல்பவாக்யம்- அக்நியை அணைந்து விடாய்தீர நினைப்பாரைப்போலேயும், ஆடுகிறபாம்பின் நிழலிலே ஒதுங்கி க்லேசம் தீர நினைப்பாரைப்போலேயும், விஷபக்ஷணத்தைப்பண்ணி தரிக்கநினைப்பாரைப்போலேயும் து:கஸாதநத்தையிறே ஸுகஸாதநமாக ப்ரமிக்கிறது. "கொண்டபெண்டிர்" என்கிறபடியே தன்னுடைய அநந்யத்வம்தோற்ற அதுவேணும் இதுவேணுமென்று துச்சகங்களை அபேக்ஷித்து அலைக்கும் விஷயமிறே. இவனுடைய த்ரவ்யத்தளவும் போகத்தளவுமிறே இவன்பக்கலாதரம். "பெண்டிரால்" என்றது - ஜாத்யபிப்ராயமானபோது, த்ரவ்யத்தளவிலே காலத்தையும் பரிச்சேதித்து பரிக்ரஹிப்பார்கள்த்ரவ்யப்ரதாநைகளாகையாலே. இவன் நினைத்த போகரஸம் அங்கில்லை, பிறர்காணில் எளிவரவு, அத்தைத்தப்பினாலில் மேல் நரகம். இதுவாய்த்து விஷயஸ்வபாவமிருப்பது. (க) "ஆநந்தமய:" என்கிற விஷயத்தை லபித்தாப்போலேயிறே இவனுக்கொரு ஸ்த்ரீபதார்த்தம் லபித்தாலிருப்பது. "சுகங்கள்" என்கிற பஹுவசநத்தாலே-ஸர்வாலங்கரு மிவளாலே என்றிருக்கை. இவள்கால்நலத்தாலே தநமுண்டாம், பக்வையானவளாலே காமாஸம், நதநந்தரத்திலே புத்ரஸம்பத்து என்றாப்போலேயிறே இவன் அபிமாநித்திருப்பது.

"உய்ப்பான்" என்றது - இவன் இப்படி பாரித்துப்போமதொழிய அவ்விஷயத்திலநுபாவ்யமாயிருப்பதொரு ரஸமில்லை. நிஹீநவிஷயமாகையாலே நெடுநாள் சென்றாலும்இன்னது அநுபவித்தோமென்று ப்ரத்யபிஜ்ஞைபண்ணலாவதொன்றில்லை. இவனுடைய பாதிஸம்வாதமேயுள்ளது. அவர்கள் த்ரவ்யபரைகளாய் அநாதரித்தாலும் அவ்வநாதரமே ஹேதுவாக ச்ரத்தை:மிகும்இவனுக்கு. பெரியதோரிடும்பைபூண்டு. அத்தாலேகாலன்கொண்டுபோய் ஹிம்ஸை பண்ணியும் துச்சமான மஹா து:கங்களை ஏறிட்டுக்கொள்ளும். "பூண்டு" என்றது-கழுத்திலே புக்க வாயோடுபோலே தன்னால் கழற்றவொண்ணாதிருக்கை. அளவிறந்த ஸுகத்தை அநுபவிக்கவேணுமென்றுபோலி அளவிறந்த து:கத்தையாய்த்து ஏறிட்டுக்கொள்வது. ஓர் அஞ்ஜலியுண்டாக்கமாட்டாத விஷயத்தையன்றே பற்றிற்று. (உ) "ஸாஸ்லஸ்வாங்குருஷ்ட்ட" என்கிறபடியே ஸாதநவேளையே தொடங்கி ரஸிக்கும்விஷயமன்றே; "தூயவமுதைப் பருகிப்பருகி பென்மாயப்பிறவி மயர்வறுத்தேன்" என்னக்கடவதிறே. இங்கே ஸாத்யஸாதநங்களிரண்டும் து:கரூபமாயிருக்கும். உண்டிரா. இராவுண்டு. ஜீவிக்கவு மவஸரமில்லாதபடி பகலெல்லாம் கட்டித்திரிந்து அஸ்தமயவேளையிலேயாய்த்து ஜீவிப்பது. முதல் ஸ்வசரீர ரக்ஷணத்தைப் பண்ணிக்கொண்டு நின்று பின்னையிறே விஷயாநுபவம் பண்ணப்பார்ப்பது. கிடக்கும்போது அநந்தரம் ஓரிடத்திலே விழவிடுகை அபேக்ஷிதமாயிருக்கும், அப்போது சிதிலனாகையாலே விஷயங்களை அநுஸந்தித்தல் அநுபவித்தல்செய்ய க்ஷமனல்லன்.

உடலுக்கே கரைந்துநைந்து. நாளை இவற்றை ரக்ஷித்து நாமும் ஜீவித்தோமாய் விடவல்லோம் என்று சிந்தியாநிற்கும். அவதாரணத்தாலே - தேஹாதிரிக்தமாயிருப்பதொரு ஆத்மவஸ்து உண்டென்றிருக்கிறிறே அதுக்கு ஒருக்கால் கரையவேண்டுவது, சரீரஸம்பந்தத்தில் வருந்த புருஷார்த்தத்தை லபிக்கும் விரகேதோ, நரகத்தையும் கர்ப்பவாஸத்தையும் தப்பும் விரகேதோவென்று கரையவிறேயடுப்பது, அதுக்கு யோக்யதையில்லாமையாலே தேஹதாரணத்துக்கே கரையாநிற்கும். "கரைந்துநைந்து" என்றது-பகவத்குணவித்

(க) "ஆநந்தமய:" (உ) "ஸாஸ்லாங்கர்த்தும்"

தரா யிருப்பார் "நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்" என்று படுமதடங்க தேஹத்திலே படுமாய்ந்து இவன். தண்டுழாய்மாலைமார்பன் தமர்களாய்ப் பாடியாடி. ஸர்வேச்வரனை அநுபவித்து, (க) "ஜஹௌ நிர்ஹௌ நிர்" என்று களித்துச் செருக்குக்குப் போக்குவிட்டுத் திரியக்கடவ சேதநர்படுமநர்த்தமே! யென்கிறார். தண்டுழாய்மாலைமார்பன், ஸர்வேச்வரத்வஸூசகமான திருத்துழாய்மாலையாலே அலங்க்ருதனானவன். இவர்கள் பற்றின துராராதவிஷயங்கள்போலன்றியே தன்வெறுமையை முன்னிட்டு என்னைப்பற்றுமவனை ரக்ஷிக்கக்கடவனென்று தனிமாலையிட்டுக்கொண்டிறே அவனிருப்பது. அவன் ரக்ஷகனுகாதவன்றும் கிட்டுவார்க்கு அவ்வடிவும் ஒப்பனையுமே ப்ரயோஜநம் போருங்கிடீர். தமர்களாய். இவ்விஷயத்தில் இவனுக்கு ஸாத்யம் ஒன்றில்லை, ஸ்வாபாவிகஸம்பந்தத்துக்கு அநுமதிபண்ணுமித்தனையே வேண்டுவது. இவ்வாத்மாவுக்கு நிலைநின்ற ஸ்வரூபமிதிறே. அவனை, (உ) "பதிம்விச்வஸ்ய" என்றும், இவனை, (ங) "யஸ்யாஸ்மி" என்றும், (ச) "தாஸோஹம்" என்றுமிறே நிர்த்தோஷப்ரமாணங்கள் சொல்லுகிறது. தமர் - அடியார். கீழ்ச்சொன்னவை யடங்க இவன்றனே யேறிட்டுக்கொண்டவையிறே.

பாடியாடி. பகவதநுபவ ஜநிதப்ரீதிக்குப் போக்குவிடாகப்பாடி, அதுதான் இருந்தவிடத்திலிருக்க வொட்டாமையாலே ஆடி. (ரு) "காயந்திகேசித் ப்ரணமந்திகேசித் ந்ருத்யந்திகேசித்" என்று மதுவநத்திற்புக்க முதலிகள்படியாய்த் திரியக்கடவனிறேஇவன். ஒருதேசவிசேஷத்திலே சென்றாலும், (சு) "ஹாவு ஹாவு ஹாவு" என்று ப்ரீதிப்ரகர்ஷத்தாலேபாடி ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணியிறே திரிந்திருப்பது. தொண்டுபூண்டு. அடிமைபூண்டு. தனக்குவகுத்த சேஷவ்ருத்தியையேறிட்டுக் கொண்டு. "உழும்" என்று ஏறிட்டுக்கொள்ளுகை யன்றிக்கே உகந்து ஏறிட்டுக்கொண்டு.

பூண்டு. இவ்வாத்மாவுக்கு தாஸ்யமேயிறே ஆபரணம். (எ) "த்ருமசீலாலங்க்ருத:" என்றது ஆபரணமானுப்போலே. நம்பெருமாளுக்குச் சோசுந்தரபாண்டியன் தம்பிரான் பதக்கம்போலே இவனுக்கு தாஸ்யமாகிற ஆபரணம். அவனுக்கும் அது நெஞ்சிலே கிடப்பதொன்று; இவனுக்கும் இது நெஞ்சிலே கிடப்பதொன்றிறே. "இடும்பைபூண்டு" என்கிறதுபோலன்றேயிது. (அ) "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" "வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்" என்கிறதிறே இது. "பூண்டு" என்கிறசப்தம் இரண்டிடத்திலும் ஒத்திருக்க நெடுவாசிபட அர்த்தம் சொல்லுவானென்னென்னில்; அர்த்தபலத்தாலே;- அப்ராப்த விஷயத்தில் ஸேவையை, (கூ) "ஸேவாச்வவ்ருத்தி:" என்றும், ப்ராப்தவிஷயத்தில் பாரதந்த்ர்யத்தை (க0) "பாரதந்த்ர்யம்பரேபும்ஸி" என்றும், (கக) "ஸாக்ஷாந்தஸேவ்யதே" என்றும் விஷயம் பேதித்தாப்போலே இங்கும் அர்த்தபலத்தாலே பேதித்துச் சொல்லுகிறது. அமுதமுண்ணு. ஸ்வரூப ப்ராப்தமாய் நித்யாநு

(க) "அஹமந்நமஹமந்நம்" (உ) "பதிம்விச்வஸ்ய" (ங) "யஸ்யாஸ்மி" (ச) தாஸோஹம்" (ரு) "காயந்திகேசித் ப்ரணமந்திகேசித் ந்ருத்யந்திகேசித்" (சு) "ஹாவு ஹாவு ஹாவு" (எ) "த்ருமசீலாலங்க்ருத:" (அ) "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" (கூ) "ஸேவாச்வவ்ருத்தி:" (க0) "பாரதந்த்ர்யம்பரேபும்ஸி" (கக) "ஸாக்ஷாந்தஸேவ்யதே".

பாவ்யமாயிருக்குமர்த்தமாய்த்து இது. (க) "த்வதாஸ்யஸுகைகஸங்கிநாம்" என்றும்; (உ) "த்வதாஸ்யமஹாரஸஜ்ஞை:" என்றும் சொல்லக்கடவதிறே. தோழும்பர். இதி னுடைய போக்யதையையறியாதே அபோக்யமாய் அப்ராப்தமாயிருந்துள்ள க்ஷுத்ர விஷயங்களை விரும்பும் நீசர். தோழும்பர் - தண்ணியர். ப்ராப்தியில்லாமே இத்தை யிழக்கிறாரல்லர்; லபிக்கையில் நேர்த்தியுண்டாயிழக்கிறாரல்லர்; க்ஷுத்ரவிஷயங்களுக்கும் இதுக்குமுள்ள நெடுவாசிபறியும் சேதநருமாயிருக்க, தாராதமாய் அபோக்யமாயிருக்கிற விஷயத்திலே மண்டப்பண்ணிற்றிறே பாபபலம், சோறுகக்குமாறே. மண்ணில்காட்டில் சோற்றுக்கு வாசியறிந்தா ஜீவிக்கிறபடியெங்ஙனே!; நித்யமான ஆத்மவஸ்துவுக்கு பகவச்சேஷத்வமே தாரகமென்றறியாதவன், அநித்யமான தேஹத்துக்குச் சோறு தாரகமென்றறிந்து ஜீவிக்கிறானே. பித்ராதிகள் ஜீவிக்கக் காண்கிற வாஸனைகொண்டு ஜீவிக்கிறானித்தனையிறே; வாசியறியுமவனாகில் ஆத்மாவுக்கு நன்மையெண்ணானே; ஒன்றிலே விசேஷஜ்ஞாநமுண்டாகில் மற்றையதிலும் அறிவு உண்டாகாதோ. ... ... ... ரு.

அ. ஆறும்பாட்டு. மறஞ்சுவர். விஷயங்களுக்கு அல்பாஸ்திரத்வாதி தோஷங்கள் அநேகமுண்டானாலும் எங்களுடைய த்யாகத்துக்கு ஹேதுவாகமாட்டாது. ஏகவிஷயத்தில் பூர்ணாநுபவம் பெற்றிலோமேயாகிலும் விஷயங்களநேகமுண்டானபின்பு ஒன்றிலில்லாத நன்மை மற்றையதிலே கூட்டிக்கொண்டநுபவிக்கிறோமென்ன; அப்படியேயானாலும் அந்த போக்தாதான் ஸ்திரனாக வேணுமே, அவ்விஷயங்களோபாதி போக்தாவும் அஸ்திரனென்று போக்தாவினுடைய நிலைநில்லாமையைச் சொல்லுகிறார்.

மூ.—மறஞ்சுவர் மதிளெடுத்து மறுமைக்கே வெறுமைபூண்டு
புறஞ்சுவ ரோட்டைமாடம் புரளும்போ தறியமாட்டீர்
அறஞ்சுவ ராகிநின்ற வரங்கனார்க் காட்செய்யாதே
புறஞ்சுவர் கோலஞ்செய்து புட்கவ்வக் கிடக்கின்றீரே. சு.

ப-ரை.— மறம்—க்ரௌர்யமாகிற, சுவர்—சுவரை, மதிள் எடுத்து—மதிளாகவெடுத்தும், மறுமைக்கு—ஆமுஷ்மிகத்துக்கு, வெறுமை பூண்டு—தாரித்ர்யத்தை மேற்கொண்டும், புறம்சுவர்—வெளிச்சுவராயும், ஓட்டை—அஸ்திரமுமான, மாடம்—சரீரமானது, புரளும்போது—தரையில்விழும்காலத்தை, அறியமாட்டீர்—அறியமாட்டீர்களென்ன; (பின்னை செய்கிறதென்னென்னில்;) அறம் சுவர் ஆகி நின்ற—தர்மமேப்ராக்திபாகநின்ற, அரங்கனார்க்கு—கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகிற அழகியமணவாளனுக்கு, ஆள்செய்யாதே—அடிமைசெய்யாதே, புறம்சுவர்—வெளிச்சுவரானவுடம்பை, கோலம்செய்து—அலங்கரித்து, புள்—பக்ஷிகள், கவ்வ—கவ்வும்படி, கிடக்கின்றீரே—அநர்த்தப்பட்டுக் கிடக்கிறீர்களே யென்று வெறுக்கிறார்.

வ்யா. மறஞ்சுவர்மதிளெடுத்து. மறமாகிற சுவரை அரணாகவெடுத்து. க்ரௌர்ய ஸமுதாயத்தையாய்த்துத் தனக்கு அரணாக நினைத்திருப்பது. அமாநித்வாத்யாத்மகுணங்களெல்லாவற்றுக்குமாக இவன்பக்கலுள்ளது க்ரௌர்யமேயாய்த்து. மறம் - அருளின்மையும், கோபமும், † தறுகண்மையுமாம். அதாவது-'இவன் அதிக்ருத்தனாய் வர்த்தியாநின்றான்,

(க) ''த்வதாஸ்யஸுகைகஸங்கிநாம்'' (உ) ''த்வதாஸ்யமஹாரஸஜ்ஞை:'' † தறுகண்-வீரம்.

